## ஆடைச் சிறப்பிதழ்

தஞ்சாவூர்க்காரரான ராஜேந்திரன் கடந்த இருபத்து ஐந்து வருடங்களாக சினிமா உலகில் காஸ்ட்யூமராக இருக்கிறார். எம்.ஜி.ஆருக்கு உடைகள் தைத்துக் கொடுத்த எம்.ஜி. நாயுடுவிடம் உதவியாளராகத் தொடங்கி, ஷோபா, மோகன், வடிவுக்கரசி, ராதிகா என்று வலம் வந்து, இன்று விஜய்காந்த், விஜய் என்று பிசியாக இருக்கிறார்.



# 180" 91" 67"

ஐந்நூறு படங்களில் பணி புரிந்திருந்தாலும், தற்போது ராம. நாராயணன் டைரக்ஷனில் உருவாகி வரும் 'காளிகாம்பாள்' படத்தில் ராஜேந்திரனுக்கு ரொம்ப வித்தியாசமான அனுபவம். ஆம்! யானைக்கு பேண்ட், சட்டை தைத்திருக்கிறார்!

"ஏற்கெனவே, ராமநாராயணனின் 'துர்கா' படத்தின்போது, குரங்கு, நாய் இரண்டுக்கும் டிராயர், சட்டை தைத்திருக்கிறேன். ஆனால் ராம. நாராயணன், யானைக்கு பேண்ட், சட்டை தைக்க வேண்டும் என்றபோது, மலைப்பாக இருந்தது.

"தேவரால் வளர்க்கப்பட்ட 'வள்ளி' என்ற யானை இப்போது, திருத்தணி கோவிலில் இருக்கிறது. அந்த யானைதான் 'காளிகாம்பாள்' படத்தில் நடிக்கிறது. யானைக்கு உடை தைக்க அளவு எடுப்பதற்காக நானும், என் உதவியாளர்கள் இரண்டு பேருமாக திருத்தணி போனோம். யானைப்பாகன் உடனிருக்க, யானைக்கு அளவு எடுத்ததே வித்தியாசமான

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
புதிய ஈ மெயில் முகவரிகள் : எடிடோரியல் : kalki@kalkiweekly.com
சந்தா : subscription@kalkiweekly.com பிற தகவல்கள் : info@kalkiweekly.com

அனுபவம்" என்றார் ராஜேந்திரன்.

யானை மீது ஒருவர் ஏறிக் கொள்ள, கீழே ஒருபுறத்திலிருந்து, வீடு கட்டும்போது மேஸ்திரிகள் பயன்படுத்துகிற நீண்ட டேப்பைப் பாகனிடம் கொடுக்க, அதை அவர் மறுபக்கம் நிற்கும் இன்னொருவரிடம் கொடுக்க, இன்னொருவர், யானையின் வயிற்றுக்குக் கீழே நின்று, டேப் முனைகளைச் சேர்த்து அளவு எடுத்தாராம். அதேபோலவே, கழுத்து அளவு, முன்னங்கால், பின்னங்கால் உயரம், கால் சுற்றளவு என்று எல்லா அளவுகளையும் எடுத்திருக்கிறார்.


• ராஜேந்திரன்

யானையின் இடுப்பு: 180 அங்குலம்
கழுத்து: 91 அங்குலம்
தொடைப் பகுதி 67 அங்குலம்
கால் 41 அங்குலம்

நார்மல் பேண்ட் துணியிலேயே சற்று தடிமனான துணியாக சட்டைக்கும், பேண்ட்டுக்குமாய் நூறு மீட்டர் துணி வாங்கப்பட்டதாம்!

"யானையின் அளவுக்கு ஏற்ப துணியை வெட்டித் தைப்பதற்கு நாலு தையல் மிஷின்களில்! மூன்று பகல், இரண்டு இரவுகள் ஆயின. தைத்து முடித்தபின், இஸ்திரி போட்டு முடிக்கவே அரை நாளாகிவிட்டது.

"பேண்ட், சட்டை இரண்டிலுமே நான் பட்டனே பயன்படுத்தவில்லை. அதற்குப் பதிலாக, அழுத்தினால் ஒட்டிக் கொள்ளும் படியான வெல்குரோம்தான் உபயோகித்தேன்.

"நான் தைத்த உடையை அணிந்து கொண்டு யானை, நடித்தபோது, டர்... என்று சத்தம். தையல் பிரிந்து, வெல்குரோம் வந்து விட்டது. அதை எடுத்துக் கொண்டு, உள்ளூர் டைலரிடம் சரி செய்யப் போனபோது, டைலர் கடையில் வேடிக்கைப் பார்க்க ஏராளமான மக்கள் கூடிவிட்டனர்" என்றார்.

பேண்ட், சட்டை தவிர யானைக்கு ஒரு துணி பெல்ட்டும், தொப்பியும், பிரம்மாண்டமான கூலிங்கிளாஸும் தயாரித்திருக்கிறார். யானையின் இரண்டு கண்களுக்கும் இடையில் இருபத்து நாலு அங்குல இடைவெளி. அப்படியென்றால், மூக்குக் கண்ணாடி எவ்வளவு பெரிசாக இருந்திருக்கும்? அது உங்கள் கற்பனைக்கு...

யானைக்கு பேண்ட் சட்டை தைக்க மொத்த செலவு எவ்வளவு தெரியுமா?

இருபதாயிரம் ரூபாய்!

சந்திப்பு: எஸ். சந்திரமௌலி



## தாங்க்யூ லைலா!

கறுப்பு நிற உடை அணிந்தால், நிச்சயமாக லைட் மேக்கப் போடுங்கள். கறுப்புத் துணியில் வெள்ளை நிற பூக்கள் எடுப்பாக இருக்கும். ப்ளெயின் கறுப்பு நிற உடை என்றால், சிவப்பு நிற பாந்தினி துப்பட்டா அழகு சேர்க்கும். ஒரு விஷயம்: கறுப்பு அழகுதான்! ஆனால் வெயிலில் அலைவதாக இருந்தால், கறுப்பு உடை வேண்டவே வேண்டாம். சூரியன் கொளுத்தி எடுத்து விடும்.

சுரிதார், ஸ்கர்ட் போன்ற உடைகளைத் தைக்க துணி வாங்கப் போகிறீர்களா? ஒரு நிமிஷம்!

36, 44, 48, 56, 60 செண்டிமீட்டர்களில் விதவிதமான அகலங்களில் துணிகள் கிடைக்கின்றன என்பதால், அளந்து பார்த்தே வாங்குங்கள்!

# ஷாப்பிங் சந்தோஷம்!

'நினைச்சது நினைச்சபடி பட்டு கிடைச்சதடி' என்று குரலெடுத்துப் பாடாமல், முகம் முழுக்க தங்க ஜரிகை போன்ற சந்தோஷம் பளபளக்க, பட்டுப் புடைவைகளை வாங்கிக் கொண்டிருந்த திருமதிகள் சிலரை மடக்கி ஷாப்பிங் அனுபவம் கேட்டோம்.

**'போத்தீஸ்' பட்டுப் பிரிவில் புஷ்பா ஸ்வாமிநாதன் :**

கல்யாணத்துக்குப்புறம் கனடாவில் செட்டிலாகி விட்டேன். ஆனால் அப்பாவோடு தீபாவளி கொண்டாட ஒவ்வொரு வருஷமும் சென்னைக்கு வந்துருவோம். இரண்டு வருஷமா போத்தீஸ்லேதான் என்னோட ஜவுளி ஷாப்பிங். இந்த தீபாவளிக்கு கணவர் ரூபிநெக்லஸ் வாங்கிக் கொடுத்தார். அதற்கு மேச்சிங்காக பட்டுப்புடைவை எடுக்க போத்தீஸ் வந்தேன். என்னோட பட்ஜெட் ஏழாயிரம். மெரூன் வித் க்ரீம் பார்டரில், செக்டு ஜரிகைபுட்டாவோடு அதே விலையில் கிடைச்சதுலே ரொம்ப சந்தோஷம். கனடாவில் நாங்க வசிக்கிற போண்ட் மெக்மரியில் இந்துக்கள் அதிகம். தீபாவளி, ஜென்மாஷ்டமி, ஹோலின்னு இந்துப் பண்டிகைகள் எதுவாயிருந்தாலும் அங்கே பட்டுதான் உடுத்துவோம். கனடா போனதும் இந்த புடைவை பத்தின புகழ் எங்க அவென்யூ முழுக்கப் பரவிடும். கொலு பார்க்க வர மாதிரி புடைவையைப் பார்க்க வருவாங்க. அவங்களுக்கு 'இது போத்தீஸ் பட்டு'ன்னு பெருமையாகக் காண்பிப்பேன்.



* புஷ்பா

**'சென்னை சில்க்ஸ்' பட்டுப் பிரிவில்... எம்.வி.பாட் :**

ஆசியாவிலேயே மிகப் பிரம்மாண்டமான ஜவுளி மாளிகையின்னு விளம்பரம் பண்றாங்க. நேர்லே வந்து பார்த்தப்புறம் தான் அது நிஜம்ன்னு தெரியுது. இங்கே ஆயிரம் ரூபாயிலிருந்து ஐம்பதாயிரம் வரைக்கும் பட்டுப் புடைவைகள் இருக்கு. நிறங்களும் வெரைட்டியும் தடுமாற வைக்குது. தரம் பற்றிய கவலையில்லாமல் வாங்கலாம். ஏன்னா, இவங்க சொந்தத் தறியிலே கவனமா தயாரிக்கிறாங்க. எட்டாயிரம் ரூபாயில் ஒரு புடைவை எடுக்கலாம்ன்னு வந்தோம். டிசைன்ஸ் பிடிச்சிருந்ததாலே, இரண்டாயிரம் வீதம் நான்கு புடைவை எடுத்துட்டேன்.



* எம்.வி.பாட்

**'சாரதாஸ்' ஷோரூமில் சுமனா பாலிகா :**

நான் மங்களூரிலிருந்து பட்டுப் புடைவை எடுக்கறதுக்காகவே வந்திருக்கேன். வழக்கமா தசராவுக்கே சென்னை வந்து பட்டு எடுக்கிறது வழக்கம். இந்த முறை கர்நாடகாலே தசராவை எளிமையா கொண்டாடணும்னு சொல்லிட்டாங்க. அதனாலே தீபாவளிக்கு பட்டு எடுக்கிறேன். என்னோட மகன், மகள் கல்யாணத்துக்குக் கூட சாரதாஸ்தான் என்னோட சாய்ஸ். எப்போ பட்டு எடுத்தாலும், என்னோட தோழி சீதாதான் வழி காட்டுவா. அவளோட ரசனை ரொம்ப நல்லா இருக்கும். இப்போ கூட ஒரு மணி நேரத்துலே பர்சேஸ் முடிச்சிட்டோம். இங்கே அவ்ளோ ரகம். நியாயமான விலை. கைராசியான கடை!



* சுமனா

- ஸ்ரீசக்கரம்

படங்கள் : டிஜிட்டல் சண்முகம்



# அவரா அடை!

எங்க ரவிக்கை உனக்கு சூப்பரா இருக்கு!

பெட்டியிலே வைச்சிருந்த என் பழைய புடைவையைக் காணோமே!

நாய் கடிச்சுக் குதறினது எவ்வளவு நல்லதா போச்சு!

அதுதான் இது!

கற்பனை, படங்கள் : நடனம்

அம்மா, உனக்குப்
போட்டியா
அப்பாவும் ஜன்னல்
பனியன்
போட்டிருக்காரு!



# அரைமணி அதிரடி!

**எ**ழும்பூர் ஏரியாவில், இரவு நேரத்தில் ஆம்னி பஸ்களுக்கு ஆள் பிடிக்கிறாற்போல, சென்னை, ரங்கநாதன் தெருவில், வாண்டுப் பையன்கள் "அக்கா! அரைமணியில் சுரிதார் தைச்சு வாங்கிடலாம் அக்கா!" என்று ஆள் பிடிக்கிற காட்சியைக் காணலாம்.

அரை மணி நேரத்தில் சுரிதார் செட் தைத்துக் கொடுக்கும் டைலர்கள் சுமார் நூறு பேர் ரங்கநாதன் தெருவில் இருக்கிறார்கள். குறிப்பாக ஒரே ஷாப்பிங் காம்ப்ளெக்ஸில் மட்டும் இருபது 'உடனடி' டைலர்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! 'ஸ்ரீ டைலர்ஸ்'





• அருண்

கடையின் மாஸ்டர் டைலரான அருணுடன் மினி பேட்டி:

**"அரை மணியில் சுரிதார் தைக்கிற பிசினஸ் எப்போது ஆரம்பித்தது?"**

"ஐந்தாறு வருடங்களாகத்தான். புறநகர் பகுதிகளிலிருந்து வருகிறவர்கள் துணி வாங்கி, உடனடியாகத் தைத்து வாங்கிக் கொண்டு போக அதிக ஆர்வம் காட்டியதன் காரணமாக ஆரம்பமான இந்த பிசினஸ், இப்போது, வெகு பிரபலமாகிவிட்டது. கஸ்டமர்கள் துணி வாங்கிக் கொண்டு வந்து, உங்களிடம் கொடுத்துவிட்டு, மற்ற பர்ச்சேஸ்களை முடித்துவிட்டு வருவதற்குள் தைத்து முடித்துவிடுவோம்."

**"ரெடிமேட் சுரிதார்கள் கிடைக்கிறபோது, இப்படி அவசரமாய்த் தைத்து வாங்குவது ஏன்?"**

"ரெடிமேட்களில், பொதுவான சைஸ்கள் தான் உண்டு. அவரவர்க்கேற்ப ஃபிட்டிங் கில் கிடைக்காது. எங்கள் கஸ்டமர்களில் மெஜாரிட்டி கல்லூரி மாணவிகள்தான்!"

**"நிஜமாய்ச் சொல்லுங்கள். உண்மையில் அரை மணி நேரத்தில், ஒரு சுரிதார் செட் தைத்துத் தர முடியுமா?"**

"ஓ! தாராளமாக! துணியை வெட்டுவதற்கு ஐந்து நிமிடம். தைப்பதற்கு அதிக பட்சம் இருபது நிமிடம். ஆக இருபத்தைந்து நிமிடமே போதுமானது. இரண்டு டைலர்கள் தைக்கிற பட்சத்தில் இன்னும் சீக்கிரமே தைத்துவிடலாம்."

**"இப்படி அவசர அடி அடித்தால் ஃபினிஷிங் நன்றாக இருக்குமா?"**

"கொஞ்சம் வித்தியாசம் இருக்கலாம். ஆனால், இதுவும் நன்றாகவே இருக்கும். நன்றாக உழைக்கும்."

பேட்டி : பாரதி

படங்கள் : ஸ்ரீஹரி

**ஆடைச் சிறப்பிதழ்**



மனத்தில் நியாயம் என்று பட்டதைப் பேசும், விரல் விட்டு எண்ணக்கூடிய அரசியல்வாதிகளில் பா.ஜ.க சட்டமன்றத் தலைவர் கே.என். லட்சுமணனும் ஒருவர். (அ.இ.அ.தி.மு.க.வுடன்) நெருங்கிப் போவதற்கு 'சிக்னல்' கிடைத்து விட்டது என்று ஓராண்டிற்கு முன்னரே சட்டசபையில் சொன்னவர். இந்த ஒரு வருடத்தில் தமிழக அரசியல் காட்சிகள் மாறி வரும் நிலையிலும், பரபரப்பாக சட்டமன்றக் கூட்டத் தொடர் நடந்து வருகிற நிலையிலும் லட்சுமணனைச் சந்தித்தோம். "ஆளுங்கட்சியை எதற்கெடுத்தாலும் எதிர்த்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. அதேபோல் எல்லாவற்றையும் ஆதரிக்க வேண்டிய அவசியமும் இல்லை; எதிர்க்க வேண்டியதை எதிர்த்து, ஆதரிக்க வேண்டியதை ஆதரித்து, திருத்த வேண்டியதைத் திருத்த வேண்டும்" என்கிறார் லட்சுமணன்.

"உதாரணமாக மதமாற்றத் தடைச் சட்ட மசோதாவை நாங்கள் கண்டிப்பாக ஆதரிப்போம். இந்த விஷயத்தில் முதல்வரின் துணிச்சலைப் பாராட்டுகிறோம். அதேபோல் அரசுக் கல்லூரிகளை பல்கலைக் கழகத்துடன் இணைக்கும் சட்டத்தையும் ஆதரிப்போம்.

**உங்கள் கட்சிக்கும் தி.மு.க.வுக்கும் சட்டமன்ற நடவடிக்கைகளைப் பொறுத்தமட்டில் ஒன்றுபட்ட செயலாக்கம் இருக்காது என்று சொல்லலாமா?**

"அப்படியெல்லாம் சொல்ல முடியாது. 'மேயர்' விவகாரத்தில் 'ஒருவருக்கு ஒரு பதவி' சட்டத்தை முன் தேதியிட்டு அறிமுகப்படுத்தியதை தி.மு.க.வுடன் சேர்ந்து நாங்கள் எதிர்த்தோம். இறுதியில் நீதிமன்றமே அந்தச் சட்டம் செல்லாது என்று சொல்லிவிட்டது. அது போல, ஜெயில் கைதிகளைக் கோர்ட்டுக்கு கொண்டு வராமல் ஜெயிலிலேயே வைத்து 'வீடியோ கான்பரன்ஸ்' மூலம் விசாரிக்க வழிவகை செய்யும் சட்டத்தை நாங்கள் ஆதரித்தோம். வேறு பல கட்சிகள் எதிர்த்தன. எனவே 'எதிர்ப்பு - ஆதரவு' என்பதெல்லாம் பிரச்னையைப் பொறுத்ததுதான்.



# "ஜெ. எங்களுடன் வருவார் என்று எதிர்பார்க்கவில்லை"

**– கே.என். லட்சுமணன்**

**இந்த அரசு சமுதாயத்தின் சகல தரப்பையும் அதிருப்திக்கு உள்ளாக்கியிருக்கிறது என்பது பரவலான குற்றச்சாட்டு. உங்கள் கட்சியின் நிலை என்ன?**

ரேஷன் அரிசி விலை, பஸ் கட்டணம், மின் கட்டணம் ஆகியவற்றை ஏற்றி, சாதாரண மக்களைத் திண்டாட வைத்திருக்கிறது அ.தி.மு.க அரசு என்பது வாஸ்தவம்தான். அரசு ஊழியர்களுக்கு விலைவாசி கிராக்கிப்படி கொடுப்பதை நிறுத்தக்கூடாது. அரசாங்க செலவினங்களில் சிக்கனம் செய்ய வேண்டுமென்றால், ஆட்சியில் உள்ளோர்தான் ரோல் மாடல்களாக இருக்க வேண்டும். முக்கியமாக, முதல்வர் தமது

செயல்பாடுகளில் சிக்கனத்தைக் கொண்டு வந்தால் அது கீழ் மட்டம் வரை செல்லும்.

**'சிக்னல் கிடைத்து விட்டது' என்று நீங்கள் சொல்லியபிறகு, இப்போதைய நிலையில் அ.இ.அ.தி.மு.க.வும் - பா.ஜ.க.வும் நெருங்கி வர்துவிட்டது என்று கருதுகிறீர்களா? நாடு முழுதும் பா.ஜ.க தேர்தலில் தோற்று வரும் நிலையில் ஜெ. உங்களுடன் கூட்டணி வைத்துக் கொள்வாரா?**

சிக்னல் கிடைத்துவிட்டது என்று நான் சொன்னது உண்மைதான். ஆனால் அதன் பின் நடந்த நிகழ்ச்சிகள், இரு கட்சிகளின் நெருக்கத்துக்கு அனுசரணையாகவே நடந்து வந்திருக்கின்றன என்பது எனக்கும் ஆச்சர்யமாக இருக்கிறது. குறிப்பாக 'பொடா' சட்டத்தை ஆதரித்து, கோத்ரா சம்பவத்தில் இந்துக்களுக்கு ஆதரவாக கருத்துச் சொன்னது, அன்னதானம், மதமாற்றுத் தடைச் சட்டம் என்று, எங்கள் நிலைக்கு ஆதரவாகவே ஜெ. எடுத்து வந்திருக்கிறார். இன்னமும் சொல்லப் போனால் நாட்டுக்கு எது வேண்டுமென்று பா.ஜ.க நினைக்கிறதோ, அதை ஜெ. செய்கிறார். ஆனால், மெஜாரிட்டி அரசை நடத்தி வருவதாலும், தமக்கே உரிய குணம் காரணமாகவும் எதை வேண்டுமானாலும் பேசுவார் அவர். பிரதமர் உட்பட பலரைத் தாக்குகிறார். தேர்தல் சமயத்தில் எப்படி கூட்டணி உருவாகும் என்று இப்போது சொல்ல முடியாது. ஆனால் ஜெ. எங்களுடன் வருவார் என்று நாங்கள் எதிர்பார்க்கவில்லை.

**பா.ஜ.க.வுடன் அ.தி.மு.க நெருங்கி வருவதற்கான அவசியம் என்ன?**

இதை இரு கட்சிகளுக்கிடையில் உள்ள உறவாகக் கருதக் கூடாது. மத்திய - மாநில அரசுகள் உறவு சுமூகமாக இருக்க வேண்டும் என்ற அடிப்படையில்தான் ஜெ. செயல்படுவதாக நான் நினைக்கிறேன்.

சந்திப்பு: ப்ரியன்
படம்: ராஜன்

---

# இந்தியில் பேச அஞ்சலில் பயிற்சி

'பாருக்குள்ளே நல்ல நாடு எங்கள் பாரத நாடு'

என்று கூறினார் பாரதியார். இதையே முகம்மத் இக்பால் என்ற கவிஞர்.

"ஸாரே ஜஹாங்சே அச்சா, இந்துஸ்தான் ஹமாரா'' என்றார். இங்கு பாரதியார் இக்பாலையோ அல்லது இக்பால் பாரதியாரையோ மொழி பெயர்க்கவில்லை. இருவரும் தனித்தனியே, சுதந்திரமாக தன் கருத்துக்களை வெளியிட்டனர். இருப்பினும் கருத்துக்கள் எப்படி ஒற்றுமையாக இருக்கின்றன! இதுபோன்ற பல கருத்துக்கள், பல மொழிக் கவிஞர்களின் இதயத்தில் ஒன்று போல் தோன்றி உள்ளன.

தெய்வப்புலவர் திருவள்ளுவரின் திருக்குறளில் உள்ள பல கருத்துக்கள், இந்தியின் சந்த் கவியான கபீரின் செய்யுள்களில் காணப்படுகின்றன. உதாரணமாக,

'மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம் பழித்தது ஒழுத்து விடின்'

என்ற கருத்தை கபீர் தனது "தோஹா" எனப்படும் இருவரிகள் கொண்ட செய்யுளில்

'தலையை மழித்து பயனில்லை
மனதை மழி (தீய எண்ணங்களை நீக்கு)

என்று கூறி புரிய வைத்துள்ளார். இதே போல் ஔவையாரின் கருத்துக்களும், புறநானூற்றுப் பாடல்களில் கருத்துக்களும் கொண்ட பல கவிதைகள் இந்தி மொழியில் உள்ளன. இவற்றை புரிந்து கொண்டுவிட்டால் வடக்கு – தெற்கு, தமிழ் – இந்தி என்ற வேறுபாட்டு உணர்வுகள் மறைந்துவிடும். ஆராய்ந்து பார்த்தால் தமிழில் உள்ள பல கருத்துக்களும், வழக்கங்களும் இந்தியிலும் உள்ளன. தமிழில் உள்ள க,ச,ட,த,ப என்ற வரிசையில் தான் இந்தி எழுத்துக்கள் அமைந்துள்ளன. இன்னும் சொல்லப்போனால், தமிழ் கற்ற எவரும் மிக சுலபமாக இந்தி மொழியை கற்க முடியும். இந்த ரகசியம் தெரியாமல் நாம் பல நற்பயன்களை இழந்து விடுகிறோம்.

நல்ல அறிவும், திறமையும், இருந்தும் கூட, இந்தி மொழியில் பேசத் தெரியாததால் (பேச இதுவரை முயற்சி எடுக்காததால்) நம்மவர்கள் பல அரிய வாய்ப்புகளை நழுவ விட்டுள்ளனர். தவிர தமிழ் நாட்டைக் கடந்து சென்றாலே இந்தி மொழியில் பேசும் நிர்பந்தம் ஏற்பட்டு விடுகிறது. ஒரு ஹோட்டலுக்கு செல்வதாக இருந்தாலோ, Train ticket பதிவு செய்ய வேண்டுமானாலோ எதுவாக இருந்தாலும் இந்தியில் பேசும்படியாக உள்ளது. இந்தி தெரியாத காரணத்தால் ஒரு பொருளை பேரம் பேசி வாங்குவதோ, மற்றவர்கள் பேசுவதை புரிந்து கொள்ளவோ முடியாமல் போகிறது. பல நேரங்களில் ஒன்றுக்கு இரண்டாக செலவழிக்கும் நிர்பந்தம் ஏற்பட்டுவிடுகிறது.

இதை உணர்ந்த, பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்கப் பயிற்சி மையம் (State Bank of India Officers Association Institute, Chennai) எல்லோருக்கும் உதவும் நோக்கில் தபால்/ (Post) மூலம் பேச்சு மொழி இந்தி பயிற்சி அளித்து வருகிறது.

'Diploma in Conversational Hindi' என்று அழைக்கப்படும் இப்பயிற்சி அஞ்சல் வழியில் நடத்தப்படுவதால் எந்த இடத்திலிருந்தும் இந்தியில் பேசக் கற்றுக் கொள்ளலாம். அதாவது பயிற்சியில் சேருபவர்களின் விலாசத்திற்கு ஒவ்வொரு மாதமும் பாடங்கள் கூரியர் மூலம் அனுப்பப்படும். இப்பாடத்தைத் தவிர பேச்சு மொழி சம்பந்தப்பட்ட புத்தகங்களும் மற்றும் தமிழ் மூலம் பயிலுபவர்களுக்குப் "பேச்சு மொழி இந்தி சொற்களஞ்சியம்'' என்ற புத்தகமும் ஆங்கிலம் மூலம் கற்பவர்களுக்கு 'Conversational Word Finder' என்ற புத்தகமும் வழங்கப்படுகிறது. இதைத் தவிர மாதா மாதம் நடக்கும் நேர்முக வகுப்புகளில் பேச பயிற்சி அளிக்கப்படுகின்றது.

நேர்முக வகுப்புகள் மாதம் ஒருமுறை ஞாயிற்றுக் கிழமைகளில் (மதிய உணவுடன்) நடத்தப்படுகிறது. நேர்முக வகுப்புகளுக்கு வர முடியாதவர்களுக்கு உதவியாக Resource Centres (மொழிவள மேம்பாட்டு மையங்கள்) திருச்சி, கோவை, மதுரை, தில்லி, ஐதராபாத், மும்பை போன்ற பல இடங்களில் அமைக்

கப்பட்டுள்ளன.

பயிற்சி காலம்: 6 மாதம்

பயிற்சி கட்டணம் : ரூ. 500/- மட்டுமே (தேர்வு, நேர்முகப் பயிற்சிக் கட்டணம் உட்பட)

மொழி ஆர்வம் உடைய எவரும் இந்தப் பயிற்சியில் சேரலாம். இந்தி மொழி ஆரம்பம் முதல் கற்பிக்கப்படுவதால் அடிப்படை கல்வித் தகுதி, வயது வரம்பு எதுவும் தேவை யில்லை. (பள்ளி சிறுவர்கள் முதல் ரிடையர் ஆகி வீட்டில் இருப்பவர் வரை ஆர்வ




• 13.9.2002 அன்று நடந்த பட்டமளிப்பு விழா (L- R) Dr.S. விஜயா, பாடத்திட்ட இயக்குநர், Dr. S. சுப்பிரமணியன், Sr. Faculty, திரு. K. பார்த்தசாரதி, தலைவர், திரு அம்பலவ நடராசன், திரு. S.C. தாஸ், பொதுமேலாளர்SBI., Dr.N. மகாலிங்கம், முக்கிய விருந்தினர், திரு. M. தர்மராஜன், நிர்வாக இயக்குநர், திரு J. சிவசுப்ரமணியன், இயக்குநர் திரு. S. சுப்பையா, நிதி இயக்குநர், திரு. ரிஷபதாஸ் (பேசுபவர்) இயக்குநர்.

முடைய அனைவரும் சேரலாம்). இப்பயிற்சி தமிழ் மற்றும் ஆங்கிலம் மூலம் நடத்தப் படுகிறது.

பயிற்சியில் தேறியவர்களுக்கு வருடா வருடம் நடக்கும் பட்டமளிப்பு விழாவில் 'Diploma in Conversational Hindi' சான்றிதழ் கள் வழங்கப்படுகின்றன. இப்பட்டமளிப்பு விழாவில் இதுவரை ஆற்காடு இளவரசர், முன்னாள் பிரதமர் சந்திரசேகர், மறைந்த பாரத ரத்னா சி.சுப்ரமணியம், டாக்டர் கிரண்பேடி I.P.S, பாரத ஸ்டேட் வங்கியின் தலைமைப் பொது மேலாளர் திரு. R.C. ஷர்மா, அருட்செல்வர் Dr. N. மஹாலிங்கம் போன்றவர்கள் முக்கிய விருந்தினராக உரை நிகழ்த்தியுள்ளனர்.

ஜனவரி 2003ல் துவங்கவிருக்கும் பயிற்சி யில் சேர விரும்புபவர்கள் ரூ. 100க் கான டிமாண்ட் டிராப்ட் SBIOA Institute, Chennai என்ற பெயரில் எடுத்து, சுயவிலாசமிட்ட, தபால் தலையுடன் (Rs.6) கூடிய உறையுடன் கீழ்கண்ட முகவரிக்கு எழுதவும். உறையின் மேல் English Medium / Tamil Medium என்று பயிற்சி மொழியைக் குறிப்பிடவும். இந்த ரூ. 100/- பயிற்சிக் கட்டணத்திலிருந்துக் கழித்துக் கொள்ளப்படும்.

**ஒலிநாடாக்கள்:** அகர உச்சரிப்பிலிருந்து பலவகை சூழ்நிலைகளில் பேசும் பயிற்சி களைக் கொண்ட இரட்டை ஒலி நாடாக்கள் (Twin Cassettes) வெளியிடப்பட்டுள்ளன. இவற்றுடன் வழங்கப்படும் துணை நூலை படித்த வண்ணம், ஒலி நாடாக்களை கேட் டால் மிக விரைவில் மொழியைக் கற்றுக் கொள்ளலாம். இந்த ஒலி நாடாக்களை பெற விரும்புபவர்கள் ரூ. 100க்கான வரைவோலை தனியாக அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்.

The Executive Director,
SBIOA Institute,
229, N.S.C. Bose Road,
P.B. No: 1279, Chennai - 600 001.
Ph: No: 5340226

# மாட்டியதும் அழகுதான்!

தலைப்புகளையெல்லாம் ஹேங்கரில் மாட்டியுள்ளீர்களே; அந்த அழகு நிஜமாகவே வித்தியாசமாயிருந்தது.
நெய்வேலி, கு.ஸ்ரீகாந்த்

உவர் நீரை, குடிநீராக மாற்றி மிகக் குறைந்த விலைக்குத் தரும் 'டீமின்' செயல்பாடு பாராட்டுக்குரியது'
ஸ்ரீரங்கம், எஸ்.கௌரி லக்ஷ்மி




நாம் செய்யும் நல்ல செயல்களுக்குக் கிடைக்க வேண்டிய 'அங்கீகாரம்' நாம் எதிர்பார்க்கும் விதத்தில் கிடைக்காவிட்டாலும், ஏதாவது ரூபத்தில் நமக்குக் கிடைக்கும் என்ற உண்மையை உணர வைத்த அனுஷா பாராட்டுக்குரியவர்.
திருவாரூர், எஸ்.பாலச்சந்தர்

மதமாற்றத் தடைச் சட்டத்தைப் பற்றிய மணியன் - எஸ்றாவின் காரசாரமான விவாதம் சூடாகவும் அர்த்தமுள்ளதாகவும் இருந்தது. என்றாலும் உலகத்தார் எல்லோரும் கிறிஸ்துவரே என்ற எஸ்றாவின் கருத்து ஏற்புடையதல்ல.
சென்னை, கள்ளி.சுப்பிரமணியன்

சபாநாயகரின் பேட்டியில் வரும் 'வண்ணத்தாமரை கண்டு' என்ற கழுகு மலைக் காவடிச் சிந்தை இயற்றியவர் சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார்.
கீழ்நத்தம், தி.சு. பாலசுப்பிரமணியன்

'கிருஷ்ணாவை நோவதா? வாஜ்பாயை நோவதா?' என்ற தலையங்கத்தில் உள்ள ஒவ்வொரு வரியும் இன்றைய தமிழனின், தமிழக மக்களின் உள் மனவேதனைகளின் வெளிப்பாடாக அமைந்திருந்தது. அதே நேரத்தில், குற்றம் செய்தவனை விட, குற்றம் செய்யத் தூண்டுபவனுக்குத்தான் தண்டனை அதிகம் என்பதுபோல, உச்ச நீதிமன்றத் தீர்ப்பை மதிக்காத கிருஷ்ணாவைவிட, அதைக் கண்டும் காணாமல் வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருக்கும் மத்திய அரசுதான் குற்றவாளிக் கூண்டில் இப்போது நிற்கிறது என்பது உண்மை!
திருவாரூர், ஆர்.ராமசுப்பு

வசமா மாட்டிக்கிட்டேன்னு வி.ஐ.பி.கள் மூழித்த அனுபவங்கள், படு சிரிப்பும் சுவாரஸ்யமுமாய் இருந்தன.
ஆறுமுகநேரி, எம்.செல்வன்

"பல பிரச்னைகளிலும் தி.மு.க., அ.தி.மு.க. இரண்டுமே மக்களை ஏமாற்றியே வருகின்றன" என்று, திருமாவளவன் கூறியிருப்பது, மறுக்க முடியாத உண்மை.
கும்பகோணம், புலவர் எஸ்.கே.மூர்த்தி

'தனி நபர் விருப்பு வெறுப்புகளும் அரசியல் நோக்கும்தான், காவிரிப் பிரச்னையின் போக்கை நிர்ணயித்து வருகின்றன' என்ற தலையங்க வரிகள் நூற்றுக்கு நூறு உண்மை. இதன் காரணமாகத்தான் காவிரிப் பிரச்னைக்குத் தீர்வு ஏற்படாமல் இருக்கிறது. அது மட்டுமல்ல, அதையொட்டி பல புதிய பிரச்னைகளும் தோன்றுகின்றன.
மதுரை, என்.பாலகிருஷ்ணன்

## வட்ட மேஜை

சபாநாயகர் காளிமுத்து சட்டசபைக்கு மட்டுமல்ல இலக்கிய மன்றத்திற்கும் சபாநாயகராக இருக்க முழுத்தகுதி பெற்றவர். தமிழின் இனிமையை அவரது மொழியில் கேட்டு மிகவும் ரசிக்கலாம். கட்சி வர்ணம் பாராமல் நோக்கினால் எல்லோரும் பாராட்டி மகிழலாம்.
லால்குடி, இராஜேந்திரன்

# ஜெயலலிதா மதம் மாறுவாரா...?

'மத மாற்றத் தடை சட்டத்துக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் விதமாக கிறிஸ்துவ மிஷனரி பள்ளிகளை, காலவரையரையின்றி மூடுவோம்' என்கின்றனர் கிறிஸ்துவ அமைப்பினர்.

பள்ளிகளை மூட தடை கோரி, பி.ஜே.பியின் சட்டப் பிரிவு நீதிமன்றத்தில் மனு செய்யத் திட்டமிட, முந்திக்கொண்டு அம் மனுவுக்கே தடை கோருகிறார் ஒரு கிறிஸ்துவப் பாதிரியார்!

கட்டாயப்படுத்தியும் ஆசை காட்டியும் இந்துக்களை மதம் மாற்றுவது பரவலாக நடந்துதான் வருகிறது. இந்த ஆரோக்கியமற்ற போக்கைத் தடை செய்யவே மதமாற்றத் தடை சட்டம் கொண்டுவரப் பட்டுள்ளது.

இதற்கிடையே இந்தியாவெங்கும் தலித்களுக்கெதிராக ஜாதி இந்துக்கள் இழைக்கும் கொடுமை தொடர்கிறது. ஹரியானாவில், செத்த மாட்டின் தோலை உரித்த தலித்துகள் துன்புறுத்திக் கொல்லப்பட்டிருக்கிறார்கள். இக் கொடூரத்தை இழைத்தவர்கள், சட்டத்தின் பிடிக்குள் சிக்காமல் தப்புகிறார்கள்.

தமிழ்நாட்டில் கூத்திரம்பாக்கத்தில் கோயில்

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா
- பாரதியார்.

2002 நவம்பர் 3
சித்ரபானு ஐப்பசி 17
மலர் : 61
இதழ் : 14




ஊர்வலம் தங்கள் வீதி வழியேயும் செல்ல வேண்டும் என தலித்துகள் வைத்த கோரிக்கையைப் பிற சமூகத்தினர் ஏற்க மறுக்கின்றனர். காவல் துறையும் கலெக்டரும் இவ் விஷயத்தில் ஏதும் செய்பவியலாது கைகட்டி நிற்கின்றனர்.

தென்மாவட்ட கிராமங்கள் பலவற்றில் இன்னமும் டீக் கடைகளிலும் ஓட்டல்களிலும் இரட்டைக் குவளை முறை புழக்கத்திலிருக்கிறது.

ஜாதி ஹிந்துக்கள், தாழ்த்தப்பட்ட இனத்தவரை ஏற்கவும் அரவணைத்துச் செல்லவும் தயாராயில்லாதவரை மதமாற்றங்கள் நிகழவே செய்யும். எந்த சட்டத்தைக் கொண்டும் அம் மதமாற்றங்களை நிறுத்தவோ தடை செய்யவோ முடியாது. கட்டாயப்படுத்தி அல்லது ஆசை காட்டி மதம் மாற்றும் உரிமையைத்தான் தடை செய்ய முடியுமேயொழிய, ஒருவர் மதம் மாறுவதைத் தடை செய்ய முடியாது. மதம் மாறுபவர், தாம் கட்டாயப்படுத்தப்பட்டதாகவோ ஆசை காட்டப்பட்டதாகவோ ஒப்புக் கொள்ளாதவரை சட்டத்துக்கு வலு ஏது...?

இவ்வாறிருக்க, அவசர அவசரமாக தமிழக அரசு இச்சட்டத்தைக் கொண்டு வருவானேன். இச் சட்டத்துக்கு இவ்வளவு எதிர்ப்பும் எழுவானேன்?

இச் சட்டம், ஜெயலலிதா அரசின் வேறு பல நடவடிக்கைகள் போலவே எடுத்தேன், கவிழ்த்தேன் என்ற ரகச் செயல்பாடாக இருக்கிறது. இந்தியாவின் பிற மாநிலங்களில் இச் சட்டம் ஏற்கெனவே அமுலில் உள்ளது; இங்கு அமுலாவதில் மட்டும் என்ன ஆட்சேபணை என்று கேள்வி எழுப்பப்படுகிறது. இச் சட்டம் அமுலாகியிருப்பது மூன்று மாநிலங்களில்தான்: மத்திய பிரதேஷ், ஒரிஸ்ஸா, அருணாச்சல பிரதேஷ். இம் மூன்று மாநிலங்களிலுமே மதமாற்றங்கள் நின்று போனதாகத் தெரியவில்லை. ஒரிஸ்ஸாவில்தான் ஸ்டேன்ஸ் பாதிரியார் பயங்கரமான முறையில் உயிரோடு எரிக்கப்பட்டார்.

மதமாற்றத் தடை சட்டம் தனது இலக்கை எய்தப் போவதில்லை என்றாலும் மனித உரிமை மீறல்களுக்கு அது இடம் கொடுக்கும் என்பதுதான் முக்கிய ஆட்சேபணைக்குரியதாக இருக்கிறது. அரசு அதிகாரிகளின் கரங்களை இச் சட்டம் பலப்படுத்துவதன் மூலம் அதன் துஷ்பிரயோகத்துக்கும் வழி செய்யப்படுகிறது. போடோவைப் போல் அபரிமித அதிகாரம் அளிப்பதால் துஷ்பிரயோகமும் அபரிமிதமாய் இருக்கும் என்பதே எதிர்ப்பாளர்களின் ஆட்சேபணை. பொடோ சட்டமாவது உயிர்களோடு விளையாடும் பயங்கரவாதத்தைத் தடை செய்ய ஏற்பட்டது. மதமாற்றத் தடை சட்டம் அப்படி அல்ல.

சமுதாயப் பிரச்னையான மதமாற்றம், கிரிமினல் குற்றம் அளவுக்கு ஆபத்தானது அல்ல.




கிறிஸ்துவமும் இஸ்லாமும் இந்திய கலாசாரத்தோடு கலந்து, நீண்ட நெடுநாட்களாகிவிட்டன. பிற மதத்தவரைத் தங்கள் மதத்துக்கு மாற்றுவதென்பது கிறஸ்துவக் கோட்பாடாகவே இருந்து வருகிறது. இஸ்லாமும் இதர மதங்களை ஏற்பதில்லை. இந்து மதம் சனாதன தர்மம் என்ற பார்வையுடையதாக விளங்குவதால் அதில் மதமாற்றம் என்ற பேச்சுக்கே இடமில்லை.

அனைத்து மதங்களிலுமே உயர்ந்த கோட்பாடுகள் உண்டு. கிறிஸ்துவ திருச்சபை அமைப்புகள் கல்வித் துறையிலும் மருத்துவத் துறையிலும் ஆற்றிவரும் பணிகள் மிக உயர்ந்தவை. கிறிஸ்துவப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் படித்து, பொதுவாழ்வில் உயர்ந்துள்ள ஏராளமானவர்கள் இருக்கிறார்கள். இப்பள்ளிகள் கல்வியோடு கிறிஸ்துவத்தையும் பரப்பவே செய்கின்றன.

தமிழக முதல்வர் ஜெயலலிதாகூட கிறிஸ்துவக் கான்வென்ட் பள்ளியில் பயின்று வந்தவர்தான். அதன் விளைவாக தமது ஹிந்து கோட்பாடுகளை அவர் கைவிட்டுவிடவில்லை.

கல்வியறிவு பெற்ற பின்னணியும் வசதியான பொருளாதார சூழலும் உடையவர்களை மதமாறுமாறு வற்புறுத்தவோ ஆசை காட்டவோ முடியாது.

ஏழை எளியவர்களும் சமுதாயத்தில் ஒதுக்கப்பட்டவர்களும்தான் மதமாற்றத்துக்கு இலக்குகளாகிறார்கள்.

இந்த மக்களின் உயர்வுக்கும் பண்பாட்டுச் சிறப்புக்கும் அரசோ சமுதாய அமைப்போ எவ்வகையில் உதவியிருக்கிறது என நாம் யோசிப்பது முக்கியம்.

தலித்கள், பிற்படுத்தப்பட்டவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள் என பாகுபடுத்திச் சலுகைகள் வழங்குவதில் எல்லா அரசுகளும் போட்டி போடுகின்றன. இந்த விஷயம், வோட்டு வாங்கும் அரசியலாகிவிட்டதேயொழிய அம் மக்களை மேம்படுத்தும் உயர்நோக்கு எந்த அரசுக்கும் இல்லை.

பல படித்த, மேல்தட்டு மக்களும்கூட ஜாதி அடிப்படையிலான உதாசீனங்களையும் கொடுமைகளையும் தொடர்கின்றனர்.

பிரச்னைக்குத் தீர்வு, அனைவருக்கும் நல்ல கல்வி அறிவு, பொருளாதார மேம்பாடு என்பதுதான். இதற்கு அரசும் சமுதாயமும் முயற்சி செய்யாதபோது மதமாற்றப் பிரச்னையைச் சட்டத்தால் மட்டும் எவ்வாறு தீர்க்க முடியும்!

ஜெயலலிதா அரசு கொண்டு வந்துள்ள மத மாற்றத் தடைச்சட்டம் பி.ஜே.பிக்கு வேண்டுமானால் மகிழ்ச்சி தரலாம். ஆனால் மதமாற்றப் பிரச்னை தொடர்வதோடு, நிலைமை மேலும் மோசமாகவே செய்யும்.

# நைட்டி ஸ்பெஷலிஸ்ட்!



முன்பின் தெரியாத ஒரு வீட்டுக்குள் நுழைகிறோம் என்று வைத்துக் கொள்வோம். புராதனமான சேலைக்கட்டில் இருப்பவர் பாட்டி. பாந்தமான ஆறு கஜப் புடைவையில் இருப்பவர் அம்மா. நறுக்கென்ற புடைவையில் ஜெயராஜின் ஓவியம் போல இருப்பவர் அக்கா. தாவணி பாவாடையில் இருப்பவர் தங்கை. சிம்பிளான புடைவைக்கட்டில் ம.செ. ஓவியம் போல இருப்பவர் அண்ணி. ஃப்ராக் அல்லது குறும்பாவாடைகளில் இருப்பதெல்லாம், சின்னக்குட்டீஸ்... இப்படி உடைகளே குடும்ப உறுப்பினர்களை அடையாளம் காட்டிக் கொடுத்து விடும்.



ஆனால் இப்போது ஏதாவது ஃப்ளாட்டுக்குள் நுழைந்து பார்த்தால், ஒரே நைட்டி மயம்!

பாட்டி, அம்மா, பெண், மருமகள், பேத்தி, ஏன் வீட்டு வேலைக்காரிகூட நைட்டி அணிவதுதான் லேட்டஸ்ட் ஆடை கலாசாரமாகிவிட்டது.

"அழகாகவும், வசதியாகவும் இருப்பதால் இன்றைய பெண்கள் நைட்டிக்கு மாறிவிட்டார்கள். இது ஏற்றுக் கொள்ள வேண்டிய மாறுதல்தான்" என்கிறார் கோராஸ் கார்மெண்ட்ஸ் அண்ட் டெய்லரிங் உரிமையாளர் மீரா நந்தகுமார்.



• மீரா நந்தகுமார்

அசோக்நகரில் உள்ள இவரது கடை, நைட்டிகளின் உலகமாக இருக்கிறது. பொழுதுபோக்காக ஆரம்பித்தது, இன்று நல்ல பிசினெஸாகிவிட்டது. ஐந்து டைலர்களைப் பணியிலமர்த்தி, பிரத்யேக ஷோரூம் நடத்திக் கொண்டிருக்கிறார்.

"எனக்கு மூன்று பெண்கள். அவர்களுக்கு நைட்டி வாங்கும் போது, நிறைய பிரச்னைகள். உயரம் பற்றாது. அகலம் அதிகமாக இருக்கும். கழுத்து பாகம் பெரிதாகத் தொங்கும். கையைத் தூக்கினால் அக்குள் பகுதி தெரியும். பட்டன்கள் உடையும். ஒற்றைத் தையல் என்பதால், சீக்கிரமே தையல் பிரியும். இதற்கெல்லாம் முற்றுப்புள்ளி வைப்பது போல, நானே துணி வாங்கி, நைட்டிகள் தைத்தேன். அழகாகவும், பாந்தமாகவும் அவை இருக்கவே, தெரிந்தவர்களிடமிருந்து ஆர்டர்கள் குவிந்தன. வெளிநாடு போன எனது மூத்த மகள், அந்த ஊர் இரவு உடைகளான நைட்சூட், ஹவுஸ் கோட், ஸ்லிப், ஸ்லீப் டாப்ஸ் என விதவிதமாக வாங்கி அனுப்பினாள். அதை அடிப்படையாக வைத்து, நம்ம ஊருக்கு ஏற்ற சில மாறுதல்கள் செய்து 'கோராஸ் நைட்டீஸ்' என ஆரம்பித்தேன். பத்து வருஷமாக கார்மெண்ட்ஸ் தொழில் செய்கிறேன்" என்கிற மீரா,

# ஆடை கட்டி வந்த தேரோ!

**ம**துரை மீனாட்சியம்மன் கோவில் புதுமண்டபத்தில் தையல் மிஷின்களோடு வரிசையாகத் தையல் தொழிலாளிகள் அமர்ந்திருக்க, பின்னணியில் பல வண்ணத் துணிகள் கண்ணைப் பறிக்கின்றன.

கோவில்பட்டு குடைகள், பூ சக்கர குடைகள், ஆலவட்டம், கொடி, தொம்பை, தோரணம், தேர்ச்சீலைகள், சுவாமி திரை, முகப்படாம், கோவில் யானை மற்றும் ரத மாடுகளுக்கு அணிவிக்கும் ஆடைகள் என்று, பல வண்ண அலங்கார ஆடைகள் தயார் செய்து தெய்வீகப் பாரம்பரியத்தைக் கட்டிக் காக்கிறார்கள்.





• பொன்னுசாமி

'பாண்டிய வெள்ளாளர்கள்' எனப்படும் ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சேர்ந்தவர்கள் இத் தொழிலை தலைமுறைகளாகச் செய்து வருகிறார்கள்.

தமிழகத் திருக்கோயில்களின் திருத்தேர்களின் அலங்கார ஆடை வடிவமைப்புகள் இவர்களின் கைவண்ணமே!

"சாதாரண பேப்பரில் டிஸைன்களை வரைந்து கத்தரித்துக் கொள்வோம். அதன் மீது தேவையான வண்ணத் துணிகளை ஒட்டுவோம். காய வைத்து மீண்டும் பேப்பர் டிஸைன் வைத்து கத்தரிப்போம். அதன் பிறகு துணியில் அந்த டிஸைன்களை ஒட்டி வைத்து, சுற்றிலும் வெள்ளை பார்டர் தைத்து அலங்கார ஆடைகள் செய்கிறோம். இந்த அலங்கார ஆடைகளை நீரில் நனைக்காமல் பாதுகாப்பதன் மூலம் பல வருடங்கள் பயன்படுத்தலாம்" என்கிறார் இருபது வருட அனுபவமிக்க பொன்னுசாமி.

- *கி. சிங்காரவடிவேல்*

*கார்மெண்ட்ஸ் அண்ட் டிஸைனிங் கோர்ஸ் படித்தவர்.*

**மீரா தரும்**
**நைட்டி டிப்ஸ் இதோ:**

● *பிஸிவிஸி, காட்டன், ஸ்விஸ் காட்டன், பாலி மிக்ஸ் காட்டன், மஸ் சரைஸ்ட் காட்டன் போன்றவை நைட்டிகள் தைக்க ஏற்ற துணி ரகங்கள்.*

● *ஸ்லீவ், ஸ்லீவ்லெஸ், ஃப்ளோட்டிங் ஸ்லீவ், ஃபிளேப் ஸ்லீவ், முக்கால் கை போன்றவற்றில் உங்கள் உடலுக்கும் வயதுக்கும் பொருத்தமானதைத் தேர்ந்தெடுத்து அணியுங்கள்.*

● *நைட்டியின் நீளம் கணுக்காலோடு நின்று விடுவது நல்லது. தரையில் புரளக் கூடாது.*

● *ஹாஸ்டலில் தங்கும் இளம் பெண்கள் 'நைட்சூட்' அணிவது மேலும் பாதுகாப்பானது.*

● *பருமனானவர்கள், உடம்போடு ஒட்டிய நைட்டியை அணிவதைத் தவிர்க்க வேண்டும். 'ஜிப்' வைத்த வெளிர் நிற நைட்டிகள் அடக்கமான அழகு தரும்.*

● *'நைட்டி'யை அணிந்து மார்க்கெட் போவதும் வாக்கிங் போவதும் இப்போது சகஜமாகிவிட்டது. ஆனால் அப்படிப் போகும்போது உள்ளாடைகள் அணிந்து துப்பட்டாவும் போர்த்திக் கொண்டு செல்லுங்கள்.*

● *சுத்தமாகவும், நாகரிகமாகவும் அணியப்படும் எந்த ஆடையுமே உங்களுக்கு கௌரவமான தோற்றம் தரும். நைட்டி மட்டும் விதி விலக்கா என்ன?*

• டாலி

படங்கள்: ஸ்ரீஹரி

# டாப்டென் கலெக்டர்கள் - 9

# திருநெல்வேலி: கொழுத்து வைத்த மாவட்டம்!

ஒரு மாவட்ட ஆட்சியர், தமது காவல்துறை அதிகாரிகளைப் பெயர் சொல்லி, மனமாரப் புகழ்ந்து பாராட்ட வேண்டும் என்றால், அவர்களின் பணி மாவட்டத்துக்கு எத்தனை பயன் உள்ளதாக இருந்திருக்க வேண்டும்!

**திருநெல்வேலி கலெக்டர் கனீல் பாலீவால் சொன்னார்:**

"இங்கே எஸ்பி ஆக இருந்த கருப்பன் இங்கிருந்து மாற்றலாகிப் போன பிறகு, கே.என். சத்தியமூர்த்தி அதே 'டெம்போ'வைத் தொடர்ந்து வருகிறார். ஜாங்கிட், ராஜேந்திரன், சூரஜ்குமார் என்று டி.ஐ.ஜி மூன்று பேருமே திறமை சாலிகளாக எங்கள் மாவட்டத்துக்குக் கிடைத்தார்கள். அதனால் சட்டம் - ஒழுங்கு கட்டுப்பாட்டுக்குள் இருந்து வருகிறது. மானூர் பிளாக்கில் உக்கிரன் கோட்டை கிராமம், நாங்குனேரியில் செண்பகராமநல்லூர், கடையநல்லூரில் காசிதர்மம் கிராமம்; அப்புறம் விசுவநாதபுரம் கிராமம் - இங்கே எல்லாம்தான் சாதி மோதல்களும், சண்டைகளும் அதிகமாக நடக்கும். ஆர்.டி.ஓ.வும், டி.எஸ்.பியும் இவற்றை முன்கூட்டியே அறிந்து, வாராவாரம் நடக்கும் எங்கள் கூட்டத்தில் சொல்வார்கள். இதில் இன்டெலிஜென்ஸ் துறையினரும், ஸ்பெஷல் பிராஞ்ச் துறையினரும் கலந்து கொள்வார்கள். எனவே எனக்குக் கிடைக்கும் தகவல் ஆதாரபூர்வமாக இருக்கும். உடனே செயல்பட்டு, மோதல் வெடிக்காமல் நிலைமையைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து விடுவோம்.

கள்ளச் சாராயம், கள்ளத்தனமாக க்வாரி - இரண்டுமே மருங்கால் குறிச்சி, சிவலார்குளம், சொக்கம்பட்டி ஆகிய பகுதிகளில் இருந்ததாகவும், எஸ்.பி. கருப்பன் அவற்றை ஒழித்துவிட்டதாகவும் மறுபடி பாராட்டினார் கனீல் பாலீவால்.

**மாவட்டத்துக்கான வளர்ச்சித் திட்டங்கள் என்னென்ன?**

செங்கோட்டை வட்டம் மேக்கரை கிராமத்தில் அனுமன் நதியின் குறுக்கே 61 கோடி ரூபாய் செலவில் கட்டப்படும் நீர்த் தேக்கத்தால் 6500 ஏக்கர் நிலம் பாசனம் பெறும். நாங்குனேரி வட்டம், வடக்குப் பச்சையாற்றின் குறுக்கே 43 கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்டிருக்கும் நீர்த் தேக்கத்தால் 9600 ஏக்கர் பாசன வசதி பெறும். கொடுமுடியாறு நீர்த்தேக்கம் இந்த டிசம்பர் மாதத்துக்குள் முடிந்துவிடும். கடனா நீர்த்தேக்கத் திட்டம் விரிவாக்கப்பட்டு வருகிறது. சுமார் 2000 ஏக்கர் பாசனத்துக்கு இது வழி செய்யும். இந்த நான்கு திட்டங்களால் பல கிராமங்கள் பயன்பெறும் என்பதோடு, உணவு உற்பத்தி கூடுதலாகப் பல டன்கள் கிடைக்கும்.

**குறைவான தண்ணீரில்கூட நிறைவான மகசூல் பெற்றதாக விவசாயிகள் உங்கள் நிர்வாகத்தைப் பாராட்டி ஒரு செய்தி வந்திருக்கிறதே?**

கடந்த 10 ஆண்டுகளாக இங்கே போதுமான மழை பெய்யாததால்

விவசாயம் பெரிதும் பாதிக்கப்பட்டது. இதனால் சுழற்சி முறையில் பாசனத்துக்குத் தண்ணீர் விட, பொதுப்பணித்துறை அதி காரிகளுடன் திட்டமிட்டோம். சுழற்சி முறை யில் இந்த ஆண்டு பாபநாசம், மணிமுத்தாறு, சேர்வலாறு அணையில் இருந்து பாசனத்துக் பாசனத்தில், முதல் 3 கால்வாய்களில் 6 ஆயிரம் ஏக்கர் பாசன நிலங்களுக்கும், கன்னடி யன் கால்வாயில் சுமார் 10 ஆயிரம் ஏக்கர் பாசன நிலங்களுக்கும், கோடகன் கால்வாயில் சுமார் 2 ஆயிரம் ஏக்கர் பாசன நிலங்களுக்கும், மணிமுத்தாறு பெருங்கால் பாசனப் பகுதிகளில் 2500 ஏக்கர் பாசன நிலங் களுக்கும், கார் பருவப் பாச னத்துக்கு அணைகளில் இருந்து தண்ணீர் வழங்கப் படுகிறது.

அணையின் நீர் இருப் பைப் பொறுத்து, தொடக் கத்தில் இருந்தே சுழற்சி முறையில் 5 நாட்களுக்குத் திறக்கப்பட்டும், 3 நாட் களுக்கு அடைக்கப்பட்டும் கடந்த 30 ஆம் தேதி வரை தண்ணீர் வழங்கப்பட்டது. இப்போது கால்வாய்கள் அடைக்கப்பட்டு விட்டன. சுழற்சி முறையைக் கடை பிடித்ததால், தாமிரபரணி மற்றும் மணிமுத்தாறு பாசனப் பகுதிகளில், பாச னத்துக்குக் குறைவான தண்ணீர் விடப்பட்டது. சென்ற ஆண்டு அதே அளவு நிலங்களுக்கு

• சுற்றுலாச் செல்வம்

• கனில் பாலிவால்



குத் தண்ணீர் விடப்பட்டது. நீர்ப் பாசனப் பொறியாளர் சங்கர நாரா யணன், செயற்பொறியாளர் சண்முக சுந்தரம் போன்ற அதிகாரிகள் மிகவும் ஒத்துழைப்புக் கொடுத்தார்கள். முதலில் விவசாயிகள் இதற்கு எதிர்ப்புத் தெரிவித் தார்கள். ஆனால் அதிகாரிகள் விவரமாக எடுத்துச் சொன்னதும் ஏற்றுக் கொண் டார்கள்.

தாமிரபரணி மற்றும் மணிமுத்தாறு அணை களின் நீர் இருப்பைப் பொறுத்து, தாமிரபரணி வழங்கப்பட்ட 100 சதவிகிதத் தண்ணீரிலிருந்து 30 சதவிகிதம் குறைவாக, அதாவது 70 சதவிகி தமே தண்ணீர் விடப்பட்டது. அப்படியும், தற் போது அறுவடை நடந்துவரும் பகுதியில்

ஒன்றரை மடங்கு மகசூல் இருப்பதாகவும், பயிர்கள் தேய்ந்து விடாமல் காப்பாற்றப்பட்டிருப்பதாகவும் விவசாயிகள் மகிழ்ச்சி அடைந்திருக்கிறார்கள். தண்ணீர் பற்றாக்குறை இல்லாத காலத்திலும், விவசாயிகள் தண்ணீரை ஒரே மாதிரியாகப் பயன்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருக்கிறோம். விவசாயிகள் எல்லோரும் சுழற்சி முறைக்கு மிகுந்த ஒத்துழைப்புத் தந்தனர். (நகரில் பல இடங்களில் போஸ்டர் அடித்து ஒட்டி, நன்றி தெரிவித்திருக்கிறார்கள்!)



• பகைமைப் படை நிகழ்ச்சியில்...

பயிர் விளைச்சலை அதிகரிக்கும் விவசாயிகளை ஊக்குவிக்க, பல்வேறு பயிர்களிலும் 'பயிர் விளைச்சல் போட்டி' நடத்தப்பட்டு, போட்டியில் வெற்றி பெறும் முதல், இரண்டாவது பரிசு பெறும் 14 விவசாயிகளுக்கு இதுவரை 61,000 ரூபாய் பரிசுத்தொகையாகக் கொடுத்திருக்கிறோம். உணவு தானிய உற்பத்தியைப் பெருக்கும் விவசாயிகளையும் ஊக்குவித்து வருகிறோம்.

**குடிநீர்த் திட்டத்தில் குறிப்பிட்டுச் சொல்லும்படியாக...?**

எங்கள் மாவட்டத்துக்கென்றே கூட்டுக் குடிநீர்த் திட்டங்கள் சில இருக்கின்றன. ('இவை யுனீக்!') சேந்தமங்கலத்தில் 64 குடியிருப்புகளுக்காக, பாப்பாகுடியில் 31 குடியிருப்புகளுக்காக, சாம்பவார் வடகரையில் 84 குடியிருப்புகளுக்காக இவை நடைபெறுகின்றன.

செங்கோட்டையில் குற்றாலம், இலஞ்சி, மேலகரம், எஸ்புதூர் ஆகிய 4 பஞ்சாயத்துகளில் 46 குடியிருப்புகளுக்காகப் பணி நடக்கிறது.

இவை தவிர, மானூர், குருவிக்குளம், தென்காசி, கடுமையான தண்ணீர் பற்றாக்குறை உள்ள பனங்குடி - வள்ளியூர், கீழ்ப்பாவூர் - பொன்னாங்குடி, நாங்குனேரி, திசையன்விளை என்று பல திட்டங்கள் வருகிற ஆண்டு மார்ச் - ஜூன் மாதங்களில் முடிவடையும். இவை நகர்ப்புற, கிராமப்புறக் குடிநீர்த்திட்டங்கள்.

**நிர்வாகச் சுறுசுறுப்பு எந்த அளவு இருக்கிறது?**

சென்ற 2001 ஆம் ஆண்டு எனக்கு வந்த மொத்த கோரிக்கைகள் 18054. இந்த வருடம் 30.9.2002 வரை, 14,766. இவை எல்லாமே சாலை வசதி, குடி தண்ணீர், பள்ளிக்கூடம், பென்ஷன், பட்டா, வேலை வாய்ப்பு என்று பலதரப்பட்டவை. நல்ல மழை இருந்தால், தண்ணீர் பற்றிய கோரிக்கைகள் இருக்காது.

**இவற்றை எப்படித் தீர்த்து வைக்கிறீர்கள்?**

வேறு மாவட்டங்களில் எப்படிச் செய்கிறார்கள் என்று எனக்குத் தெரியாது. ஆனால் இங்கே, எந்தத் துறை பற்றிக் கோரிக்கை வருகிறதோ, அந்தத் துறை தாலுகா வாரியாக, ப்ளாக் வாரியாக ஒரு ரெஜிஸ்தரில் பதிவு செய்துவிட வேண்டும். அந்தந்த அலுவலகங்களில் நான் விஸிட் செய்யும்போது, தவறாமல் அந்த ரெஜிஸ்தரைப் பார்வையிடுவேன். எவை எவை முடிக்கப்பட்டு, பதில் அனுப்பப்பட்டிருக்கின்றன என்று பார்ப்பேன். தீர்க்கப்படாத குறை பற்றிய தகவலை என் பெயரிட்டு ஒரு கவரில் போட்டுத் தருமாறு கேட்பேன். வியாழக்கிழமை மாலை, குறிப்பிட்ட அதிகாரி, தன் பணிகளை முடித்துவிட்டு, அது ஆறு



• சாரல் விழா...

மணி ஆனாலும் சரி, ஏழு மணி ஆனாலும் சரி; என்னைக் கட்டாயம் வந்து சந்தித்து, அது ஏன் தீர்க்கப் படாமல் இருக்கிறது என்பதற்கான காரணத்தை விளக்கிச் சொல்லியாக வேண்டும். அப்புறம் குறையைத் தீர்ப் பதற்கான வழி வகைகளை ஆலோசிப்போம். எண்ணிக்கையில் தீர்வு செய்தால் மட்டும் போதாது; தரத்திலும் அவை திருப்தியளிப்பதாக இருக்க வேண்டும். ("நாட் ஒன்லி க்வான்டிடி; பட் ஆல்ஸோ இன் க்வாலிடி")



• மாணவர்களுக்கு ஸ்கேட்டிங் போட்டி

இது தவிர, விவசாயிகளை எல்லா மாதமும் மூன்றாம் வெள்ளிக்கிழமை சந்திக் கிறேன். முன்னாள் இராணுவத்தினரையும், மீனவர்களையும் 3 மாதங்களுக்கு ஒரு முறை சந்தித்து, குறைகள் கேட்கிறேன்.

**பொதுப்பணித் துறைகளில்...?**

பிரதமர் சாலை மேம்பாட்டுத் திட்டங்கள் 41ல், 40 முடித்து விட்டோம். தூர் வாரும் பணியில் குறிப்பிட்ட அளவுக்கு முடித்து விட் டோம். மொத்தம் 425 பஞ்சாயத்து யூனியன் களிலும் சானிடரி காம்ப்ளெக்ஸ் கட்டி முடித்து விட்டோம். எதுவும் மீதி இல்லை. எல்லா கிராம அலுவலர் நிர்வாக அலுவல கமும் (540) கட்டி முடித்திருக்கிறோம். தானியம் போரடிக்கும் களங்கள் ஒவ்வொரு பஞ்சா யத்துக்கும் 60,000 ரூபாய் செலவில் கட்டிக் கொடுத்து வருகிறோம். சுய உதவிக் குழுக் களுக்காக, 370 சதுர அடியில், ஒரு லட்ச ரூபாய் செலவில் கட்டடம் கட்டிக் கொடுத்து வரு கிறோம். வறட்சி நிவாரணப் பணிகளில் 676ல் 603 முடித்துவிட்டோம்!

**சிறுசேமிப்புத் துறையில்...?**

இலக்கைத் தாண்டிய ஆறு மாவட்டங் களில், எங்களுடையதும் ஒன்று. இதில் கிடைக் கும் ஊக்கத் தொகையைக் கொண்டு, ஆரம்ப சுகாதார நிலையத்தில் ஆபரேஷன் தியேட்டர், மதிய உணவுக்கூடங்கள் பராமரிப்பு என்று அத்தியாவசியச் செலவுகளைச் செய்கிறோம். வீட்டுக்கொரு சேமிப்புக்கணக்கு, பள்ளிக் குழந்தைகள் ஒவ்வொருவருக்கும் சிறு சேமிப்புக் கணக்கு என்று புதிதாக அறிமுகம் செய்து, வெற்றி கண்டிருக்கிறோம்.

**குற்றாலம் உங்களுக்கு இயற்கை தந்த சுற்றுலாச் செல்வம் அல்லவா?**

சந்தேகம் இல்லாமல்! அங்கே பசுமைப் படையைத் துவக்கி வைத்து, தூய்மையைப் பாதுகாக்கிறோம். பள்ளி - கல்லூரி மாணவ மாணவியர் இதில் உற்சாகத்துடன் பங்கெடுத் துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு நிறை யப் போட்டிகள், பரிசுகள் என்று வைத்து, குற்றாலத்தை குதூகல நகரமாக மாற்றி யிருக்கிறோம். வருடா வருடம் நடைபெறும் 'சாரல் விழா', சுற்றுலா வரைபடத்தில் குற்றா லத்துக்கு ஒரு முக்கிய இடத்தைத் தந்திருக்கிறது. ஒரு வாரத்துக்கு கலை - கலாசார விழா என்று இங்கே அமர்க்களமான கொண்டாட்டமாக இருக்கும்.

கலெக்டர் சுனீல் பாலீவால் தமது 'காம்ப்' அலுவலக அறையில் வைத்திருக்கும் 24 தடுப்பு கள் கொண்ட 'பீஜியன் ஹோல்' கவனிக்கப்பட வேண்டிய ஒன்று. தாம் கவனிக்க வேண்டிய காகிதங்களை, துறை வாரியாக இதில் வைத்திருக்கிறார். யார் உதவியும் இன்றி, 'டக்'கென்று எந்தக் காகிதத்தையும் எடுத்து, கேட்கும் விவரத்தைத் தருகிறார்!

ராஜஸ்தான் ஜோத்பூர் மாவட்டத்தைச் சேர்ந்தவர் சுனீல் பாலீவால். திருத்தமாகத் தமிழ் பேசுகிறார். நாக்கைப் புரட்டும் கிராமப் பெயர்களைக்கூட, தவறின்றி உச்சரிக்கிறார். ஒழுங்கும், ஸிஸ்டமும், அரசுத் துறையிலும் சாத்தியம் என்று செயலில் காண்பித்து வரு கிறார்.

கான்பூர் ஐ.ஐ.டி.யில் பி.டெக் தேறி, அமெரிக்க மேரிலாண்ட் பல்கலைக் கழகத்தில் மாஸ்டர்ஸ் பட்டமும் பெற்ற கம்ப்யூட்டர் சயன்ஸ் நிபுணர்.

"பிறகு ஏன் ஐ.ஏ.எஸ்?"

"எதைச் செய்தாலும் அதன் பலன் நேரடி யாக மக்களுக்குப் போய்ச் சேர வேண்டும் என்று விரும்பினேன். பணியின் மதிப்பும், மாண்பும் மனித வாழ்வில் பெருமை தர வேண்டும் என எண்ணினேன்!" என்றார் சுனீல் பாலீவால், புன்சிரிப்புடன்.

பேட்டி, கட்டுரை: சாருகேசி



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை - 63. போன்: 276 0612.

City Office: No.7, முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன்: 371 4942.

## தீபாவளி நல்வாழ்த்துக்கள்

### ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 14 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 180 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைக்களுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (180 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான **தீபாவளி**, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்

சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் (நிறுவனர்)

சுவாமி ஸ்ரீ பாலகிருஷ்ணானந்தா

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு

# "புது டிசைனா எடுங்க!"

இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள பெண்கள் அனைவருக்கும் ஒரு விஷயத்தில் படு ஒற்றுமை உண்டு.

'தான் அணிந்திருக்கும் உடை, பதினெட்டுப்பட்டி சுற்று வட்டாரத்தில் யாரிடமும் இல்லாத அளவு, சிறப்பாக, அழகாக இருக்க வேண்டும்' என்று மகளிர் குல திலகங்கள் ஆசைப்படுகிறார்கள்.

இந்த ரகசியத்தை, மனத்தில் கொண்டு தான், தறிகளையும் சாயப்பட்டறைகளையும் சுற்றிச் சுற்றி வருகிறார், தி.நகர் 'விஜய் பொட்டீக்' டிசைனர் வத்ஸலா.

''மனத்தில் அழகுணர்ச்சி நிரம்பிய எவருமே புடைவை டிசைனிங் கலையில் ஜமாய்த்து விடலாம்'' என்கிறார் உற்சாகமாக.



* ரவிவர்மா டிசைன் புடைவையில் ப்ரீத்தி

''சிறு வயசிலிருந்தே வண்ணங்கள் என்னைக் கவர்ந்தன. ஓவியம் வரைவதிலும் நிறைய ஆர்வம் உண்டு. சாயங்களை விநியோகம் செய்யும் தொழில் செய்யும், குடும்பத்துக்கே மருமகளாகப் போனேன். தறி ஆட்களும், சாயப் பட்டறையாளர்களும், புழங்கும் இடமாக அமைந்ததால், எங்கள் குடும்ப விசேஷம் ஒன்றுக்கு வீட்டிலுள்ள அனைத்துப் பெண்களுக்கும் பிரத்யேகமாக டிஸைன் செய்து கொடுத்தேன். விளையாட்டாகச் செய்தது, பெரும் பாராட்டை அள்ளிக் கொடுக்கும் என நானே எதிர்பார்க்கவில்லை.

''அடடா! லேட்டஸ்டா இருக்கே?'' என்று விசாரிப்பவர்களுக்கு பதில் சொல்லி மாளவில்லை. அப்படி ஆரம்பித்தது தான். இன்றைக்கு தனித்துவம் வாய்ந்த 'விஜய் ஸாரீஸ்' பிரபலமாகிவிட்டது'' என்கிறார்.

பழசே புதுசு போல, உருமாறி, திருமாறி வருவதால், பாட்டிகளின் டிரங்க் பெட்டிகளைக் குடைவது வத்ஸலாவின் பொழுது போக்கு... அந்தக் காலத்துப் புடைவைகள், நிறங்கள், ஜரிகை டிஸைன் பற்றி ஆராய்ச்சிக் கட்டுரை எழுதும் அளவுக்குத் தகவல் சேகரித்து வைத்திருக்கிறார்.



* வத்ஸலா

"சிவப்பு, கறுப்பு, அடர் பச்சை, நீலம் இந்த நான்கு

**ஆடைச் சிறப்பிதழ்**



நிறங்கள்தான் மிக அதிக அளவில் பார்டரில் பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் நான் மஞ்சள், பாக்கு, நாவல் பழம், கடல் நீலம் போன்ற அந்தக் காலத்து வண்ணங்களை பார்டருக்கும், சில்வர் க்ரே, கோல்டன் ப்ரவுன், பேபி பிங்க், காப்பர் ரெட் போன்ற இந்தக் காலத்து வண்ணங்களை மேனிக்கும் பயன்படுத்துகிறேன். அப்ப கெட்டப்பே மாறி, புது காம்பினேஷன் கிடைக்கிறது. பாவன்ஜி பார்டர், பொடி கட்டம், ருத்ராட்ச பேட், மகேஸ்வரி பேட், முப்பாகம், பட்டாம் பூச்சி, மயிலிறகு போன்ற அந்தக் காலத்து பாரம்பரிய டிஸைனில் இந்தக் காலத்து லைட்-வெயிட் மோகத்துக்கு ஏற்ப நான் உருவாக்கியுள்ள சக்ரீ, சிம்ஹா புடைவைகள்தான் தீபாவளி லேட்டஸ்ட்!'' என்றார்.

உயர்ரக பருத்தியின் சிறப்பும், பட்டு போன்ற எழிலும் கொண்டு சூரத் ஜரியால் இழைக்கப்பட்ட இந்தப் புடைவைகளை உருவாக்கி முடிக்கும்வரை வத்ஸலா பல இரவுகள் தூங்கவேயில்லையாம்.

"பின்னே? ஒரு சேலை எடுப்பதற்கு, ஒரு அலமாரியைப் புரட்டிப் போட்டுப் பார்க்கும் பெண்களின் புடைவை ஆசையை அவ்வளவு எளிதாகத் திருப்திப் படுத்தி விட முடியுமா என்ன? அதுதான்... பண்டிகை வந்துவிட்டால், மண்டையை உடைத்துக் கொண்டு புதுசு புதுசாக டிஸைன் செய்ய வேண்டியிருக்கிறது'' என்றார்.

"ஊரார் சேலைக் கனவுகளை ஊட்டி வளர்த்தால், தன் டிஸைன் தானே வளரும்' - இது வத்ஸலாவின் சேலை மொழி!

பிடிச்சிருக்கா?

— அப்ஸரா

படங்கள் : யோகா

# மீனாட்சி பட்டு!

ஒரு புது பட்டுப்புடைவை எடுக்க ஆயிரம் கடைகள் ஏறி இறங்கினாலும் திருப்தி படாத பெண்கள்...ஏற்கெனவே அணியப்பட்ட பட்டுப்புடைவையை வாங்க முண்டியடித்துக் கொண்டு நிற்பார்கள். அங்கே ஜரிகை, நிறம் தரம் பார்க்க மாட்டார்கள்.



* மங்கள வரம்

நமக்கு ஒரு பட்டுப்புடைவை கிடைக்காதா என ஏங்கிப் போய் நிற்பார்கள். அது எங்கே? மதுரை மீனாட்சியம்மன் கோயிலில்தான். மீனாட்சி அம்மனுக்கு உபயமாக வந்து அணிவிக்கப்பட்ட பட்டுப்புடைவைகள் ஒவ்வொரு வெள்ளிக் கிழமையன்றும் ஏலம் விடப்படுகின்றன.



* பாஸ்கரன்

''தினமும் நூறு பட்டுப் புடைவைகளுக்கு மேல் உபயமாக வருகிறது. இந்தப் பட்டுப் புடைவைகளைப் பாதுகாத்து இருப்பில் வைப்பதைவிட மங்கள வரமாகப் போய்ச் சேரட்டும் என்று இந்த ஏற்பாடு. ஒவ்வொரு புடைவைக்கும் விலை நிர்ணயம் செய்ய ஒரு குழுவை நிர்வாகம் அமைத்துள்ளது. அந்தக் குழு நிர்ணயித்த விலையோ அல்லது அதற்குக் கூடுதலாகவோ ஏலக் தொகை அமைந்தால் மட்டுமே கொடுக்கப்படும்'' என்கிறார் கோவில் நிர்வாக அதிகாரியும், இணை ஆணையருமான பாஸ்கரன்.

இருபது வருடங்களுக்கு மேலாக நடைமுறையில் இருந்த ஏலம் தற்போது மூன்று மாதங்களாக நடை பெறுவதில்லை மதுரை, தேனி, திண்டுக்கல் மாவட்டங்களில் இந்து சமய அற நிலையத்துறை கட்டுப்பாட்டில் உள்ள நலிவடைந்த கோவில்களுக்கு இந்தப் புடைவைகள் தானமாக வழங்கப்பட்டு விடுகின்றனவாம்..

- கி. சிங்காரவடிவேல்

உதவி செய்வீர் உகந்துவாழ்வீர்



# குட் லைப் சென்டர்

(ஆதரவற்ற குழந்தைகள் மற்றும் மனவளர்ச்சி குன்றியோர் இல்லம்)

12, லோகநாதன் தெரு (வித்யா தியேட்டர் அருகில்), தாம்பரம், சென்னை - 45
E-mail:goodlife1996@yahoo.com Web:www.goodlifecentre.da.ru/.
Phone: 226 4151 / 226 4152

## தீபாவளி நல்வாழ்த்துக்கள்

பேரன்புடையீர்,

வணக்கம். குட் லைப் சென்டர் – ஓர் தொண்டு ஸ்தாபனம். ஆதரவற்ற குழந்தைகள், உடல் ஊனமுற்ற மற்றும் மனவளர்ச்சி குன்றிய குழந்தைகள் / பெண்கள், அனாதைகளாக இரயில் நிலையம், சாலை ஓரங்களில் உணவு, உடை மற்றும் உறங்க இடமின்றி நோய்வாய்ப் பட்ட நிலையில் தவிக்கும் குழந்தைகளின் நலனுக்காக கடந்த 1996ஆம் ஆண்டு துவக்கப் பட்டது.

தற்பாது 1 வயது முதல் 30 வயது வரை உள்ள 54 குழந்தைகள் (HIV பாதிக்கப்பட்டவர் களின் குழந்தைகளும் உள்ளனர்) மற்றும் பெண்களுக்கு புகலிடமும், மனோரீதியாக இவர் களுக்கு புத்துணர்ச்சியையும், மருத்துவ வசதியையும் அளித்து பாதுகாத்து வருகிறோம். பாரத மண்ணில் மைந்தர்களாக, ஆனந்தமாய் பிறந்த இக்குழந்தைகள், மூளை வளர்ச்சி குன்றியவர்களாக, உடல் ஊனமுற்றவர்களாக ஆதரவற்ற நிலையில் பெற்றவர்களால் சமு தாயத்தின் இருட்டில் தள்ளப்பட்டு "அனாதைகள்" என்ற அவல நிலையில் வாடி தவிக் கின்றனர்.

## இவர்களும் தீபாவளி கொண்டாட முடியுமா?!...



ஆம், தாய் உள்ளம் கொண்ட தங்களின் கருணை உதவியால் இக்குழந்தைகள் தீபாவளி பண்டி கையை சிறப்பாக கொண்டாட இயலும். இவர்களும் நமது குழந் தைகளைப் போல தீபாவளி திருநாள் அன்று புதிய ஆடை கள், இனிப்பு, பட்டாசு மற்றும் விருந்து உணவுகளுடன் இப் பண்டிகையை கொண்டாட தங்களால் இயன்ற உதவிகளை செய்து அவர்களுடன் மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளு மாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் / வியாபாரம் தொடங்கிய நாள் மற்றும் இதர பண்டிகை நாட்களில் ஆதரவற்ற குழந்தைகளுக்கு "சிறப்பு விருந்து" அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளலாம். தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக் கொள்கிறோம்.

தங்களுக்கு அனைத்து நன்மைகள் உண்டாகவும், நல்ல ஆரோக்கியத்துடனும், பல்லாண்டு கள் வாழ தீபாவளி நன்னாளில் எல்லாம் வல்ல இறைவனை பிரார்த்திக்கிறோம். நன்றி!

தாங்கள் அனுப்பும் நன்கொடை
"GOOD LIFE CENTRE" என்ற பெயருக்கு
Cheq./D.D./M.O மூலம் அனுப்பி வைக்கும்படி
அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

மனித நேய பணியில்
**K. பாஸ்கரன்**
சமூக சேவகர் / செயலாளர்

# 1 யுகபாரதி

# குறுகுறு கவிதைத் தொடர்

# காதல் பிசாசே!

எந்தெந்தக் கனவுகளால் இந்த பூமி அழகாயிருக்கிறதோ, அந்த அழகு முழுவதும் காதலால் நிகழ்ந்தது. எந்தெந்த அவதிகளால் இந்த பூமி அழுது வடிகிறதோ, அதுவும் காதலால் நேர்ந்ததுதான்.

*நீ உன் முந்தானையால்*
*தலை துவட்டி விடுவாய்*
*என்பதற்காகவே குடை மறந்து வந்த*
*மழை நாளில்*
*ஜீன்ஸும் டிஷர்ட்டுமாய்*
*நின்றிருந்த உன்னை*
*என்ன சொல்லித் திட்டுவது?*

- இப்படியாய் இன்னும் ஏராளமான ஆசைகள். உன் இமைச் சிறகடிப்பில் அத்தனையும் தொங்கிக் கொண்டிருக்கிறது.

வதைக்கும் உன் ஞாபகங்களைச் சுமந்து கொண்டு சாக முடியாது. எல்லாவற்றையும் உன்னிடம் கொட்டி விடுகிறேன்.

நீண்ட அந்தத் தெருவில் நீ நடந்து வருகிறாய். உன்னுடன் கூடவே மாலையோடு ஒருவன். உன் கழுத்திலும் மாலை.

கண்ணீர் வழிய நிற்கிறேன். அருகே நீ வந்ததும் தலை குனிந்து கொள்கிறேன். மெட்டி அணிந்த பாதம் என்னைக் கடந்து போகிறது. ஏக்கத்தோடு திரும்பிப் பார்க்கிறேன். அலங்கரிக்கப்பட்ட உன் ஜடைப் பின்னல் கையசைத்துக் கொண்டே செல்கிறது.

*தோளைப்*
*புடிச்சிக்கிட்டு*
*தொடர்ந்து போறத்*
*தோழிப் பொண்*
*உன் நெழல*
*மிதிச்சாலும்*
*நெஞ்சு வலிக்குதடி*

என்கிற தய்.கந்தசாமியின் கவிதையொன்று என் ஞாபகத்தில் மோதுகிறது. நெஞ்சு வலிக்கிறது. நீ என்னை விட்டு வெகுதூரம் போய் விட்டாய்.

சின்னச் சின்னதாய் எவ்வளவு ஆசைகள். ஜன்னல் பின்னே நின்று வானம் பார்க்கும் உன்னை இழுத்துக் கொண்டு தெருவழி ஓடி நதி நீரில் நனைத்து.. கை நிறைய பூப் பறித்து... உச்சி மலையேறி "அதோ பார் வானம்.. மேகம் உன் தலை மேல் ஓடுது பார்..!" என்று கூவ வேண்டும்.

உன் மெல்லிய புன்னகை உதட்டருகே ஒரு சின்ன மச்சத்தை என் விரலால் வைக்க வேண்டும்.

பீரோவில் தூங்கும் மடிப்புக் கலையாத உன் சேலைக்குள் என் கைக் கடிகாரத்தை வைக்க வேண்டும்.

நீண்ட அந்தத் தெருவில் நீ நடந்து வருகிறாய். எனக்குள் அதிர்வோடு தையல் மிஷின் ஓடுகிறது.

அவஸ்தை... உயிரைப் பிழிந்தெடுக்கும் இம்சை. உன்னிடம் சொல்லி விட நினைத்து வைத்திருக்கும் ப்ரியங்களை ஒற்றை அறைக்குள் புதைத்து வைத்திருக்கிறேன். சதா மனசுக்குள் உன் ஞாபகங்கள் மழை பெய்து கொண்டேயிருக்கிறது. சமயங்களில் தடுமாறி கண்களில் வழிகிறது.

இப்படியான பிரிவுகள் உங்களுக்கும் இருந்திருக்கலாம். பெரும்பாலும் தேவதைகள், கனவுக்கும் நிஜத்துக்குமான இடை வெளியில்தான் நடமாடுகிறார்கள். இந்த தேவதைகள் தான் தூக்கத்தைக் கொன்று இரவு முழுவதும் சிரித்துக் கொண்டிருக்கும் காதல் பிசாசுகளாகிப் போகிறார்கள்.

சந்தோஷம், துக்கம், கண்ணீர், புன்னகை இவைகளால் செய்யப்பட்ட காதலின் தோள் மீது தலை சாய்க்கிற அனுபவம் வாய்க்காதவன், வாழ்வின் அர்த்தத்தைத் தொலைத்து விடுகிறான்.

அவள் முந்தானையால் தலை துவட்டி விடுவதற்காகவே மழையில் நனைந்து வருவது...

அவன் கைகளால் நெற்றியில் தைலம் தடவுவதற்காகவே தலைவலி வராதா என்று ஏங்கிக் கிடப்பது...

அவளின் கோபத்தை ரசிப்பதற்காகவே சொன்ன நேரத்தைத் தாண்டி வருவது..

இப்படியான காதல் சுவாரஸ்யங்களினால்தான் வாழ்க்கை நதி ஓடிக் கொண்டிருக்கிறது. அந்த நதியில் கை நிறைய நீரள்ளி, தன் முகம் பார்க்காதவர்கள் யாரேனும் உண்டா?

**கா**தல் ஓர் அற்புத திரவம். அருந்த அருந்த மகிழ்ச்சி தரும். அருந்தி முடித்து அமர நினைக்கையில் திராவகமாகிவிடும். கண்களில் பூச்சரமும், கைகளில் சாட்டையுமாய் வருகிற காதல் தாயின் தாலாட்டும் ஒப்பாரியாகிவிடுகிறது. அவளது அரவணைப்புகள் ஆளைக் கொல்லும் அபாயத்தைத் தருகிறது. தன்னைக் காதலிக்கக் கிடைத்த ஒரு ஜீவனை காலமும் சமூகமும் மாறி மாறி சூறையாடிப் போவதைக் கண்டால் யார்தான் உன்மத்தமாகாமல் தப்பிக்க முடியும்? உன்மத்தனாகாதவன் கவிஞனாகி விடுகிறான்.

எங்கிருந்து முளைக்
குதித்த
காதல் தாவரம் - என்
உள்புகுந்து கிளை விரிக்க
என்ன காரணம்?

இரண்டு கண்களிருந்தும்
உறங்க முடியவில்லை
இரண்டு கால்களிருந்தும்
மண்ணில் பதியவில்லை

**“இந்தப் பிரபஞ்சத்தின் முதல் காதலர்கள் இப்போது எங்கேயிருப்பார்கள்?”**

விட்டு விட்டு மழையடிக்க
நனைந்ததுமில்லை - எனை
விட்டுவிட்டு பூமி விலகி
சுழன்றதுமில்லை
உன்னைப் பார்த்த நிமிடம்
உயிரில் கொஞ்சம் துயரம்.

எங்கோ, எப்போதோ, யாராலோ, தூவப்பட்ட தானியத்திலிருந்து ஒரு மரம் உருவாகிறது. அந்த தானியத்தை வீசியவனுக்கு நிழல் தருகிறதோ இல்லையோ, ஏந்திக் கொண்ட பூமியை அழகாக்கி விடுகிறது. மருதாணி பூசிக் கொள்ளும் பெண்ணின் நாணத்தை ஒத்தது அதன் நிழல். இருக்கும்போதே இறக்கவும், நடக்கும்போதே பறக்கவுமான சிங்காரச் சிறகினை தோள்களில் பொருத்தி விடுகிறது காதல்.

இந்த பூமியின் சுழற்சி தன்னை மட்டும் விட்டுவிட்டு சுழல்வதான மாயத் தோற்றத்தை உற்பத்தி செய்கிறது. இந்த மண்ணில் விளைந்த அனைத்து தத்துவங்களும், காதலின் மேன்மையை, போற்றுவதற்காகவே உருவாக்கிய ஏற்பாடு. மனித குலத்தை நேசிக்கிறவன் புரட்சிக் காரனென்றால், சக மனிதனை / மனுஷியை நேசிப்பவனும் உன்னதமானவன்தான்.

ஒரு மலரை, ஒரு பறவையை, ஒரு விலங்கை, ஒரு செடியை நேசிப்பது போல் உங்களால் இன்னொருவரும் உங்களை இன்னொருவரும் சந்தோஷப்படுத்திக் கொள்வதே காதல். இதில் அவஸ்தைகளும் உண்டு. தனிமையின் நரக வேதனையும் உண்டு.

நானொருவன் மட்டிங்கிலும் -
பிரிவென்பதோர்
நரகத் துழலுவதோ? என்றான் பாரதி.

நரகம் மிக மிகக் கொடூரமானது.

அதனினும் தனிமையான நரகமெனில் சொல்லத் தேவையில்லை.

மயிலிறகுகளால் கோதி விடுகிற அதே உணர்வு தான் கள்ளிச் செடியாகவும் மாறுகிறது.

இந்தப் பிரபஞ்சத்தின் முதல் காதலர்கள் இப்போது எங்கேயிருப்பார்கள்?

சொர்க்கத்திலா? நரகத்திலா? வாழும்போது நரகத்தைச் சந்தித்த காரணத்தால் நிச்சயமாய் சொர்க்கத்தின் கதவுகளே அவர்களைச் சுவீகாரம் செய்திருக்கும்.

இந்தத் தொன்மையான மொழியின் முதல் காதல் கடிதம் இப்போது எங்கேயிருக்கும்?

காலத்தால் அழியாமல் போகவே பெண்களின் கண்களிலும் ஆண்களின் இதயத்திலும் அவை மடித்து வைக்கப்பட்டிருக்கும்.

அந்தத் தெருவின் முடிவில்
உன் வீடிருக்கிறது
அடுத்தத் தெருவின் முடிவில்
பூந்தோட்டமிருக்கிறது
எந்தத் தெருவுக்குள்
இடம் மாறி நுழைந்தாலும்
மனசு நிரம்ப
பறித்துத் திரும்பலாம் பூக்களை

இழந்த காதலை இலக்கியமும், தோற்ற காதலை இதயங்களும் சொல்லிக் கொண்டே இருக்கும். அள்ளி எடுக்கிற கை மணலில் கடல் அகப்படுமெனில் பார்வைகள் வானத்தைத் தொடாதா? முத்தொள்ளாயிரத்தில் ஒருத்தி, காதலன் வந்த குதிரையின் காலடி மண்ணைத் தொட்டெடுக்கிறாள். எடுத்தவள் என்ன செய்தாள்?

(தொடரும்)



"ஃபேஷன் என்பதற்கு எந்தவித இலக்கணமும் கிடையாது. எது அழகா புதுமையா இருக்கோ அது ஃபேஷனாயிடும். அதனாலே, ஒரு வித்தியாசமான உடையலங்காரத்தை, செஞ்சுக்க, எப்பவும் கூச்சப்படவே கூடாது. எல்லாரையும் கௌரவமா வசீகரிக்கறதுதான் நல்ல டிரஸ் சென்ஸ்!

- அர்ச்சனா உதிர்த்த ஃபேஷன் மொழி!

# த்ரிஷாவின் காதல் உடைகள்!

அரசம்பட்டியில் ஆடு மேய்க்கும் கதாநாயகிக்கும், மாடு மேய்க்கும் கதாநாயகனுக்குமிடையே காதல் வந்ததும், கட்! ஜீன்ஸ் என்ற அதி நவீன ஆடை அணிந்து டூயட் பாட ஆஸ் திரேலியா போய் விடுவார்கள்.



* 'மனசெல்லாம்' படத்தில்

இந்த அபத்தங்களை எல்லாம் தாண்டி, தமிழ் சினிமா கொஞ்சம் தலை எடுக்கத் தொடங்கியுள்ளது.

'கதைக்கேற்ற காஸ்ட்யூம் போதும்' என்று நினைக்கும் இளைஞர்கள் வரத் தொடங்கியிருக்கிறார்கள்.

"'மனசெல்லாம்' படத்தில், த்ரிஷாவுக்கு வித்தியாசமாக ஆடைகள் தைத்திருக்கிறார் காஸ்ட்யூம் டிஸைனர் அனு" என்ற தகவலைச் சொன்னவர் த்ரிஷாவின் அம்மா உமா.

அந்த ஒரு வரி தகவலைப் பிடித்துக் கொண்டு இயக்குநர் சந்தோஷிடம் பேசினோம்.

"கதையை மட்டும் கேட்காதீங்க" என்ற கண்டிஷனுடன்தான் பேசவே தொடங்கினார்.

"சினிமாவில் நடக்கற ஒரு சம்பவத்தை, ஒரு கதாபாத்திரத்தின் மன நிலையை, வசனத்தாலோ, பாட்டாலோ, பின்னணி இசையாலோ, வெளிப்படுத்துவது வழக்கமான யுக்தி. இன்னும் ஒரு படி மேலே போய், கேமிரா கோணங்களினாலும், லைட்டிங் எஃபெக்ட்டுகளினாலும் அந்த 'மூடை' வரவழைத்து விட முடியும். ஆனால் 'மனசெல்லாம்' கதையில், என் கதாநாயகி அணியும் ஆடைகள் கூட, அவருடைய உணர்வுகளைப் பிரதிபலிக்க வேண்டும் என்று நினைத்தேன்.

அவள் காதல் வயப்படும்போது, செட்டிங், பின்புறம் எல்லாம் மைல்டாகவும், அந்தப் பெண் வண்ணமயமாகவும் இருப்பாள். அதுவே அவளது காதலில் மாற்றம் வரும்போது, அந்தப் பெண்ணின் உடைகள் மைல்டாக மாறிவிடும். அவளை பாதிக்கின்ற விஷயங்களான செட்டிங், பின்னணி எல்லாம் பளிச்சென்று ஆகிவிடும். இந்த யுக்தியை அனுவிடன் சொன்னேன். ஒரு வாரம் கழித்து, தாம் டிஸைன் செய்த உடைகளைக் காண்பித்த அனு, நான் என்ன விதமாகக் கற்பனை செய்திருந்தேனோ, அதை அப்படியே உடைகளில் வடிவமைத்திருந்தார்.

நான் அசந்து போனேன்'' என்றார் சந்தோஷ்.

அனுவிடம் பேசியபோது, இன்னும் கொஞ்சம் காஸ்ட்யூம் தகவல்கள் தேறின. ''டைரக்டர் சந்தோஷ், கதை சொல்லச் சொல்ல, அப்படியே உருகிப் போய் விட்டேன். கதையின் ஓட்டத்துக்கு ஏற்ப, த்ரிஷாவின் ஆடைகளை இரண்டு விதமாகப் பிரித்துக் கொண்டேன். மாடர்ன் உடைகளுக்கு காஷுவல் ஷிஃபான் ரகங்களையும், பாரம்பரிய உடைகளுக்கு மங்கள கிரி புடைவைகளையும் மட்டுமே பயன்படுத்தியிருக்கிறேன். ஒன்று படு பளபளப்பா இருக்கும். இன்னொன்று எளிமையா இருக்கும்'' என்றார்.

''இந்தப் படத்தில் த்ரிஷாவுக்கு 'மலர்' என்று பெயர். த்ரிஷாவே அழகு. அவரது நடிப்பு இன்னும் அழகு. இது முழுக்க முழுக்க கதாநாயகி சம்பந்தப்பட்ட கதை என்பதால், த்ரிஷாவின் முழுத் திறமையையும் இதில் பார்க்கலாம். அத்தனை ஜீவனுள்ள நடிப்பு'' என்றார் சந்தோஷ்.

* அனு





ஆடைச் சிறப்பிதழ்



* த்ரிஷா, ஸ்ரீகாந்த்

சந்தோஷ் பற்றி இன்னொரு செய்தி. 'விகடன்' 'பாக்யா' போன்ற பத்திரிகைகளில் ஆர்டிஸ்டாகப் பணியாற்றியவர். நல்ல ஓவியரும் கூட.

நிறங்களுக்கும் வண்ணச் சேர்க்கைக்கும் இவ்வளவு முக்கியத்துவம் தருவது இதனால்தானா?

– அனுராதா சேகர்

படம் : யோகா

# நாமும் கருணைக்கரம் காட்டலாமே!

காது இருந்தும் கேட்க முடியாத, வாய் இருந்தும் பேச முடியாத, மனமிருந்தும் மனவளர்ச்சி குன்றிய (மூளை வளர்ச்சி குன்றிய) எழுந்து நிற்க முடியாத 110–கை கால் ஊனமுற்ற அனாதை குழந்தைகளுக்கு, கடந்த பத்து ஆண்டுகளாக பொது மக்களின் மேலான ஒத்துழைப்புடன் உணவு, உடை, தங்குமிடம், மருத்துவம் இலவசமாக வழங்கப்பட்டு தேவையான கல்வியையும் கொடுத்து பராமரித்து வருகிறது, கோயமுத்தூர் தி யுனைடெட் ஊனமுற்றோர் பள்ளி.



**கல்பனா** வயது–14 வகுப்பு–8
போலியோ நோயால் பாதிக்கப்பட்டு
நடக்க இயலாமை



**மணிகண்டன்** வயது–13 வகுப்பு–7
இரு கால்களும் செயல் இழந்த நிலை



**கோபால்**
வயது–16 வகுப்பு–8
நடக்க இயலாமை



**ஷேக்** வயது–11 வகுப்பு–3
போலியோ நோயால் பாதிக்கப்பட்டு
நடக்க இயலாமை



**ஸ்ரீ ராம்** வயது–12 வகுப்பு–3
குஜராத் பூகம்பத்தில் பாதிக்கப்பட்டு,
பெற்றோரை இழந்து, ஒரு காலையும்
இழந்து, வாய் பேச இயலாமை



**இந்திரா**
வயது–12 வகுப்பு–1
மூளை வளர்ச்சியின்மையால்,
மனநிலை பாதிக்கப்பட்டவர்



**விசாலாட்சி**
வயது–18 மஞ்சள் காமாலை,
மூளைக் காய்ச்சலால் பாதிக்கப்பட்டு கை,
கால் செயல் இழந்து மற்றும் பேச இயலாமை



**மோகன் ராஜ்**
வயது–11
ஒரு காலை இழந்து, வாய் பேச
முடியாமை, காது கேட்காமை

தேசிய விருது, மாநில விருது, அன்னை தெரசா விருதினையும், ராஜா சர் முத்தையா செட்டியார் விருதினையும், பல பதக்கத்தினையும், பாராட்டினையும் பெற்றுள்ளது இப்பள்ளி. இப்பள்ளிக்கு உதவி செய்யும் நல்ல உள்ளங்களுக்காக அவர்கள் நலன் கருதியும், நீடூழி வாழவும், இப்பள்ளிக் குழந்தைகள் தினந்தோறும் பிரார்த்தனை செய்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. நம் பிறந்த நாள், திருமண நாள், மூதாதையர்கள் நினைவு நாள்களில் ஒரு நாள் உணவு வழங்கி உதவி செய்வோமே!

ஆலயங்கள் பல செல்லும் நாம், இந்த யுனைடெட் அனாதை ஆசிரமத்திற்கும் செல்வோமாக! நமது வாழ்வில் புண்ணியம் தேடி கோவில்களுக்குச் சென்று வழிபடுவதைப் போலவே இது போன்ற ஒரு பள்ளிக்கு விஜயம் செய்து வந்தால் கோடி புண்ணியம் கிடைப்பது நிச்சயம் . நிம்மதி தரும் ஆலயமாக செயல்பட்டு வருகின்ற கோவை-தி யுனைடெட் ஊனமுற்றோர் பள்ளிக்கு நாமும் உதவி செய்வோமாக!

சம்பளத்தின் ஒரு பகுதியை சமூக சேவைக்கு பயன் படுத்தலாம் என்ற பெர்னாட் ஷா வின் வார்த்தைகளை கடைப்பிடிப்போமாக.

இப்பள்ளியின் ஒரு நாள் உணவிற்கான செலவு ரூ.2,200/- ஆகிறது. இதற்காக பல நல்லவர்களின் உதவிகளை நாடுகிறார்கள்.

இயன்றதை செய்வோம்! இல்லாதவர்களுக்கு!!
நண்பர்களுடன் இணைந்து நாமும் மாதா மாதம் ஒரு நாள்
இவர்களின் உணவிற்கான செலவினை ஏற்றுக்கொள்ளலாமே!




Send your donations as DD / Cheque / MO in favour of

**The United Physically Handicapped School**

(An Institution for orphaned disabled children)

**96, Sathy Main Road, Kurumbapalayam, Coimbatore-641 107.**
**Tamil Nadu. INDIA Phone : 91-0422-667578, 667636.**

www.unitedhandicapped.org


* Donations are Tax exempt

# சங்கையா பொன்னம்மாள்



# பாச நெருப்பு

பசு மாடுகள் தரிசில் மேய்ந்து கொண்டிருந்தன. சாயங்கால வெய்யிலில் அருகம்புல்லும், ஆதாளையும், மத்தாங்கப்புல்லும் குளிர் பசுமையாகச் சிரித்தன. புல்லுக்குள் என் மகள் பேச்சி உறங்கிக் கொண்டிருக்கிறாள். மூன்று வயசுப்பிஞ்சு. சின்னக்கன்னத்தில் வழிந்திருக்கிற எச்சிலில் சாயங்காலச் சூரிய இனுக்கு.

பசிவெறி கொண்டு பறப்பெடுத்துப் போய் ஆவல் ஆவலாய்ப் புல்லை மேய்கிற பசுக்கள். "பர்ர்ர்ச்ச்ச், பர்ர்ர்ச்ச்ச்" கடிபடுகிற புற்களின் வீறிடல்.

செவலைப் பசு, ஒறங்கிக்கிட்டிருக்கிற எம்பேச்சியோட தலை முடி ரோமத்தைத் திங்குது. எம்புள்ளையையே திங்குது. பசுவாயில் கடிபட்டுத் தொங்குகிற பசுங்கொழை மாதிரி... பசுவாயில் தொங்குகிற எம் புள்ளையின் பிஞ்சுக்கால்கள்... என் குலக்கொடி. வம்சக் கொழுந்து. என் உயிரின் உருவம்.

'ஐயய்யோ... ஆத்தா! ஏம்புள்ளை... ஏஞ்செல்லம்... ஏங்கண்ணு... பசுமாடு தின்னுருச்சே... நா என்ன செய்வேன்....ஐயோ.'

..... அலறியடித்துக் கொண்டு விழித்தாள் பூவாயி. நெஞ்சுக்குள் திக்கென்று ஓர் அடைப்பு. மூச்சு பிரியவில்லை. திகிலடித்தவளாக கலகலத்துக்கிடந்த அவளை இருட்டு சூழ்ந்திருந்தது. தூரத்தில், பனங்காட்டில் மயில்கள் பதறிப் போடுகிற கூப்பாடு.

இருட்டுக்குள் துழாவுகிற உயிரின் பதற்றம். 'புள்ளை கிடக்கா?' சற்றுத் தள்ளி புரண்டு படுத்திருக்கிற மகன் மாடசாமி, துழாவுகிறகைக்குத் தட்டுப் பட்டான். ஹ......ம்மாடி!

பத்து வயசுப் பயல். அஞ்சாப்பு படிக்கிறான். மகனை இழுத்து தன் பக்கமாக வைத்துக் கொள்கிற கையில், மனசின் நடுக்கம். பதறித் தணிந்த மனசின் ஆசுவாசம்.

வியர்த்துக் கொட்டியிருக்கிற உடம்பு. பிடறி முடிகளைக்கூட நனைத்த வியர்வை.

'இப்படியுமா கனா வரும்? அடிவவுறே கலங்குற கனா...ச்சே!'

ஊர் முந்தி மாதிரியில்லை. நாலாசாதி சனமும் தாயாய் பிள்ளையாய் வாழ்ந்த நாள் போச்சு. கோவில் திருவிழா என்றால் ராவுத்தமார் பிரியாணி போட்டு கொண்டாடுகிறது, ரம்ஜான் வந்துட்டால் எல்லாத் தெருக்களிலும் கறிபுளி என்று கூத்தாடுகிறது... அப்படியிருந்த சௌஜன்யமான ஊர், இப்ப என்னவோ ராவணன் வேஷம் கட்டிக் கொண்ட மாதிரி தாறுமாறாக இருக்கிறது. குரூரமாக மாறி இருக்கிறது. இது புதுக்கோலம். புதுவேஷம்.

பாயாசத்துலே உப்பு போட்ட மாதிரியிருக்கு.

அன்பு இல்லே. பாசமில்லே. சகிப்புத் தன்மையில்லே. வெறுப்புணர்வு. பகை உணர்ச்சி. விறைப்புகள். முறைப்புகள், வம்புகளும் தும்பங்களும்

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட வைட்டமின் சிறுகதை - 9**

வந்து விடியுமோ? 'வெட்டுக்குத்து'ன்னு ரணகளமாயிருமோ ஊரு?



சரியில்லை. பஸ் ஸ்டாண்டில் வழக்கமான கூட்டமில்லை. அங்கொருதலை. இங்கொரு முகம். முகங்களில் ஒரு திகில். கிலி.

பூவாயிக்குள் பகீர் என்றது.

"என்ன... ஆள்போக்கு வரத்து இல்லாம, ஊரு காத்தாடுது?"

''சாதிக்கலவரம். ரெண்டு நாளா நடக்குது."

"எதுவும் சேதமா?"

''கறுப்புச் சாதியிலே நாலு சாய்ஞ்சிருச்சு. செவலைச் சாதியிலே ஒம்பது போயிருச்சு. இன்னிக்கு எம்புட்டுத் தலைக உருளுதோ?"

பயமில்லாமல் சொல்கிற பூச்சனை, வெறுப்பும் கடுப்புமாகப் பார்க்கிற பூவாயி. அவளுக்குள் பதற்ற அலை. காலெலும்பு உருவிக்கொண்ட மாதிரி,

> "என்னென்னமோ நடக்கு. யார் யாரோ செத்துட்டாக. என்னைக் கொல்லுறதுக்கு வாராக. நா....இங்க ஒளிஞ்சுக்கிடட்டா?"

**பே**ச்சிக்கு மொட்டை போடணும். இருக்கண்குடி மாரியம்மான் கோவிலில் பொங்கல் வைத்து மொட்டை போட நேர்த்திக் கடன். 'இப்பப் போவோம், பெறகு போவோம்' என்று நாளும் பொழுதும் போயிற்று. பூவாயி நச்சரிப்புத் தாளாமல், பூச்சனும் கிளம்பிவிட்டான், பேச்சியுடன். பொங்கல் வைக்கிற பச்சரிசி, வெல்லம், சட்டி, கரண்டி என்று மூட்டை முடிச்சுகள். பை நிறைய சாமான்கள்.

சாத்தூர் வந்து இறங்கினால்... நிலவரம்

தொடைச் சதையே தொளதொளவென்றாகி, நடுக்கமெடுக்கிறது. அப்பிய பயத்தில் வெளுக்கிற முகம். பலவீனமாகி படபடக்கிற

நெஞ்சு. நா உலர்ந்தது. தலைச் சுமையை இறுக்கிப் பிடித்துக் கொண்டாள். வயிற்றில் நாலுமாசச்சுமை வேறு.

பூவாயியின் பயப் பார்வை. அசட்டுத்தன மாகச் சிரித்த பூச்சன்.

"இந்த மாதிரி நெலவரம்னு தெரிஞ்சுருந் துமா, கோவிலுக்குப் போவலாம்னு கௌப் புனே?"

"நீதான்... நச்சரிச்சுப் புடுங்குனேல்லே?"

"இப்படி நெலைமைன்னு சொல்றது தானே?"

"ஒனக்கு பயமாயிருக்கா?"

"வெட்டும் குத்துமா கொலைபாதகம் நடக்கிற ஊர்லே பயமாயிருக்காதா? பயப் பட வேண்டாமா, அறிவுகெட்ட மனுசா?"

"நாம எதுக்குப் பயப்படணும்? நாம அசலூரு. கறுப்புச் சாதியுமில்லே, செவலைச் சாதியுமில்லா, நாம, வேற சாதி. என்னத் துக்குப் பதறணும்?"

"இருந்தாலும்... நீ கூறுகெட்ட ஆளுதான். அருவாளும், மூர்க்கமுமா சாதி வெறிபுடிச்சு வர்ற வெறிநாய்களுக்கு அசலூரு தெரியுமா, அடுத்த சாதி தெரியுமா? நெறத்தைப் பாத்துப் போட்டுத் தள்ளிட்டா?"

போட்டுத் தள்ளிவிட்டது. திடுமென்று வந்த வெறிக்கும்பல், மூடிமுழிக்கும் முன் நடந்து விட்டது. சில கண நிகழ்வுப் பயங் கரம்.

மூன்றாவது வெட்டு, பேச்சியையும் பூச்சனையும் சேர்த்து நெஞ்சில் விழுந்தது.

தலையிலும் மார்பிலும் அடித்துக் கொண்டு, 'கோ'வென்று கதறியழுத பூவாயி, "ஐயோ... ஆணிவேரையும் பூவையும் அறுத் துட்டாங்களே... பாவிப்பயக. வெறுங் கழுதையா என்னை விட்டுட்டுப் போச்சே..."

கண்ணீரும் கதறலுமாய் நனைந்த காகித மாக நைந்து கிடந்த பூவாயியை, தாமதமாக வந்த போலீஸ் படை சூழ்ந்து கொண்டது.

**பே**ச்சியோடு சேர்ந்து கழுத்துப் புருஷனும் போய்ச் சேர்ந்து விட்டான். வயிற்றுச் சுமை. புருஷனின் உயிர். பூச்சனின் அச்சு.

அதுவே வாழ்வாகவும், வாழ்வதற்கான வைராக்யமாகவும் இருந்தது. இதோ... பக் கத்தில் பத்து வயசு மாடசாமி, அய்யாவைப் பார்த்ததில்லை. பூச்சனின் மரணத்துக்கு அரசு தந்த ஒருலட்சம். அதில் பாதி, மாட சாமி பெயரில் வங்கியில்.

இருந்து என்ன செய்ய? துணை? வாழ வேண்டிய தாம்பத்தியம்? சூன்யமாகிப் போனதில் ஒரு சுனையாக, மாடசாமி.

இருட்டுக்குள் விழித்திருந்தாள். மனசுக் குள்... செத்துக் கிடந்த பூச்சன்.

அவளுக்குள் குமுறிப் பீறிட்டுவந்த துன்பம். அடிவயிற்றில் வெறுமையானமாதிரி யோர் சோகப்பசீர். உடைப்பெடுத்துக் கொண்டு வந்த அழுகை. "ஐய்யோ... ஐயா, எஞ்சாமீ... எங்கருவேப்பிலைக் கொழுந்தே... என்னை நாதியத்து தவிக்கவுட்டுட்டு... இந்த மண்ணுலே கெடந்து சீரழியவுட்டுட்டு... நீங்க மட்டும் மண்ணுக்குள்ளே போய்ட்டீகளே... எம் பொழைப்புலே மண்ணள்ளிப் போட்டுட்டீகளே... இது நாயமா? அடக் கூத்துவனே... ஒனக்கும் கண்ணு அவிஞ்சு போச்சா? இந்தக் கூத்து கட்டணுமா?"

**நி**சப்தத்தின் நெஞ்சைக் கிழித்துக் கொண்டு வருகிற காலடிகளின் சத்தம். திகிலையும், பீதியையும் சுவடாக விட்டுச் செல்கிற மனிதக் கூச்சல். கோபமும் ஆத்திர முமான வெறிக் கூத்தாட்டம். ஒரு கூட்டமே ஓடுகிற தடபுடக் கூப்பாடு.

"வெட்டுங்கடா... விடாதீகடா... வம்சத் தையே அழிக்கணும்டா... போட்டுத் தள்ளுங் கடா... தீயை வைங்கடா... ஓடுகளை உடைங் கடா... கல்லுகளை வீசுங்கடா..."

மிருகங்களின் மனிதக் குரல்கள்.

பூவாயிக்குள் பாய்கிற திகில்கத்தி. குலை நடுக்கம். பயத்தில் வியர்க்கிறது. கொலைபாத கத்தைப் பார்த்தவள். கண்ணெதிரே வெட்டுப்பட்டு, வெதுவெதுப்பான ரத்தம் கொப்பளித்த கோரத்தை ருசித்தவள்.

பதறியடித்துக் கொண்டு, கதவைத் திறந்து வெளியே எட்டிப் பார்த்தாள்.

தூரத்தில்... ராமம்மாள் அவள் வீட்டு முற்றத்தில் நிற்கிறாள். தலைமுடியை அள்ளி முடிந்து கொண்டு, எச்சிலைத் துப்பிக் கொண்டிருந்த அவளிடம் ஓடிவந்தாள், பூவாயி.

"படம் ஓடலைன்னு பணத்தைத் திருப்பிக் கொடுத்திருக்கக் கூடாது!"

"ஏன்?"

"டிக்கட் பணத்தைத் திரும்பக் கேட்டு, படம் பார்த்த ரசிகர்கள் சாரிசாரியா வீடு தேடி வர்றாங்க!"

— அம்பை தேவா

"என்ன மயினி... வெட்டு, குத்துன்னு ஒரே கூவல்காடா இருக்கே... என்ன விஷயம்?"

''புள்ளையார் செலையை யாரோ ஒடைச்சிட்டாகளாம்.''

"ஐயய்யோ... இதென்ன கொடுமை? யாராம்?"

''ராவுத்தமாராகத்தான் இருக்கும்னு... நம்மாளுக நெனைப்பு. மனசு கொதிச்சுப் போய் படைபடையாய்ப் போறாக...''

"பெறவு?"

"இன்னிக்கு எத்தனை தலைக உருளுதோ? எத்தனை வீடுக நொறுங்குதோ...? என்னென்ன எழவெல்லாம் நடக்கப் போகுதோ? எல்லாம்...ம் தலைகீழாகிப் போச்சு... நம்ம தலையிலே என்னென்ன இடி வந்து விடியப் போகுதோ...''

பூவாயிக்குள் மிரட்சி. உள்மனம் அச்சத்தில் நனைந்து துவண்டது. அறுபட்ட சனல் துண்டாக அந்தரத்தில் நடுங்குகிற உணர்வு.

பேய்பிசாசைப் பார்த்த மாதிரி திலைடித்துப் போய் ஓடி வந்து கதவைப் பூட்டிக் கொண்டாள். வீட்டின் இருட்டு, ஒரு பாது காப்புணர்வு தந்தது. தெருவின் ஆரவாரக் குரல்கள் அடிவயிற்றை அறுத்தது.

கதவு தட்டப்படுதோ... சின்ன விரல்கள் பயந்து பயந்து மெல்லத் தட்டுகிற மாதிரி ஒரு சின்ன சத்தம்.

அவளுக்குள் பரவுகிற அச்சச் சிலிர்ப்பு. நெஞ்சு வறள்கிறது. திக்கென்று திகைக்கிறது. அடித் தொண்டையில் நடுங்கும் குரல்.

"யாரது...?"

"நா....ந்தான்" ஒரு பிஞ்சுக்குரல். அதுவும் பயத்தில் நனைந்து நடுநடுங்குகிற குரல்.

பூவாயி கதவைத் திறந்தாள், தயங்கித் தயங்கி. மனசுக்குள் நூறு நூறு நினைவுகள். மருட்சி. கலக்கம்.

"யாருப்பா...?"

யூசுப் நின்றான். மாடசாமி கூடப் படிக்கிறவன். அடிக்கடி வீட்டுக்கு வருகிறவன். அவனது சின்ன முகத்தில் மரணபயம். அறுபட்ட பல்லி வாலாக துடிக்கிற இமைகள். அவனது இடுப்பில் மூன்றுவயசுத் தங்கச்சி.

"என்னப்பா... தம்பி...?"

அவன் உதடுகள் உலர்ந்து போய்... பயத்தில் நா தடுமாற... வாய் பேசமுடியாமல் மூச்சிரைத்தான்.

"என்னென்னமோ நடக்கு. யார் யாரோ செத்துட்டாக. என்னைக் கொல்லுறதுக்கு வாராக. நா....இங்க ஒளிஞ்சுக்கிடட்டா?"

வாசலை மறித்து நிற்கிற பூவாயி. அவளுக்குள் கொதிபாலைக் குடித்த பூனையின் பீதி. கும்பல் வன்முறையை உணர்ந்தவள். யூசுப்பை தேடி வருகிற கும்பல், வீட்டை நாசம் பண்ணும். மாடசாமியைக் கொல்லும். தன்னையும் வெட்டிச் சரிக்கும். மதயானை காலில் சிக்கிய மண் குடமாய் தன் குடும்பம்.

"இ.......ங்..........கே.......யா?"

அவளது தயக்கத்தில் அதிர்ந்து போன அந்தப்பிஞ்சு. நம்பிக்கை சிதறிப் போன உணர்வு. நம்ம ஃப்ரெண்டு வீடுன்னு உரிமையோட வந்த இடத்தில்...முகத்தில் வந்து மோதுகிற அந்நியம்.

''ராமம்மா வீட்டுக்குள்ளே போயிரட்டா?" புகலற்ற கிலியில் கேட்கிற யூசுப். வெள்ளந்தியாகக் கேட்கிற அரும்பு.

பூவாயியின் பார்வை, யூசுப்பின் இடுப்பிலிருக்கும் தங்கச்சி மேல். பேச்சி மாதிரியோர் தோற்றம். அதே வயசு. அதே முகச் சாயல்.

பேச்சி...பேச்சி....பேச்சி....

அடிவயிற்றுக்குள்ளிருந்து மேலெழுந்து வருகிற பாச உணர்ச்சி. நேசமிருந்து, குபுக்கென்று பீறிட்டு வருகிற சுயம். மானுடப் பேரன்பு. பூப்போன்ற தாயன்பு. எதையும் தாங்குகிற தீப்போன்ற தாய்ப்பாசம்.

"இங்க.... உள்ளே வாப்பா..."

"எங்களாலே உங்களுக்குத் தொல்லை வருமே..."

''சாவே வேணும்னாலும் வரட்டும். நீங்களும் எம்புள்ளைகதான்...'' அவர்களை உள்ளிழுத்து, கதவைச் சாத்தினாள், பூவாயி.

அச்சத்தைக் காலில் போட்டு மிதித்த தாய்மை வீரமாய் பூவாயி. நூறு கோடி பிள்ளைகளையும் ஆரத்தழுவிக் கொள்கிற பாரதத்தாயாக அவள் முகத்தில் கருணைப் பூவின் மலர்ச்சியும், ரௌத்ரவெக்கையும் கலந்து, பேரழகு பிரகாசித்தது. ○



CHARY'S

# வெற்றி பெற்ற வாரிசு!

● தி.மு.க.வில் உற்சாகம் குதியாட்டம் போடுகிறது. அதற்குக் காரணம் ஸ்டாலின் தலைமையில் நடந்த இளைஞரணி ஆர்ப்பாட்டம், எதிர்பார்த்ததை விட பிரம்மாண்ட வெற்றி பெற்றதுதான். "ஆர்ப்பாட்டத்துக்கு முன் தடுப்புக் காவல் சட்டத்தில் நூற்றுக்கணக்கில் பிடிபட்டவர்களுக்கு ஜாமீன் இல்லை என்று சொன்னார்கள். ஆர்ப்பாட்டத்தின் போது கைது செய்யப்பட்டால் தீபாவளி ஜெயிலில்தான் என்று பயமுறுத்தினார்கள். ஆனால் எதற்கும் பயப்படாமல் ஆயிரக்கணக்கான இளைஞர்கள் கையில் பெட்டி, படுக்கையுடன் மறியலுக்கு வந்து விட்டனர். ஆனால் அரசுதான் பயந்துகொண்டு அவர்களைக் கைது செய்யவில்லை" என்று சொன்னார் ஒரு தி.மு.க பிரமுகர்.



"இந்த ஆர்ப்பாட்டம், மறியல் மூலம் தி.மு.க.வின் எதிர்காலத் தலைவர் மு.க.ஸ்டாலின்தான் என்பதும், அழகிரிக்குக் கட்சித் தொண்டர்களின் பின்பலம் இல்லை என்பதும் தெளிவாக்கப்பட்டுவிட்டது. இனியாவது கட்சித் தலைமை அழகிரிக்கு ஊக்கமளிக்காமல் இருக்க வேண்டும்" என்றார் அந்தப் பிரமுகர்.

## காதில் விழுந்தவை

● 2000-2001ல் தமிழகத்திற்கு மலைவாழ் மக்கள் நலனுக்காக மத்திய அரசால் ஒதுக்கப்பட்ட சுமார் எட்டரை கோடி ரூபாய் செலவழிக்கப்படாமலேயே சரண்டர் செய்யப்பட்டது. தமிழக சமதா கட்சியின் மாநிலத் தலைவர் நந்தகுமார் மத்திய அரசு பல்வேறு இலாகாக்களில் செயல்படுத்தும் நலத்திட்டங்களின் விவரங்களை, அந்தந்த அமைச்சர்களைச் சந்தித்துப் பெற முனைந்தபோது இந்தத் தகவல் தெரிய வந்ததாம். "பல திட்டங்களைப் பற்றி மக்களுக்குச் சரிவரத் தெரிவதில்லை. இதனால் ஒதுக்கப்பட்ட பணம் செலவழிக்கப் படாமலேயே போகிறது. இப்போது நாங்கள் அந்தத் திட்டங்களைப் பற்றி மக்களிடம் எடுத்துச் சொல்வதில் ஈடுபட்டிருக்கிறோம்" என்கிறார் நந்தகுமார்.

● பி.ஸி. கணேசன் எழுதிய 'அண்ணாவின் வாழ்க்கை வரலாறு' புத்தகத்தை, சில காரணங்களுக்காக மத்திய அரசு புத்தகப் பதிப்புத் துறை பதிப்பிக்காமல் பத்து வருடம் நிறுத்தி வைத்திருக்கிறது, என்பதை இந்தப் பகுதியில் குறிப்பிட்டிருந்தோம். ஆனால் லேட்டஸ்டாக வந்த செய்தியின்படி, மத்திய அரசு, இப் புத்தகத்தை எழுதிய வண்ணமே பிரசுரிக்க ஒப்புக் கொண்டு விட்டதாம்.

- சஞ்சயன்

படம்: சௌரா

# குழந்தை பெற முக்கூட்டு மருத்துவம்

குழந்தைப்பேறு இல்லாத தம்பதிகள் பிள்ளைவரம் வேண்டி இனி எங்கேயும் அலைய வேண்டாம். குழந்தை பெறாமைக்கு குறைபாடு கணவனிடம் இருந்தாலும் சரி, மனைவியிடம் இருந்தாலும் சரி, 'ஹோமியோபதி – சித்தா – ஆயுர்வேதம் முக்கூட்டு மருத்துவத்தின் மூலம் மலட்டுத்தன்மை நீக்கி குழந்தை பிறக்கச் செய்கிறார்கள் டாக்டர் ஏ. அர்ஜுனா, டாக்டர் வி.ஏ.ஆண்டாள் அர்ஜுனா, 'நவீனா வைத்தியாலயா' என்ற பெயரில் இவர்கள் ஆஸ்பத்திரி நடத்தி வருகிறார்கள்.

ஆண்களுக்கு அறவே உயிரணு உற்பத்தி இல்லாமல் இருந்தாலும், உயிரணு உற்பத்தி குறைவாக இருந்தாலும் முக்கூட்டு மருத்துவத்தில் குறைபாடுகளை நீக்கி கருத்தரிக்கச் செய்கிறார்கள்.

பெண்களுக்கு மாதவிடாய் ஒழுங்குபடுத்தியும், கருப்பை ஓவரிகளை வளரச் செய்தும், கருப்பையிலும் ஓவரியிலும் உள்ள கட்டிகளை கரைத்தும், கருமுட்டை உற்பத்தி செய்தும், வெடிக்கச் செய்தும், கருக்குழாய் அடைப்பு நீக்கியும், சூதக வயிற்று வலியை நீக்கியும் முக்கூட்டு மருத்துவத்தால் கருத்தரிக்கச் செய்கிறார்கள். சிலருக்கு ஒரு மாத சிகிச்சையிலும், சிலருக்கு சில மாத சிகிச்சையிலும் குழந்தை பிறக்கச் செய்கிறார்கள். இவர்களுடைய முக்கூட்டு மருத்துவத்தில் 90 சதவீதம் வெற்றிவாய்ப்பு உண்டு. **டாக்டர் ஏ. அர்ஜுனா,** மருத்துவத்துறையில் 42 ஆண்டு அனுபவ முள்ளவர்.



• திருவண்ணாமலை மாவட்டம் இரும்பேடு கிராமத்தைச் சேர்ந்த புஷ்பா சக்ரபாணி தம்பதியருக்கு (உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாய் அடைப்பு நீங்கியும்) பிறந்த குழந்தைகள்

இவரது முக்கூட்டு சிகிச்சை மூலம் அண்மையில் குழந்தை பெற்றவர்கள் விவரம் வருமாறு:

1. விழுப்புரம் மாவட்டம் செஞ்சியைச் சேர்ந்த முருகன் – தமிழரசி தம்பதிக்கு ஒரே மாத முக்கூட்டு சிகிச்சையில் 20.8.2002-ல் ஆண் குழந்தை பிறந்துள்ளது.

2. திருவண்ணாமலை டவுனில் ஒரு தம்பதியர் தற்போது ஆறு மாத கர்ப்பவதியாக உள்ளார்.

3. மேற்கு வங்காள மாநிலத்தில் கல்கத்தாவில் திருமதி. பரணி சுரேஷ்

தம்பதியர் தற்போது மூன்று மாத கர்ப்பவதியாக உள்ளார்.

4. பெரம்பலூர் மாவட்டம் உடையார்பாளையத்தில் கிருஷ்ண மூர்த்தி _ கஜலட்சுமி தம்பதியருக்கு குழந்தை பிறந்துள்ளது.

5. துபாயில் திருமதி. நாசர்பாய்க்கு பெண்குழந்தை பிறந்து ஆறு மாத மாகிறது.

6. தஞ்சாவூர் மாவட்டம் அகர மாங்குடியில் காமராஜ் தம்பதிக்கு பெண் குழந்தை பிறந்துள்ளது.

7. தஞ்சாவூர் புரசகுடியில் சவுந்தர் ராஜன் _ வனரோஜா தம்பதியருக்கு முக்கூட்டு சிகிச்சையால் ஏற்கெனவே ஒரு பையன் பிறந்துள்ளான். மீண்டும் தற்போது வனரோஜா 10 மாத கர்ப்பவதியாக உள்ளார்.

8. தேவகோட்டையில் ஜமுனா - லட்சுமணன் தம்பதியருக்கு பெண் குழந்தை பிறந்துள்ளது.

9. மோகனவேலு _ கிதாஞ்சலி (H.M.T. லே அவுட், கொடஹல்லி ரோடு, பெங்களூர்) தம்பதியருக்கு ஒரு பையன், ஒரு பெண் பிறந்துள்ளார்கள்.

கோவை பெரியநாயக்கன் பாளை யத்தைச் சேர்ந்த லோகநாதன் என்ப வருக்கு அறவே உயிரணு இல்லை. ஒரே மாத முக்கூட்டு மருந்தினால் 110 மில்லியனும், 20 சதவிகிதம் மொட்டி லிட்டியும் உற்பத்தி ஆகியுள்ளது.

சென்னையைச் சேர்ந்த ரகு என்பவருக்கு 29 மில்லியன் இருந்தது. முக்கூட்டு சிகிச்சையால் 160 மில்லியன் உயர்ந்துள்ளது.

குழந்தை இல்லாத தம்பதியர்கள் டாக்டர் அர்ஜுனா _ ஆண்டாளிடம் முக்கூட்டு சிகிச்சை பெற்றால் வெற்றிகரமாக குழந்தை பெறலாம். தமிழ்நாட்டிலும், இந்தியாவில் எல்லா மாநிலங்களிலும் உலகில் எல்லா வெளிநாடுகளிலிருந்தும் வந்து இவர் களிடம் முக்கூட்டு சிகிச்சை பெற்று பலனடைகிறார்கள்.

## நவீன வைத்தியாலயா

ஹோமியோபதி _ சித்தா _ ஆயுர் வேத மலடு நீக்கும் ஆஸ்பத்திரி

**சென்னையில்** சனி, ஞாயிறு, திங்களில் டாக்டரை சந்திக்குமிடம் —

எண்: 65, 100 அடி ரிங் ரோடு,
(டி.எஸ்.கவுரிசங்கர் கல்யாண மண்ட பம் எதிரில்),
வடபழனி, சென்னை - 600 026.
போன்: 044 - 4833464

**வந்தவாசியில்** செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய தினங்களில் டாக்டரை சந்திக்குமிடம்.

எண். 30, பிராமணர் தெரு,
ஈஸ்வரன் கோவில் அருகில்,
வந்தவாசி,
திருவண்ணாமலை
மாவட்டம் — 604 408.
போன்: 225208, 226180
S.T.D.-04183
செல்போன்: 098423 - 25208



மருத்துவ திலகம்
டாக்டர் A. அர்ஜுனா,
டாக்டர் V. A.ஆண்டாள் அர்ஜுனா,

ADVT

## –திக்... திக்... திருப்பூர்

# பின்னடைவில் பின்னலாடை?



• திருப்பூர் நிட்ஃபேரில் வெளிநாட்டு வாடிக்கையாளர்கள்.



மிரட்டும் கடிகார முட்களை கவனித்தபடி, மிதி வண்டிகள், பேருந்துகளில் வியர்க்க விறுவிறுக்க, விரைகிற தொழிலாளி வர்க்கம்.

விலையுயர்ந்த கார்களில், டென்னிஸ் மட்டைகளோடு கார்ப்பரேட் இளைப்புகளை வலம் வரும் முதலாளி வர்க்கம். தடுக்கி விழுந்தால் அடிக்கொரு தொழிற்சாலை, தாராளமாய்ப் புரளும் கோடிகள், இதுதான் இன்றைய திருப்பூர். ஒரு காலத்தில் 'பனியன்சிட்டி' என்று அழைக்கப்பட்ட, இந்த சின்னஞ்சிறு நகராட்சி, இன்று 'எக்ஸ்போர்ட் சிட்டி'யாகி, நாட்டுக்கு அந்நியச்செலாவணி ஈட்டித் தருவதில், 'நான்தான் நம்பர் ஒன் ஹீரோ'என்று பெருமையாகக் காலரைத்தூக்கி விட்டுக் கொள்ளும் பின்னலாடைத் தலைநகரம். ஆனால், எதிர்வரும் 2005 – ஜனவரி முதல் தேதிக்குப் பிறகு, தனது பெருமையை தக்கவைத்துக் கொள்ளுமா? என்ற கேள்வி இடியாய் இப்போது இறங்கியிருக்கிறது! 2005_ல் என்ன நடக்கப் போகிறது? அதற்கு முன்பு திருப்பூர் பற்றிய நிஜமான சில புள்ளி விவரங்கள்:

ஆறு லட்சம் பேர் வசித்துவரும் திருப்பூர் மக்கள் தொகையில் இரண்டு லட்சம் பேர் பின்னலாடை மற்றும் ஆயத்த ஆடை தொழிற்சாலைகளில் பணிபுரிந்து வருகிறார்கள். எஞ்சிய நான்கு லட்சம் பேரும் ஏதோ ஒரு வகையில் இந்தத் தொழிலோடும், இதன் துணைத் தொழில்களோடும் தொடர்பு கொண்டவர்கள்.

எழுபதுகள் வரையிலும் உள்நாட்டுச் சந்தையை மட்டுமே நம்பியிருந்த திருப்பூர், முதன்முதலாக 1985 – ல் டீ – ஷர்ட்டுகளை ஏற்றுமதி செய்த வகையில் பத்தொன்பது கோடி ரூபாய் அந்நியச் செலாவாணியாக ஈட்டியது. தொடர்ந்து உலக அளவில் மற்ற ஆடைகளையும் மளமளவென்று ஏற்றுமதி செய்யத் தொடங்கியது. குறிப்பாக கார்டிகன்ஸ், ஜெர்சி, புல்ஓவர்ஸ், ப்ளௌசஸ், ஸ்கர்ட்ஸ் உள்ளிட்ட மகளிர்

ஆடைகள்; டிரெஸசர்ஸ், நைட்வேர், ஸ்போர்ட்ஸ்வேர், இண்டஸ்ட்ரிஸ்வேர் என வந்து குவிந்த எந்த வெளிநாட்டு ஆர்டருக்கும் சளைக்காமல் ஈடுகொடுத்ததன் விளைவாக ஏற்றுமதி மளமளவென்று உயர்ந்தது. கடந்த 2001 – நிதியாண்டில் மட்டும் 3468கோடி ரூபாயைத் தொட்டது. நடப்பு நிதியாண்டிலோ, இது ஐயாயிரம் கோடியைத் தாண்டும் என்பது



• பின்னலாடை ஃபேஷன் ஷோ...

அப்பேரல் எக்ஸ்போர்ட் ப்ரமோஷன் கவுன்சிலின் எதிர்பார்ப்பு. இருபது ஆண்டுகளில் பத்தொன்பது கோடி ரூபாயிலிருந்து ஐயாயிரம் கோடி ரூபாய் அந்நியச் செலாவணியை, அநாயாசமாக ஒரு சின்னத் தொழில் நகரத்தால் எப்படி ஈட்டித்தரமுடிந்தது?

உள்நாட்டுச் சந்தையிலிருந்து உலகச் சந்தைக்குள் தனது ஏற்றுமதி இழைகளை இத்தனை வலுவாக எப்படிப் பின்ன முடிந்தது? காரணங்களை அடுக்கலாம் என்றாலும், மிக முக்கியக் காரணம் கோட்டா முறை. இதன்மூலம் குறிப்பிட்ட நாட்டுக்கு, குறிப்பிட்ட ரகங்களை, குறிப்பிட்ட அளவு இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்ய உத்தரவாதம் தரப்பட்டது.

# ஆடைச் சிறப்பிதழ்



விளைவு: ஐரோப்பா, அமெரிக்கா, கனடா, ஜப்பான் என திருப்பூரை உலகம் முழுவதும் உச்சரிக்கப்படும் மந்திர வார்த்தையாக்கியது, கோட்டாமுறை. எதிர் வரும் 2005 ஜனவரி மாதம் முதல் தேதி முதல் உலக வர்த்தக ஒப்பந்தம் அமலுக்கு வருவதால், சந்தைக் கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டு, கோட்டா முறை காலாவதியாகிறது. இத்தனை குறுகிய காலத்தில் திருப்பூர் அசுர வளர்ச்சி பெறக் காரணமாக இருந்த கோட்டா சந்தை முறை ரத்தாவது உறுதியாகி விட்ட நிலையில், யார் வேண்டுமானாலும், இந்தியச் சந்தைக்குள்



• பின்னலாடை இயந்திரம்



• சக்திவேல்

நுழையலாம்... உலக வர்த்தக ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுள்ள எந்த நாட்டுச் சந்தையிலும் இடம் பிடிக்கலாம். இந்த சுதந்திர வணிக மயம், திருப்பூருக்கு மிகப் பெரிய சவாலாக பயமுறுத்திக் கொண்டிருக்கிறது. இந்த சவாலைச் சந்திக்க திருப்பூர் தயாராகி விட்டதா?

“நாங்கள் இரண்டாயிரமாவது ஆண்டிலேயே தயாராகிவிட்டோம்” என்கிறார் திருப்பூர் ஏற்றுமதியாளர் சங்கத் தலைவரான சக்திவேல்.

“2005க்குப் பிறகு போட்டி கடுமையாக இருக்கும். நவீன ஃபேஷன், நல்லதரம், குறைந்த விலையில் கொடுத்தால்தான் உலகச் சந்தையைச் சந்திக்க முடியும். இதற்கென்று இப்போதே தொழிற்சாலைகளை நவீனமயமாக்கி வருகிறோம். மத்திய அரசின் உதவியோடு, நவீன ஆயத்த ஆடைகள் பூங்கா உருவாக்கும் முயற்சியையும் முடுக்கி விட்டிருக்கிறோம். முக்கியமாக, திருப்பூரிலிருந்து தயாரிக்கப்பட்டு ஏற்றுமதி செய்யப்படும் பின்னலாடைகளுக்கு ‘மேட் இன் இண்டியா’ என்ற பொதுவான பிராண்ட் பெயரைப் பெற்று, உலகச் சந்தையைக் கலபமாகச் சந்திப்போம். என்றாலும், இந்த கண்டத்திலிருந்து சிறு ஏற்றுமதியாளர்கள் தாக்குப் பிடிப்பது கஷ்டம்தான்” என்று ஒப்புக் கொள்கிறார் சக்திவேல். “சிறு ஏற்றுமதியாளர்கள் என்ன? ஆண்டுக்கு ஐந்நூறு கோடி ரூபாய்க்கு ஏற்றுமதி செய்யும் டாப்டென் நிறுவனங்கள் கூட, ஆட்டம் காணும் அபாயம் நேரலாம்” என்கிறார் உலக வர்த்தக ஒப்பந்தத்தை எதிர்க்கும் திருப்பூர் ஏ.ஐ.டி.யூ.சி பனியன் பேக்டரி தொழிலாளர் சங்கச் செயலாளர் சி. பழனிச்சாமி.

“திருப்பூரின் பின்னலாடை மற்றும் ஆயத்த ஆடைகள், அமெரிக்கா உள்ளிட்ட வளர்ச்சி பெற்ற நாடுகளின் சந்தைக்குச் செல்வதும், அங்கே வாடிக்கையாளர் மனத்தில் இடம் பிடிப்பதும் ஆரோக்கியமான விஷயம் தான். ஆனால் ஜவுளி இறக்குமதிக்கான தடைகள் அனைத்தையும் இந்திய அரசு அகற்றியிருப்பது போல, வளர்ச்சி பெற்ற நாடுகள், தங்கள் நாடுகளில், இந்திய ஆடை இறக்குமதியைத் தடையின்றி அனுமதிக்கவில்லை. அமெரிக்காவில் பயன்படுத்தப்படும் எழுநூற்றைம்பது ஆயத்த ஆடை ரகங்களில், பதின்மூன்றை மட்டுமே இந்தியா உள்ளிட்ட இதர நாடுகள் ஏற்றுமதி செய்ய முடியும். எஞ்சிய எழுநூற்று முப்பத்தேழு ரகங்களைத் தனது நாட்டில் மட்டுமே உற்பத்தி செய்வதோடு, அவற்றுக்கு இறக்குமதியால் எந்தப் பங்கமும் வராமல் பாதுகாக்கிறது. இதே போல் ஐரோப்பிய நாடுகளில் பயன்படுத்தப்படும் இருநூற்றுப் பத்தொன்பது ரகங்களில் வெறும் பதினான்கு ரகங்களையும், கனடாவில் பயன்படும் இருநூற்றுத் தொண்ணூற்று ஐந்து ஆயத்த ஆடை ரகங்களில் இருபத்தொன்பதை மட்டுமே இந்தியா ஏற்றுமதி செய்ய முடியும்.



• வசந்தகுமார்

அதே நேரம் இந்தியா போன்ற வளர்முக நாட்டின் சந்தைகள் முழுவதும், தங்குதடையில்லாமல் அந்நிய நாடுகளால் கைப்பற்றப்பட்டு, உள்நாட்டுத் தொழில்களுக்கு இப்போதே நேரடிப்போட்டியாக வந்துவிட்டன. இரண்டாயிரத்து ஐந்திற்குப் பிறகு திறந்த வீட்டில் திருடன் நுழைந்ததுபோல இது மேலும் கலபமாகி விடும்” எனவும் பழனிச்சாமி கடுமையான உதாரணம் காட்டிப் பேசுகிறார்.

“இந்தியாவுக்குள் வந்த பெப்ஸியும், கோககோலாவும் இந்தியாவின் அனைத்து உள்நாட்டு மென்பான நிறுவனங்களையும் ஒன்றுவிடாமல் அழித்துவிட்டன. குடிதண்ணீர் விற்பனையில் கூட அக்வாபினா (பெப்சி), கின்லே (கோகோ கோலா) ஆகியவையே சந்தையை முழுவதுமாகப் பிடித்துவிட்டன. இவ்விரு பிராண்டு தண்ணீரும் ஆண்டுக்கு ஐயாயிரம் கோடிக்கு மேல் இந்தியாவில் மட்டும் விற்பனை செய்யப்படுவதை மறந்து விடக் கூடாது. இதே நிலை நாளை திருப்பூர் பின்னலாடைக்கும் வராது என்று எப்படி நிச்சயமாகச் சொல்ல முடியும்? திருப்பூரைவிடத் தரமாகவும், விலை குறைவாகவும் சீனாவாலும் ஏசியன் டைகர்ஸ் எனப்படும் ஹாங்காங், தைவான், தென்கொரியா

• பரமசிவம்



போன்ற நாடுகளாலும் தர முடியும் பட்சத்தில், திருப்பூரின் ஏற்றுமதிக்கு எப்படி பங்கம் வராமல் இருக்கும்?" என்கிறார் இவர்.

"ஆனால் இந்த நாடுகளை விடவும் சிறந்த தரம், இயற்கைச் சாயம், ஐ.எஸ்ஓ. தரத்துடன் இப்போதே திருப்பூர் பின்னலாடைகளைக் குறித்த நேரத்தில் சப்ளை செய்கிறது. திருப்பூர் பின்னலாடைகளுக்கு உலக அளவில் ஏற்கெனவே மரியாதையை உருவாக்கிவிட்டோம். சீஸன் தோறும் சர்வதேச ஃபேஷன் ஷோக்கள், சர்வதேச பின்னலாடைத் தொழில்நுட்ப கண்காட்சிகள், உலகளாவிய தொழில் நுட்பக் கூட்டுறவுகள், ஏற்றுமதியாளர், இறக்குமதியாளர் மாநாடுகள் போன்ற, பல ஆக்கபூர்வமான செயல்களை, அப்பேரல் எக்ஸ்போர்ட் புரமோஷன் கவுன்சில் முழுவீச்சில் செய்து வருகிறது" என்கிறார் ஏ.ஈ.பி.சியின் இணை இயக்குனரான கே.வசந்த் குமார்.

இப்போதைக்கு உலக வர்த்தக ஒப்பந்தம் பற்றிய கவலையோ, பயமோ இல்லாமல் இருக்கும் பெரிய ஏற்றுமதியாளர்கள், தனிப்பட்ட முறையில் தங்கள் ஏற்றுமதியைத் தற்காத்துக் கொள்ள முனைந்திருக்கிறார்களா? எஸ்சி.எம். ஒரியேஷன்ஸ் ஏற்றுமதி நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் கே. பரமசிவம் சொல்கிறார், "இறக்குமதியாளர்கள் திருப்பூரைத் தேடி வர வேண்டிய அவசியம் இல்லாதவாறு எங்கள் நிறுவனத்திற்கென்று, பிரத்தியேக வேர்ஹவுஸ்களை ஐரோப்பாவில் நிறுவப்போகிறோம். எங்கள் நிறுவனத்திற்கென்று தனிப்பட்ட தரத்தைப் பாதுகாக்க தரக்கட்டுப்பாட்டுக் குழுவையே உருவாக்கியிருக்கிறோம். தவிர, உற்பத்திச் செலவைக் குறைக்க, ஒரே கூரையின் கீழ் அனைத்து வசதிகளையும் கொண்டு வந்து தீவிர நவீனமயமாக்கலில் பெரும் முதலீட்டை செய்திருக்கிறோம்" என்கிறார்.


• சித்திக்

ஏற்றுமதியாளர்களின் நம்பிக்கையும், நவீனமயமாக்கலும் ஆறுதல் அளித்தாலும், திருப்பூரின் மிகமோசமான அடிப்படைக் கட்டுமான வசதிகள் 2005 – சவாலைச் சந்திக்க உறுதுணையாக இல்லை என்பது அன்னை இந்திரா தொழிலாளர் பேரவையின் கோவை மாவட்டத் தலைவர் சித்திக்கின் குற்றச்சாட்டு.

"திருப்பூரைப் பொருத்தவரை மின்வெட்டு மிகப் பெரிய பிரச்னை" என்கிறார் இவர்.

பெரிய ஏற்றுமதியாளர்கள் தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ள முனைந்திருக்க, மற்றொரு பக்கம், உள்நாட்டுச் சந்தையில் ஆண்டு தோறும் ஆயிரம் கோடி ரூபாய்க்கு வர்த்தகம் செய்து வந்த திருப்பூர் சிறு தயாரிப்பாளர்கள், உள்நாட்டு வியாபாரிகளின் வயிற்றில் கடந்த ஐந்து மாத காலமாக மண்ணை வாரிப் போட்டு விட்டனவாம் மத்திய, மாநில அரசுகள். தி.மு.க. ஆட்சியில் பனியன் மற்றும் பின்னலாடைகள் மீதான விற்பனை வரி முழுவதுமாக நீக்கப்பட்டிருந்த நிலையில், அ.தி.மு.க. ஆட்சிக்கு வந்ததும் நான்கு சதவீதம் விற்பனைவரி விதித்தது. பிறகு அது ஒரு சதவீதமாகக் குறைக்கப்பட்டாலும் மே 2002 முதல் அமலுக்கு வந்துள்ள மத்திய விற்பனை வரித் திருத்தச் சட்டம் உள்நாட்டு வியாபாரத்தையே முடக்கி விட்டது என்று குமுறுகிறார்கள். இந்தச் சட்டத்தின்படி ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்குப் பின்னலாடைகளைக் கொள்முதல் செய்தால், 'சி' படிவம் தாக்கல் செய்யப்பட வேண்டும். இல்லையெனில் பத்து சதவிகிதம் விற்பனை வரி கட்ட வேண்டும். உள்நாட்டு வியாபாரம் செய்யும் வணிகர்கள் யாவரும் வியாபார உரிமம் பெறாத சிறு மற்றும் குறு வியாபாரிகள். பிளாட்பாரக் கடைகளுக்கும் சாலையோரக் கடைகளுக்கும் விநியோகம் செய்யும் இவர்களிடம், உரிமம் இல்லாததால் வணிக வரி அலுவலகத்தில் சி.படிவம் பெற முடியாது. இந்தப் பிரச்னையில் ஐம்பதாயிரம் தொழிலாளர்கள் ஏற்கெனவே வேலை இழந்து விட்டனர் என்று குமுறுகிறார்கள்.


• பழனிச்சாமி

2005க்குப் பிறகு சீனாவிலிருந்து தருவிக்கப்படும் பனியன் ஒன்று, உள்நாட்டில் பத்து ரூபாய்க்கு விற்கப்படுமானால் சி.படிவப் பிரச்னைக்கே மூச்சுத் திணறும் சிறு உற்பத்தியாளர்களின் கதி என்னவாகும், என்பது தான் திருப்பூரைக் கலவரப்படுத்திக் கொண்டிருக்கும் கேள்வி.

— ஆர்.சி.ஜெயந்தன்

படங்கள்: ராஜன்

# புன்னகை பூமி

1

**ஆனந்த் ராகவ்**

'அட, அப்படியா!' தொடர்

**த**மிழ்நாட்டில் உள்ளவர்களுக்கு தாய்லாந்தைப் பற்றி அவ்வளவாகத் தெரிவதில்லை.. சப்பை மூக்குக்காரர்கள் அத்தனை பேரும் சைனாக்காரன் என்கிற பொதுவான கணிப்பு இருக்கிறது. தமிழ்ச் சேனல்கள் வந்த பிறகு,தாய்லாந்தவர்கள் வண்டு, பூச்சி, நத்தையெல்லாவற்றையும் உயிரோடு சாப்பிடுவது, குரங்கு தேங்காய் பறிப்பது, என்று நம்மூர் அரசியல் அவலங்கள் வாசித்து ஓய்ந்த பிறகு, வேடிக்கைச் செய்திகளில் தாய்லாந்தின் வால் மட்டும் தெரிகிறது.

சிங்கப்பூர், மலேசியா போன்ற நாடுகளுக்குக் கொல்லைப்புறத்திலேயே இருந்தாலும், தமிழர்களின் கிழக்காசிய நாடுகளின் வீச்சு முஸ்தபாவோடு நின்றுவிடுகிறது. தமிழ் சினிமாவில் ஒன்றிரண்டு படங்களைத் தவிர, அவ்வளவாய் தாய்லாந்து இடம் பெறாததும் ஒரு காரணம். 'உலகம் சுற்றும் வாலிபனி'ல் எம்.ஜி.ஆர் தாய்லாந்து நடிகையைக் கனவில் காதலித்ததைத் தொடர்ந்து, பிரபு தேவா தாய்லாந்து கோயில் கோபுரங்கள் எல்லாம் அதிரும்படி பிரேக் டான்ஸ் ஆடியதைத் தவிர விசேஷமாய் எதுவும் நடக்கவில்லை. இன்னொரு முக்கியக் காரணம் தாய்லாந்தில் தமிழ்மொழி பேசும் மக்கள் நிறைய இல்லாததுதான். சிங்கப்பூரும், மலேசியாவும் ஏராளமான தமிழ் பேசும் மக்களைச் சுமந்து, அரசு மொழிகளில் ஒன்றாகத் தமிழைக் கொண்டு, இட்டிலி தோசையும், தொட்டுக்க தமிழ்ப் படங்களும் மிகுந்து, தமிழ்க் கலாசாரம் ஒரு தவிர்க்க முடியாத அங்கமாகிவிட்டது. தாய்லாந்தில் தமிழர்கள் மிகக் குறைவு. அதனால் தமிழர் தகவல் தொடர்பு இல்லாமல், பூச்சி சாப்பிடும் பிம்பத்தோடு நின்றுவிட்டது.

**தா**ய்லாந்து புத்த மதத்தைத் தழுவிய நாடு. மற்ற மதத்தவர்கள் வெகு சொற்பம். இந்தியாவின் பரப்பளவில் பதினைந்து சதவிகிதம் இருக்கும் தாய்லாந்து, பசுமை செழிக்கும் அழகான தீவுகளும், கவர்ச்சிகரமான பாவையர்களும் நிறைந்த, உல்லாசப் பயணிகள் வந்து குவியும் ஒரு சொர்க்கபுரி. காரசாரமான இவர்களின் உணவு உலகெங்கும் பிரபலமாகி வருகிறது. உணவுதான் காரம். மக்கள் மிகப் பணிவானவர்கள். எப்போதும் புன்னகைத்துக் கொண்டிருக்கும் கனிவான பெண்கள். 'The land of smiles' என்ற பெயரை இந்த நாட்டிற்குப் பெற்றுத் தந்தவர்கள். 'இந்தியாவை விட பொருளாதாரநிலையில் பின் தங்கியிருந்த தாய்லாந்து, நாம் 'ராவ்' காலம் 'சிதம்பர' கண்டம் பார்த்து, செய்யலாமா வேண்டாமா என்று யோசித்துக்கொண்டிருந்த பொருளாதார தாராளமயமாக்கலை, போன நூற்றாண்டே செய்து வளர்ச்சியின் உச்சிக்குச் சென்ற நாடு. இந்தக் கட்டுரையின் நோக்கம் இது போல 'நம்மூரும் இருக்குதே' தொனியில் வழக்கமான வெளிநாட்டு சுபிட்சக் கதையை பிரஸ்தாபிப்பது அல்ல.

## இந்தியக் குடியேற்ற நாடு

**ந**ம்மையெல்லாம் பெருமை அடையச் செய்யும், தமிழ்நாட்டவர்கள்

தெரிந்து கொள்ள வேண்டிய, ஒரு சிறப்பம்சம் தாய்லாந்தில் இருக்கிறது. இந்து மத வழிமுறைகள் புத்தமதத்தைச் சார்ந்த இவர்களின் கலாசாரத்தோடு பிணைந்து போன அதிசயம்தான் அந்தச் சிறப்பம்சம். George Coedes என்கிற பிரான்சு நாட்டு தொல்பொருள் ஆராய்ச்சியாளர், தாய்லாந்து

• 'தாய்'-நாட்டுப் பெண்

உள்ளடக்கிய தெற்கு ஆசியாவை Indianised states of South East Asia என்று குறிப்பிடும் அளவு இந்திய ஆதிக்கம் இருக்கிறது. குக்ரிக் ப்ரமோஜ் என்னும் தாய்லாந்தின் முன்னாள் பிரதமர் ஒருவர், "நாங்கள் முதலில் இந்துக்கள். பிறகுதான் புத்த மதத்தினர். புத்தமதம் வெறும் சித்தாந்தம் மட்டுமே. இந்து மதம் இல்லாவிட்டால் தாய்லாந்தில் கலாசாரமே உருவாகி இருக்காது" என்கிறார்.

இவர்கள் இப்படி உணர்ச்சி வசப்படக் காரணம் இருக்கிறது. இந்தியர்கள்தான் தென்கிழக்கு ஆசியாவில் கலாசாரத்தை அறிமுகம் செய்தார்கள். கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் இந்தியாவிலிருந்து வந்த புத்த பிட்சுக்களாலும், பிராமணர்களாலும் தென்கிழக்கு ஆசியாவின் கலாசாரம் உருவானது. தெற்கு ஆசியாவின் முதல் இந்திய ராஜாங்கம். பல்லவ பிராமணர் ஒருவரால் உருவாக்கப்பட்டது என்று நம்பப்படுகிறது. அதன் பிறகு பதின்மூன்று நூற்றாண்டுகள் இந்தியர்களோ, இந்தியரால் உருவாக்கப்பட்ட அரசர்களோ இந்தப் பகுதியை ஆண்டிருக்கிறார்கள். அதன் விளைவாய் இந்து சமயக் கொள்கைகள், இந்துக் கடவுள்களின் வழிபாடு, கலாசாரம், சட்டமுறை, பண்டிகைகள், இலக்கியம் என்று இந்தியத் தாக்கம், இந்த இருபத்தோராம் நூற்றாண்டிலும் புத்த மதத்தைத் தழுவிய தாய்லாந்தில் கடைபிடிக்கப்பட்டு வருகிறது. (நம் அரசியல்வாதிகளிடம் சொன்னீர்



• 'ராமா'

களானால் தாய்லாந்தை மீட்பதைத் தேர்தல் அறிக்கையில் சேர்த்துக் கொள்வார்கள்!)

1767இல் தாய்லாந்தின் மேல் படையெடுத்த பர்மா ராணுவத்தால் தாய்லாந்தின் தலைநகர் அடியோடு அழிக்கப்பட்டதில் இந்தியர்களின் தாய்லாந்துத் தொடர்பு பற்றிய ஆவணங்கள் நிறைய அழிந்து போய் விட்டன. ஆவணங்கள் எல்லாம் தேவைப்படாத விதத்தில் தாய்லாந்தின் வாழ்க்கை முறையிலேயே இந்தியத் தாக்கம் இருக்கிறது. அதைத்தான் பார்க்கப் போகிறோம்.

இந்திய கலாசாரத்தாக்கம் ஒவ்வொன்றையும் விரிவாகப் பார்க்கும் முன் சில ஆச்சரியங்கள் அடங்கிய 'ட்ரெய்லர்'

• நம் இராமாயணம் அதே கதை மாந்தர்களின் பெயர்களோடு இங்கே கதைக்கப்படுகிறது. கடந்த இருநூறு வருடங்களாக ஆட்சிபுரியும் தாய்லாந்து மன்னர்களின் பொதுப் பெயர் 'ராமா'தான். இப்போது



• கருடர்

ஆட்சி புரிபவர் 'ராமா' ஒன்பதாவது. தாய்லாந்தின் முதல் தலைநகரத்தின் பெயர் 'அயுத்தியா'. ப்ரொபசர் சுனித்தி குமார் சட்டர்ஜி என்கிற ஆராய்ச்சியாளர் வேடிக்கையாய்க் குறிப்பிட்டதுபோல், உண்மையான ராமராஜ்யம் தாய்லாந்தில்தான் நடக்கிறது.

• தாய் மொழி சம்ஸ்கிருதத்திலிருந்து பாலியிலிருந்தும் உருவானது. தாய்லாந்து மன்னரின் பெயராகிய 'பூமிபால் அடுல் தேஜ்' என்பதே 'பூமிபால் அடுல்தேஜ்' (பூமிபால் - பூமியைக் காப்பவன், அடுல்தேஜ்- தன்னிகரில்லாதவன்) என்ற சமஸ்கிருத சொல்தான். அரசர் வசிக்கும் பிரம்மாண்டமான தெருவின் பெயர் 'ராச வீதி'. ராஜ குமாரி, ராஜ மந்திரி, ராஜாபிஷேகம் போன்ற சொற்பிரயோகங்களும், மல்லிகா, சுஜாதா, அகல்யா, சுகன்யா போன்ற பெயர்களும் இங்கு பரவலாக உள்ளன.

• விஷ்ணு, சிவன் பிரம்மா என்று மும்மூர்த்திகளையும், விநாயகர், ஆஞ்சநேயர், இந்திரன், அம்மன் போன்ற இந்துக் கடவுள்களையும் வழிபடுகிறார்கள். தாய்லாந்து அரசின் அரசு முத்திரை எது தெரியுமா...: விஷ்ணுவின் வாகனமான கருடன் தான்.

• தமிழ்நாட்டிலிருந்து பல தலைமுறைகளுக்கு முன்னால் வந்த பிராமணக் குடும்பங்கள் இன்னும் தாய்லாந்தில் இருக்கிறார்கள். நம் திருப்பாவையும் திருவெம்பாவையும் பாராயணம் செய்வது பதினைந்து நாள் விழாவாகக் கொண்டாடப்படுகிறது. தேவாரத்திலிருந்தும், திருவெம்பாவையிலிருந்தும் பாடல்கள் வாசித்துதான், தாய்லாந்து மன்னருக்கு முடிசூட்டு விழா நடக்கிறது.

• தாய்லாந்து வணக்கமும் இந்திய வணக்கம் போல் இரு கரங்களையும் மார்போடு சேர்த்துக் குவிக்கும் முத்திரை தான்.

சரித்திர ஆராய்ச்சியாளர்கள் தாய்லாந்தையே 'இந்தியக் குடியேற்ற நாடு' (Indian Colony) என்று சொல்லுவதன் காரணம், மத வேற்றுமையை மீறிய கலாசார ஒற்றுமைதான். இந்தக் கட்டுரையின் நோக்கமே அது போன்ற ஆச்சரியங்களையும் அதன் சரித்திரத்தையும் உங்களோடு பகிர்ந்து கொள்வதுதான்.

## புன்னகைகளின் பூமி

'புன்னகைகளின் பூமி' என்று வர்ணிக்கப்படும் தாய்லாந்தில் விருந்தோம்பல் ஒரு தேசிய குணம். நம் ஆட்டோ அண்ணாச்சிகளை ஒருமாதம் இங்கு அனுப்பி பயிற்சித்தால் திருந்துவார்கள். (மீட்டருக்கு மேல் கேட்பதை பணிவாகச் சிரித்துக் கொண்டே கேட்பார்கள்) இட்லி, தோசை சுலபமாகக் கிடைப்பதில்லை என்கிற மனக் குறையைத் தவிர, இங்கிருக்கும் இந்தியர்கள் சுதந்திரமாக, சந்தோஷமாக வாழ்ந்து வருகிறார்கள் என்பதுதான் உண்மை. பொருளாதார தாராளமயமாக்கலுக்குப் பிறகு, ஏராளமான அந்நிய மூதலீடும் அந்நியர்களும் வந்து குவிந்திருக்கும் இந்த நாட்டில், மண்ணின் மைந்தர் மனப்பான்மை வளராததும் தாய்லாந்து மக்கள் சுபாவத்திலேயே பணிவும், நட்புணர்வும் மிக்கவர்களாக இருப்பதும் அதற்குக் காரணம்.

"இந்தியக் குடியேற்ற நாடு" என்று சொல்லப்பட்ட தாய்லாந்தின் வாழ்க்கை முறையில், இந்து மதக் கலாசாரத்தின் பாதிப்பு பரவியிருக்கும் ஆச்சரியத்தையும், அதன் சரித்திரத்தையும் அடுத்த வாரம் பார்க்கலாம்.

# சிவகாமியின் சபதம்

## முன்கதை – ரத்னச் சுருக்கமாக...

காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு அரசாண்ட மகேந்திர பல்லவர் பல்வேறு கலைகளில் ஆர்வம் கொண்டவராக விளங்கி, அதனால் நாட்டின் பாதுகாப்பைக் கவனியாமல் இருந்தார். இதைத் தெரிந்து கொண்டு மாபெரும் சேனையுடன் படையெடுத்து வந்தான் சளுக்க சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி வாதாபி புலிகேசி. அவன் வழியில் எங்கும் தங்காமல் நேரே வந்திருந்தால், காஞ்சிக் கோட்டை மிக எளிதாக அவன் வசப்பட்டிருக்கும். அதைத்தான் புலிகேசியின் ஒற்றனும் புத்த பிக்ஷுவுமான நாகநந்தி விரும்பி, செய்தியும் அனுப்பினார்.

ஆனால் மிருக பலத்தை, அறிவாற்றலுடன் கூடிய மகேந்திர பல்லவரின் தந்திர சாமர்த்தியங்கள் முறியடித்து விட்டன. நாகநந்தியின் சூழ்ச்சிகளுக்கு எதிர் சூழ்ச்சிகள் பல செய்து, வடபெண்ணைக் கரையிலேயே புலிகேசியைப் பல காலம் தாமதிக்கச் செய்தார். இதற்கிடையில் தமது மகன் மாமல்ல நரசிம்ம பல்லவனையும் தளபதி பரஞ்சோதியையும் ஊக்குவித்துக் காஞ்சிக் கோட்டையைப் பலப்படுத்தினார்.

வீர மாமல்ல நரசிம்மனுக்கும், சிற்பி மகளும் ஆடலரசியுமான சிவகாமிக்கும் இடையில் காதல் மலர்ந்து, நாளுக்கு நாள் வலுப்பெற்று வந்தது. புள்ளலூர்ப் போர்க்களத்தில் துர்விநீதனைப் புறங்காணச் செய்து வந்த மாமல்லர், சிவகாமியை மண்டபப்பட்டு கிராமத்தில் சந்திக்க, இருவரும் இதயங்களைப் பரிமாறிக் கொள்ள, அவர்களுடைய காதல் அசைக்க முடியாததாயிற்று.

அமரர் கல்கி

இதே நேரத்தில் வாதாபி ஒற்றன் நாகநந்தி பிக்ஷு, சிவகாமியின் கலைத்திறன் மீது மோகம் கொண்டவராக, மாமல்லனைக் கொன்றுவிடவும் முயற்சி செய்தார். அந்த முயற்சி மகேந்திர பல்லவரின் ஒற்றர்களின் திறமை காரணமாகவும் தெய்வ அருளாலும் தோல்வி அடைந்தது. மாறு வேஷத்தில் மண்டபப்பட்டு கிராமத்துக்கு வந்து மகேந்திர பல்லவர், 'நாட்டின் எதிர்காலத்தை உத்தேசித்து, சிவகாமி தன் காதலைத் தியாகம் செய்து மாமல்லனை விட்டுக் கொடுக்க வேண்டும்' என்று கோரினார். சிவகாமி உறுதியாக இருக்க, மகேந்திர பல்லவர் வெட்கத்தோடும் வேதனையோடும் தலைநகர் திரும்பினார்.

வடபெண்ணைக் கரையிலிருந்து பின் வாங்கிய பல்லவ சேனை காஞ்சிக் கோட்டைக்குள் புக, காஞ்சி முற்றுகை தொடங்கியது. அதே சமயம் இது நாள்வரை தமது ராஜ தந்திரத்தின் ஓர் அம்சமாக வெளியே உலவ விட்டிருந்த ஒற்றன் நாகநந்தி பிக்ஷுவைக் கைது செய்து சிறையில் அடைத்தார் மகேந்திரர்.

பலகாலம் முற்றுகை நடத்தியும் புலிகேசியால் காஞ்சிக் கோட்டையைப் பிடிக்க முடியவில்லை. இதற்கிடையில் அவனது சேனையும் போதிய உணவின்றிச் சோர்வடையவே சமாதானத் தூது அனுப்பினான். அவனை நம்பிய மகேந்திர பல்லவர், கோட்டைக்குள் அவனை வரவேற்று, ராஜோபசாரம் செய்தார்.

து மாமல்லனுக்குப் பிடிக்காமல் போகவே அவனும் தளபதி பரஞ்சோதியும் பாண்டிய மன்னனுக்குப் பாடம் கற்பிக்கக் காஞ்சிக் கோட்டையை விட்டு வெளியேறினர். அதே நேரத்தில் புலிகேசிக்கு முன் ராஜசபையில் நடனமாட மகேந்திர பல்லவரால் தருவிக்கப்பட்டாள் சிவகாமி.

அவள் அழகும், அவளுக்கும் அவள் தகப்பனார் ஆயனச் சிற்பிக்கும் காண்பிக்கப்படும் மரியாதையும் புலிகேசியை பிரமிக்க வைத்தன. காஞ்சியின் செல்வச் செழிப்பு பொறாமையை வளர்த்தது. மாமல்ல நரசிம்மனைக் காணாதது வியப்பையும் ஏமாற்றத்தையும் அளித்தது. எல்லாவற்றுக்கும் மேலாக, 'நாகநந்தி பிக்ஷு என்ன ஆனார்?' என்ற கேள்வி புலிகேசியின் உள்ளத்தைக் குடைந்து கொண்டிருந்தது.

இனி தொடர்ந்து படியுங்கள்.

## பதினாறாம் அத்தியாயம்

# புலிகேசியின் புறப்பாடு

மறுநாள் காஞ்சி நகரில் மீண்டும் ஒரு பெரிய கொண்டாட்டம். அன்று வாதாபிச் சக்கரவர்த்தி புலிகேசி காஞ்சியிலிருந்து புறப்படுவதாக ஏற்பாடாகியிருந்தது. புறப்படுவதற்கு முன்னால் இன்னொரு தடவை காஞ்சிமா நகரை நன்றாய்ப் பார்க்க வேண்டுமென்று புலிகேசி விரும்பினார்.

எனவே இரு சக்கரவர்த்திகளும் பட்டத்து யானை மீது அமர்ந்து நகர் வலம் கிளம்பினார்கள். இந்த வைபவத்தை முன்னிட்டுக் காஞ்சி நகரம் அன்று மிகச் சிறப்பாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. நகரமாந்தர்கள் - ஸ்திரீகளும் புருஷர்களும், அழகிய ஆடை ஆபரணங்கள் பூண்டு தெரு ஓரங்களில் கும்பலாக நின்று கொண்டிருந்தார்கள். ஆங்காங்கே பலவகை

வாத்தியங்கள் முழங்கிக் கொண்டிருந்தன. உப்பரிகை மேல் மாடங்களிலிருந்து இரு சக்கரவர்த்திகளும் அமர்ந்து சென்ற பட்டத்து யானை மீது மலர் மாரி பொழிந்து கொண்டிருந்தது.

காஞ்சிமா நகரின் அழகிய விசாலமான வீதிகளையும், மாட மாளிகைகளையும், கோயில்களையும், கோபுரங்களையும், சிற்ப சித்திர மண்டபங்களையும், நடன அரங்கங்களையும், புத்த விஹாரங்களையும், சமணர் ஆலயங்களையும் எவ்வளவுதான் பார்த்தாலும் புலிகேசிக்கு அலுப்பு ஏற்பட்டதாகத் தெரியவில்லை.

''பாரவியை, மகா கவி என்று நினைத்துக்கொண்டிருந்தேன். அவர் எவ்வளவு மட்டமான கவி என்பது இப்போதுதான் தெரிகிறது...'' என்றார் வாதாபிச் சக்கரவர்த்தி திடீரென்று.

''அதென்ன அப்படிச் சொல்கிறீர்கள்? பாரவியின் 'கிராதார்ஜுனியம்' எவ்வளவு அழகான காவியம்...? தாங்கள் படித்திருக்கிறீர்கள் அல்லவா?'' என்றார் மகேந்திர பல்லவர்.

''ஆ! இந்தக் கவிகள் மலையையும் காட்டையும் மழையையும் மேகத்தையும் வர்ணிக்கச் சொன்னால் வர்ணிப்பார்கள். இந்த மாதிரி ஒரு நகரத்தை வர்ணிக்கச் சொன்னால் அப்போது அவர்களுடைய சாமர்த்தியமெல்லாம் எங்கோ போய் விடுகிறது! பாரவி இந்த நகரத்தைப் பற்றி எனக்கு எழுதிய வர்ணனையெல்லாம் இதன் உண்மைச் சிறப்பில் கால் பங்குகூட வராது... பல்லவேந்திரா! நான் ஒன்று சொல்கிறேன், கேட்கிறீர்களா? நாம் இருவரும் ஒரு பரிவர்த்தனை செய்து கொள்வோம். நர்மதையிலிருந்து துங்கபத்திரை வரை பரந்து கிடக்கும் என்னுடைய சாம்ராஜ்யம் முழுவதையும் எடுத்துக்கொண்டு அதற்கு மாற்றாக இந்தக் காஞ்சி நகரை மட்டும் எனக்குக் கொடுங்கள்!'' என்றார் வாதாபி அரசர்.

''மன்னர் மன்னா! திவ்யமாக இந்தக் காஞ்சி நகரை எடுத்துக்கொள்ளுங்கள். அதற்கு மாறாக, உங்கள் இராஜ்யம் முழுவதையும் எனக்குக் கொடுக்க வேண்டாம். அஜந்தா மலையையும் அதன் குகைகளையும் மட்டும் கொடுத்தால் போதும்! கல்லினாலும் சுண்ணாம்பினாலும் மண்ணினாலும் மரத்தினாலும் கட்டிய இந்த மாநகரின் கட்டடங்கள் எல்லாம் ஒரு காலத்தில் இடிந்து தகர்ந்து போனாலும் போகலாம்; அஜந்தா மலைக் குகைகளில் எழுதிய அழியா வர்ணச் சித்திரங்கள் நீடூழி காலம் இருக்கும். சளுக்க குல சிரேஷ்டரே! தங்களுக்கு ஒரு சமாசாரம் தெரியுமா? நேற்று நடனமாடினாளே, சிவகாமி! "வாதாபிக்குப் போகிறாயா?" என்று கேட்டதும், அவள் அவ்வளவு மனத்தாங்கலுடன் பேசினாள் அல்லவா? நீங்கள் மட்டும் அவள் தந்தை ஆயனரிடம் அஜந்தாவைப் பற்றி ஒரு வார்த்தை சொல்ல வேண்டியதுதான்; உங்களுடன் வந்தால் அஜந்தா வர்ண இரகசியத்தைத் தெரியப்படுத்துவதாகச் சொல்ல வேண்டியதுதான். உடனே உங்களுடன் புறப்பட்டு வர ஆயத்தமாகி விடுவார்...!''

''அப்படியா? ஆயனச் சிற்பிக்கு அஜந்தாவர்ண விஷயத்தில் அவ்வளவு அக்கறையா?'' என்று புலிகேசி கேட்ட போது ஏதோ பழைய நினைவு வந்தவரைப் போல அவருடைய கண்களில் சிந்தனைக் குறி தோன்றியது.

''ஆமாம்; ஆமாம், அஜந்தா வர்ண இரகசியத்தைத் தெரிந்துகொண்டு வருவதற்காக ஆயனர் தூது கூட அனுப்பினாரே, அது உங்களுக்கு ஞாபகம் இல்லையா?'' என்றார் பல்லவ சக்கரவர்த்தி. பின்னர் தொடர்ந்து, ''ஆகா! அந்த ஓலையைப் படிக்கக் கேட்ட போது நீங்கள் எப்படித் திகைத்தீர்கள்!'' என்று கூறிவிட்டுக் கலகலவென்று நகைத்தார். விதி, விதி என்று சொல்

கிறார்களே, அந்த விதியானது அப்போது மகேந்திரவர்மரின் நாவிலே வந்து உட்கார்ந்து கொண்டது. அது காரணமாக, மகா மேதாவியும், தீர்க்க திருஷ்டியுள்ளவரும், சாணக்கிய சாகஸத்தில் இணையற்றவருமான அந்தப் பல்லவ சிரேஷ்டர், நாவின் அடக்கத்தை இழந்தார்.

யாகாவா ராயினும்
நாகாக்க காவாக்கால்
சோகாப்பர்
சொல்லிழுக்குப் பட்டு





என்னும் பொய்யாமொழிப் புலவரின் வாக்கை நன்கறிந்தவராயினும் அச்சமயம் அதை மறந்துவிட்டார். அவருடைய இதய அந்தரங்கத்துக்குள்ளே கிடந்த ரகசியங்கள் ஒவ்வொன்றாய் வெளி வரலாயின.

மகேந்திர பல்லவரின் கடைசி வார்த்தைகள் புலிகேசியின் உடம்பில் ஏககாலத்தில் பல தேள்கள் கொட்டியது போன்ற உணர்ச்சியை உண்டாக்கியதாகத் தோன்றியது. "சத்ருமல்லா! எதைப் பற்றிச் சொல்கிறீர்கள்? உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டுவிட்டு, பாம்பு சீறுவதைப்போல் பெருமூச்சு விட்டார் புலிகேசி.

மகேந்திர பல்லவர் மறுபடியும் நகைத்து, "ஆமாம்! அந்தக் காட்சியை நினைத்தால் எனக்கு இன்னமும் சிரிப்புச் சிரிப்பாய் வருகிறது. வடபெண்ணை நதியை நீங்கள் நெருங்கிவிட்டீர்கள். முதலில் ஒரு

தூதன் ஓலையைக் கொண்டு வந்து கொடுக்கிறான். அதிலே நீங்கள் எதிர் பாராதவிதமாய் ஏதோ எழுதியிருக்கிறது. உங்களுக்குக் கோபம் கோபமாய் வருகிறது. அந்தச் சமயத்தில் ஓர் இளம் பிள்ளையைச் சிறைப்படுத்திக் கொண்டு வருகிறார்கள். அவனிடமும் ஓர் ஓலை இருக்கிறது. அதைப் படித்தால், பூஜை வேளையில் கரடியை விடுவதுபோல், அஜந்தா வர்ண இரகசியத்தைப் பற்றிக் கேட்டிருக்கிறது. அப்போது உங்களுடைய முகத்தைப் பார்க்க வேண்டுமே? - அதிர்ஷ்டவசத்தினால், அந்தப் பிள்ளையாண்டானை உடனே சிரச்சேதம் பண்ணச் சொல்லாமல் நாகார்ஜுன மலைக்கு அனுப்பச் செய்தீர்கள்!'' என்றார்.

'விசித்திர சித்தரே! இதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரிந்தது? கிட்ட இருந்து பார்த்தது போல் சொல்கிறீர்களே?'' என்று பல்லைக் கடித்துக் கொண்டு கேட்டார் புலிகேசி.

"கிட்ட இருந்து பார்த்ததனால்தான் தெரிந்தது!'' என்றார் மகேந்திர சக்கரவர்த்தி.

புலிகேசி மகேந்திரரின் முகத்தை உற்றுப் பார்த்துவிட்டு "ஆ! அப்படியானால், அந்த வஜ்ரபாஹு என்கிற தூதன் தாங்கள்தானாக்கும்!'' என்றார்.

"அடியேன்தான்!'' என்றார் மகேந்திர பல்லவர்.

"என் மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்த பல மர்மங்களில் ஒன்று வெளியாகிவிட்டது. மீதமுள்ள மர்மங்களைக் கண்டுபிடிப்பதில் இனிமேல் கஷ்டமேயிராது'' என்று புலிகேசி மெல்லிய குரலில் தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார்.

பிறகு உரத்த குரலில் ''அப்படியானால் வஜ்ரபாஹு கொண்டு வந்த அந்த ஓலை...?'' என்று கேட்டார்.

''தூதனையே சிருஷ்டி செய்தவனுக்கு ஓலையைச் சிருஷ்டி செய்வதுதானா பெரிய காரியம்?''

"இல்லை, இல்லை! காஞ்சி மகேந்திர பல்லவருக்கு எதுவுமே பெரிய காரியம் இல்லை...! ஐயா! இப்போதாவது எனக்குச் சொல்லலாமல்லவா? எது நிஜ ஓலை! எது பொய் ஓலை?''

''சத்யாச்ரயா! அந்தப் பிள்ளை முதலில் கொண்டு வந்த நிஜமான ஓலை மட்டும் உங்களிடம் அப்போது வந்திருந்தால் – இன்றைக்கு நீங்களும் நானும் இந்தக் காஞ்சி நகரின் வீதிகளில் பட்டத்து யானையின் மீது அமர்ந்து ஊர்வலம் வந்து கொண்டிருக்க மாட்டோம். ஊர்வலம் வருவதற்கு வீதியே இராது; காஞ்சி நகரமும் இராது. வைஜயந்தி அடைந்த கதியைக் காஞ்சியும் அடைந்திருக்கும். நண்பரே! இப்போது நீங்களும் உண்மையைச் சொல்லுங்கள். இந்த அழகான நகரை, அடியோடு அழித்துவிடும் எண்ணம் அப்போது உங்கள் உள்ளத்தில் இருக்கவில்லையா?'' என்று மகேந்திரர் கேட்டார்.

புலிகேசி தன் மனத்திற்குள், ''அப்போது அவ்வளவாக இல்லை; இப்போதுதான் இந்த நகரை எரித்துப் பொசுக்கிச் சாம்பலாக்கி விட வேண்டுமென்று தோன்றுகிறது'' என்று எண்ணிக் கொண்டார். வெளிப்படையாக, ''பல்லவேந்திரா! முதல் ஓலையில் - நிஜ ஓலையில் - என்ன எழுதியிருந்தது?'' என்று கேட்டார்.

"வேறொன்றுமில்லை, பாகப் பிரிவினைதான் செய்திருந்தது! 'பல்லவ சாம்ராஜ்யத்தையும் காஞ்சி சுந்தரியையும் நீ எடுத்துக் கொள்; நடன கலாராணி சிவகாமியை மட்டும் எனக்குக் கொடுத்துவிடு' என்று பிக்ஷு உங்களைக் கேட்டிருந்தார்!''

இதைக் கேட்ட வாதாபிச் சக்கரவர்த்தி, சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்துவிட்டு, ''காஞ்சி சுந்தரியைக்

கைப்பற்றுவது அவ்வளவு சுலபமான காரியமா?'' என்றார்.

''நண்பரே! அந்த ஓலையில் எழுதியிருந்தபடி நீங்கள் நேரே காஞ்சிக்கு வந்திருந்தால் அது சுலபமாகத்தான் இருந்திருக்கும். அப்போது இந்தக் காஞ்சிக் கோட்டை வாசல்களின் கதவுகள் உங்கள் யானைப் படையில் ஒரு யானையின் மோதலுக்குக்கூட ஈடு கொடுத்து நின்றிருக்க முடியாது!'' என்றார் மகேந்திர பல்லவர்.

புலிகேசியின் உள்ளத்தில் பல தீ மலைகள் ஏக காலத்தில் நெருப்பைக் கக்க ஆரம்பித்தன. மகேந்திரரை ஏறிட்டு நோக்கி, ''பல்லவேந்திரா! அர்த்தசாஸ்திரத்தை எழுதிய கௌடில்யர் உங்களிடம் பிச்சை வாங்க வேண்டும்!'' என்றார்.

''எங்கள் தென்னாட்டிலும் ஒரு பிரபல இராஜ தந்திரி உண்டு. அவர் பெயர் திருவள்ளுவர். அந்தப் பெரியார் எழுதிய பொருளதிகார நூலை உங்களுக்குப் பரிசளிக்க வேண்டுமென்று எனக்கு விருப்பம். ஆனால், எங்கள் செந்தமிழ் மொழியை இன்னும் நீங்கள் நன்றாய்ப் பயிலவில்லையே?'' என்றார் சத்துருமல்லர்.

பிறகு, ''நண்பரே! போனதெல்லாம் போயிற்று. அதையெல்லாம் பூர்வ ஜன்ம அநுபவமாக நினைத்து மறந்து விடுங்கள். இந்தப் பத்து தினங்களில் நீங்களும் நானும் அத்தியந்த சிநேகிதர்களாகி விட்டோம். உங்களை நான் அறிந்துகொண்டேன். என்னையும் நீங்கள் அறிந்து கொண்டீர்கள். உங்களுடைய படையெடுப்பைத் தடுப்பதற்கு நான் கையாண்ட தந்திரங்களையெல்லாம் என் மனத்திற்குள் வைத்திருப்பது சிநேகிதத் துரோகம் என்றுதான் அவற்றை உங்களுக்குச் சொன்னேன். இனிமேல் நமது நேசத்திற்கு எவ்விதத் தடங்கலும் இல்லை. நம்மிருவருடைய ஆயுளும் உள்ளவரையில் நாம் இனிமேல் சிநேகிதர்கள். என் ஆயுட்காலத்தில் தங்களுக்கு விரோதமாக இனி நான் ஒன்றும் செய்ய மாட்டேன். தாங்களும் அப்படித்தானே?'' என்று மகேந்திர பல்லவர் உண்மையான உள்ள நெகிழ்ச்சியுடன் கேட்டார்.

''சத்ருமல்லா! அதைப் பற்றிக் கேட்க வேண்டுமா?'' என்றார் வாதாபிச் சக்கரவர்த்தி.

நகர்வலம் எல்லாம் முடிந்து பட்டத்து யானை காஞ்சியின் வடக்குக் கோட்டை வாசல் அண்டை வந்து நின்றது. இரு சக்கரவர்த்திகளும் பிரிய வேண்டிய சமயம் வந்தது.

யானையின் மீதிருந்தவர்கள் பூமியில் இறங்கினார்கள். ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்துகொண்டார்கள்.

''பல்லவேந்திரா! உங்கள் நகருக்கு விருந்தினனாக வந்ததில் எனக்கு எவ்வளவோ சந்தோஷம். அபூர்வமான காட்சிகளைக் கண்டேன். அபூர்வமான விஷயங்களைக் கேட்டேன். ஆனால், தங்கள் வீரப்புதல்வன் மாமல்லனைப் பார்க்காமல் திரும்பிப் போவதிலேதான் கொஞ்சம் வருத்தம்!'' என்றார் புலிகேசி.

''ஆம், மாமல்லனையும் பார்க்கவில்லை. உங்களுக்கு முதலில் ஓலை கொண்டு வந்த வாலிபனையும் நீங்கள் பார்க்கவில்லை; நாகநந்தி பல்லவ ராஜ்யத்துக்குப் பெரியதொரு உபகாரம் செய்தார். சிறந்த வீரத்தளபதி ஒருவனை அளித்தார்...!''

புலிகேசி குறுக்கிட்டு, ''ஆமாம் தளபதி பரஞ்சோதியைப் பாராததிலும் எனக்கு ஏமாற்றந்தான். அவர்களிருவரும் எங்கே என்பதை இன்னும்

## அருள்வாக்கு

"என்னுடைய ஆத்மா" என்று நாம் பேச்சிலே எப்போதாவது சொன்னால் அது தப்பு. இதேபோல இன்னொருத்தனுடைய ஆத்மா என்று சொன்னாலும் தப்பு. 'ஆத்மா' என்றால் என்னவென்று தெரியாததால் நாம் பண்ணும் தப்பு. ஸாதாரணமாக ஆத்மாவைப் பற்றி எப்போது சொல்கிறோம்? யாராவது ரொம்பவும் கஷ்டப்பட்டால், "பாவம், அந்த ஆத்மா படாத பாடு படுகிறது" என்கிறோம். ஓயாமல் சஞ்சலப்பட்டுக் கொண்டே இருப்பவரை, "நிம்மதியில்லாத ஆத்மா" என்கிறோம். "காலமானார்" என்று பேப்பரில் போடும்போது, "அன்னாருடைய ஆத்மா சாந்தி அடையட்டும்" என்று போடுகிறார்கள். இந்த எல்லா இடத்திலுமே "ஆத்மா" என்ற பத ப்ரயோகம் ஸரியில்லை. ஆத்மா பாடும் படாது. நிம்மதி இல்லாமலும் இருக்காது. அது புதிதாக சாந்தி என்று ஒன்றை அடைய வேண்டியதுமில்லை.



அகண்டமானது ஆத்மா. அதன் கண்டமான ஆபாஸமே ஜீவபாவம் அடைந்து தன்னையே "நான்" என்று நினைப்பது தான் அஹங்காரம். ego என்பது. இந்த ego வைத்தான் நாம் பெரும்பாலும் ஆத்மா என்று தப்பாகச் சொல்லிவிடுகிறோம். ஸமுத்ரத்திலே ஒரு சொம்பை அமுக்கி, அந்த சொம்புக்குள் இருக்கிற நாலு ஆழாக்கு ஜலத்தை ஸமுத்ரம் என்கிறது போலத்தான். நாம் தனி ஜீவ அஹங்காரத்தை ஆத்மா என்பதும், சொம்பு ஜலம் ஸமுத்ரத்துடையது என்பது போல. இதுவும் ஆத்மாவுடையதுதான்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்**

தாங்கள் சொல்லவில்லையே?" என்றார்.

"பாண்டிய மன்னனை வழி அனுப்ப அவர்கள் போயிருக்கிறார்கள்! இன்றைக்குக் காலையிலேதான் செய்தி வந்தது. பாண்டியனைக் கீழைச் சோழ நாட்டின் எல்லை வரையில் கொண்டு போய்விட்டு விட்டார்களாம்!"

"ஆஹா! நினைத்தேன். ஏதோ பாண்டியனுக்கு நீங்கள் சம்பந்தியாகப் போவதாக ஒரு வதந்தி இருந்ததே!"

"சம்பந்தி உபசாரம் செய்வதற்குத்தான் மாமல்லனும் பரஞ்சோதியும் போனார்கள்!" என்று கூறி மகேந்திர பல்லவர் நகைத்தார்.

"விசித்திர சித்தரே! போய் வருகிறேன். போவதற்கு முன்னால் கடைசியாக ஒரு வார்த்தை கேட்கிறேன். நாகநந்தி பிக்ஷு யார் என்பது உங்களுக்குத் தெரியுமா?" என்று புலிகேசி கேட்க மகேந்திர பல்லவர், "உத்தேசமாகத் தெரியும்!" என்று கூறி வாதாபிச் சக்கரவர்த்தியின் காதோடு ஏதோ கூறினார்.

"ஆ! உங்களுக்குத் தெரியாதது ஒன்றுமேயில்லை. அப்படித் தெரிந்திருக்கும் போது, அவரை நீங்கள் விடுதலை செய்து என்னுடன் அனுப்பப் போவதில்லையா?" என்று புலிகேசி ஆங்காரமான குரலில் கேட்டார்.

"சக்கரவர்த்தி கோரினால் அவ்விதமே செய்யத் தடையில்லை!" என்றார் மகேந்திர பல்லவர்.

"வாதாபி சளுக்க குலத்தார் யாரிடமும் எந்தக் கோரிக்கையும் செய்து கொள்வதில்லை!" என்று புலிகேசி கம்பீரமாய்க் கூறினார்!"

"காஞ்சிப் பல்லவ குலத்தினர் யாருக்கும் கோராத வரத்தைக் கொடுப்பதில்லை" என்றார் மகேந்திர வர்மர்.

"பல்லவேந்திரா! போய் வருகிறேன்" என்றார் புலிகேசி.

"சத்யாச்ரயா! ஞாபகம் இருக்கட்டும்" என்றார் மகேந்திரர்.

"ஒருநாளும் மறக்க மாட்டேன்" என்றார் வாதாபி மன்னர்.

(தொடரும்)







Chennai - 600 035. ✆ : 4322634

# நீங்கள் கேட்டவை-தராசு






• செய்நேர்த்திச் சிறப்பு!

● என். மாணிக்கம், மின்னல்.

? சுப்ரீம் கோர்ட் உத்தரவை உதாசீனப் படுத்திய கர்நாடக முதல்வர் எப்படி தொடர்ந்து முதல்வராக இருக்கிறார்...? இவர் பதவி ஏற்பு விழாவில் எடுத்துக் கொண்ட உறுதிமொழி என்ன ஆயிற்று...?

! உறுதிமொழி காற்றோடு போயிற்று; பதவியில் நீடிப்பது மத்திய அரசின் கையாலாகாத்தனத்தினால்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை – 1.

? சென்னை கிரிக்கெட் டெஸ்டில் இந்திய பந்துவீச்சாளர்கள் அசத்தியது பற்றி...?

! அசத்தல்தான்; ஆனால் பழகிய பிட்சில் ஆடாமல், புதிதாக வசதியாக பிட்ச் தயாரித்து அதில் ஆடச் செய்ததில் 'சத்தல்' ஆகிவிட்டது.

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

? உங்கள் வீட்டில் ஜவுளிக்கடை பர்சேஸ் யார் பொறுப்பு...?

! 'தராசி'தான்!

● ஆர். அப்துல் சலாம், திருச்சி _ 21.

? பாகிஸ்தானுடன் கிரிக்கெட் ஆட நமது அணியை அனுப்ப வேண்டாம் என மத்திய அரசு எடுத்துள்ள முடிவு சரிதான் என்கிறாரே கபில்தேவ்?

! வாஜ்பாயியே சார்க் மாநாட்டுக்காக பாகிஸ்தான் செல்வதாகத் தீர்மானித்த பிறகு, விளையாட்டில் என்ன பிகு வேண்டியிருக்கிறது? விளையாட்டு என்பதே நட்புறவை வளர்க்கத்தானே; அதை விட்டுவிட்டு விரோதத்தை வளர்க்க அதைப் பயன்படுத்தினால் நாம் பண்பாடு தெரியாதவர் ஆகிறோம்.

● ரோசலின் சாமுவேல், மும்பை - 16.

? நெய்வேலி போராட்டத்தில் டைரக்டர் பாரதிராஜா கலைஞரைச் சாட காரணம் என்ன...?

! அங்கிங்கெனாதபடி எங்கும் இருள்மயமாய்ப் பரவும் அரசியல் மனோபாவம் திரைப்படத் துறையையும் காவிரி பிரச்னையையும் விட்டு வைக்குமா?

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை - 84.

? சென்னை சென்ட்ரல் ரயில் நிலையம் இனி தமிழில் சென்னை 'நடுவன் தொடர் ஊர்தி நிலையம்' என்று அழைக்கப்படுமாமே... மகிழ்ச்சிதானே?

! யார் என்ன பெயர் வைச்சா என்ன...? ஜனங்க சென்ட்ரல் ஸ்டேஷன்தான் போவாங்க; செகண்ட் ஸ்லீப்பர் டிக்கெட்தான் ரிசர்வேஷன் பண்ணுவாங்க; தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் ஏறி டெல்லிக்கோ, பெங்களூர் மெயில்ல ஏறி பெங்களூருக்கோ, சேரன் சூப்பர் ஃபாஸ்ட்ல கோயமுத்தூருக்கோதான் போவாங்க.



● வி. கஜேந்திரன், குத்தாலம்.

? ஜம்மு _ காஷ்மீர் மாநிலத்தில் முதல்வர் பதவிக்குப் போட்டி நடைபெறுவது குறித்து...?

# மதம் மாறுவது கோழைத்தனமாமே?

❒ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
ரொசாரியோ ரவிச்சந்திரன்,
19/10, அந்தோணி தெரு,
கிழக்கு தாம்பரம், சென்னை - 59.

✱ ரூ. 50/- பரிசு பெறுபவர்:
ஆசுரா,
3/100, ஆவணித் தெரு,
நெற்குன்றம், சென்னை - 600 107.

! காலம் தாழ்த்தத் தாழ்த்த வாக்களித்த மக்களுக்கு நம்பிக்கை குறையும். பயங்கரவாதிகளுக்குத் துணிச்சல் பெருகும். வென்றவர்கள் காஷ்மீர் நலன் கருதி விட்டுக் கொடுத்து நல்ல முடிவுக்கு வருவது அவசரமான அவசியம்.

● கே. ரமேஷ்,
பள்ளிபாளையம்.

*? 'சங்கராச்சார்யாரை தரிசிப்பதுதான் அண்ணாவின் கொள்*



• அப்பமன்னா!

*கையா?' என்று தமிழக முதல்வருக்கு கலைஞர் கருணாநிதி கேள்வி விடுத்துள்ளாரே...?*

! 'அண்ணாவின் கொள்கையா? அப்பமன்னா?' என்று கேட்கும் நிலை இரு தரப்பிலும் வந்து ரொம்ப காலமாச்சு... இதில் சங்கராச்சார்யார் தரிசனத்தை மட்டும் பெரிதுபடுத்துவானேன்!

● வே. முருகேசன், சென்னை — 88.

*? 'ரஜினி ஒரு காற்றுப் போன பலூன். அவரால் சிறுவர்களுக்கு ஸ்டைல் காட்டத்தான் முடியுமே தவிர நாட்டுக்கு ஒன்றும் செய்ய முடியாது..' என டாக்டர் ராமதாஸ் கூறுயிருப்பது சரியா...?*

! அதான் 'தேர்தலின்போது பதில் சொல்றேன்'னு சொல்லிட்டாரே ரஜினி; அப்புறமென்ன? நாட்டுக்கு நல்லது செய்வார்னு மக்கள் நம்பினால் வோட்டுப் போடுவாங்க. அதை அவர் நேரடியாகவும் செய்யலாம்; பின்னணியில் இருந்தும் செய்யலாம்; அவர் இஷ்டம்!



• 'அ'ம்மனோபாவம்!



• உறுதியற்ற மொழி!

● ஜி.ஜி. சரவணன்,
மயிலாடுதுறை.

*? தமிழக திரைப்படத்துறையினர் தங்களுக்காகப் போராடிய விதத்தைக் கண்ட காவிரி டெல்டா பகுதி விவசாயி தன் மனத்திற்குள் என்ன நினைத்திருப்பார்?*

! கதை, திரைக்கதை, வசனம் சூப்பர்; நடிப்பும் சூப்பர் என்று நினைத்திருப்பார். ஆயிரம் கவலைகளை மறந்து சற்று நேரம் 'ஷோ' பார்த்த திருப்தி கிடைத்திருக்கும்.



• 'வீர' வசனம்!

• செய்துகாட்டுவோர்!

● ஆசுரா, நெற்குன்றம். ✱

*? நல்ல கவிஞனுக்கு உள்ள அடையாளம் என்ன...?*

! மரத்தில் இலைகள் துளிர்ப்பது போல் கவிதை அவனுக்குள்ளிருந்து ஸ்புரிக்கும் – இது கீட்ஸ் தெரிவிக்கும் அடையாளம். இவ்வாறு ஸ்புரிக்காத கவிதைகள் எழுதப்படாதிருப்பதே நல்லது என்கிறார்.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

*? 'சமுதாயத்தில் மரியாதை இல்லை என்பதற்காக மதத்தைவிட்டு ஓடுவது கோழைத்தனம்' என்று இல. கணேசன் கூறுகிறாரே...?*

! தேர்தலில் ஜெயிக்க வேண்டும் என்பதற்காக கொள்கைகளைப் பறக்கவிட்டு கூட்டணி அமைத்துக் கொள்வது மட்டும் வீரமா...! உண்மையில் அதுதான் கோழைத்தனம்.



'' 'செய்ய வேண்டியதை உடனே செய்'ன்னு ஆபீசுல போர்டு வச்சது தப்பா போச்சா...ஏன்?''

''கேஷியர் அஞ்சு லட்சம் பணத்தோட தலைமறைவாயிட்டார்!''

— பி.எஸ். முருகேஷ்



''திருட்டு அதிகமாகிவிட்டது மன்னா...''

''ஆராய்ச்சி மணியை அடிக்க வேண்டியதுதானே.''

''அதையும் காணோம் மன்னா.''

— எஸ். மோகன்

"எங்க ஏரியா போஸ்ட்மேன் ரொம்ப இங்கிதம் தெரிஞ்சவர்."

"எப்படிச் சொல்றீங்க?"

"திரும்பி வந்த என்னோட கதையைக் கொடுக்கும்போது, பக்கத்துத் தெரு பரந்தாமன் கதையும் திரும்பி வந்திருக்கு சார்னு ஆறுதலா சொல்லுவார்!"

— சீர்காழி வி. ரேவதி



ஏழை மக்களும் அந்தஸ்து தேடும் எளியவர்களும் மதம் மாறுவது, அறியாமையாலும் இயலாமையினாலும் தானேயொழிய, கோழைத்தனத்தினால் அல்ல! அப்படிக் குற்றம் சாட்டும்போது அவர்களை மேலும் அந்நியப் படுத்துகிறீர்கள்!

● ஜி.கே.எஸ். மூர்த்தி,
கோபிசெட்டிப்பாளையம்.

***? விகடனின் பவழவிழா மலர் கண்டீரா?***

! கண்டேன், களிப்புற்றேன். உள்ளடக்கத்தை முந்திக் கொண்டு நவீன செய்நேர்த்தி உள்ளத்தைக் கொள்ளை கொண்டுவிடுகிறது.

● ந.வி.மூர்த்தி, சென்னை — 13.

***? சென்னை மாநகராட்சியின் 2002 — 03 நிதிநிலை அறிக்கைக்கு உட்பட்ட பணிகளில் கடந்த ஏழு மாதங்களில் பத்து சதவிகித பணிகள் கூட நிறைவேறவில்லையாமே... இது பற்றி...?***

! மேயரைப் பதவியிலிருந்து நீக்கும் முக்கியமான பணி நடந்திருப்பது போதும் என்று வைத்துவிட்டார்கள் போலிருக்கு.

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்.

***? தொட்டிலையும் ஆட்டிவிட்டு, பிள்ளையையும் கிள்ளிவிடுகிற கதை — இதற்கு அரசியல் உதாரணம் உண்டா...?***

! தீவிரவாதத்தை ஒழிக்க இந்தியாவுடன் கைகோத்துக் கொண்டு அந்தப் பக்கம் பாகிஸ்தானுக்கும் உதவி வருகிறதே அமெரிக்கா.

● பொன்விழி, அன்னூர்.

***? சிக்கனமாயிருப்பதை கஞ்சத்தனம் என்று சொல்வது சரியா?***

! குழந்தை ஃபைவ் ஸ்டார் கேட்டால் எக்ளேர் வாங்கிக் கொடுப்பது சிக்கனம். 'சாக்லேட்டா, வீட்ல சர்க்கரை வைச்சிருக்கேன் வா' என்பது கஞ்சத்தனம்.

● ரொசாரியோ ரவிச்சந்திரன்,
சென்னை - 59. ❐

***? ஒழுக்கம், கடின உழைப்பு — இவற்றில் நம்பிக்கை வைத்து முன்னேறுவதை விட்டுவிட்டு வாஸ்து, ராசிக் கல் மோதிரம், ஜோசியம் என்று மக்கள் நேரத்தையும் பணத்தையும் செலவிடுகிறார்களே...?***

! இதற்கு முக்கியமான காரணம் என்ன தெரியுமா...? பகுத்தறிவுப் பாசறையில் பயின்று வந்ததாகக் கூறிக் கொள்பவர்கள் அந்தர்பல்டி அடித்து நியூமராலஜி, வாஸ்து, ஜோசியம், யாகம் என்று பைத்தியம் பிடித்து அலைவதுதான்.

## அருண் சரண்யா

# வெளிர் உறவு

எந்த இரண்டு பேருமே முழுமையாக ஒத்த ரசனை கொண்டவர்களாக இருக்க முடியாது என்பது, இந்தப் பதினாறு வயதிலேயே எனக்குத் தெரிந்திருந்தது. ஆனால் உடை உடுத்தும் விஷயத்தில் அம்மாவும் அப்பாவும் இப்படி அண்டார்டிகாவும் சஹாராவுமாக இருந்தது, எனக்குள் அடிக்கடி வியப்பலைகளை ஏற்படுத்திக் கொண்டுதான் இருக்கிறது.

அப்பாவுக்கு உடை என்பது 'மானம் காக்க',அவ்வளவே. அலுவலகத்துக்கு பாண்ட் சட்டை. கோவிலுக்கு வேட்டி துண்டு, வீட்டுக்குள் லுங்கி பனியன் - இவ்வளவுதான் அவரது அதிகபட்ச உடை சித்தாந்தம். அழுக்கான உடையை மாற்றுவது கூட அவரைப் பொறுத்தவரை அதிகப்படி. அழுக்கு தெரியும்போது மாற்றிக்கொண்டால் போதாதா?

அம்மா எதிர் ஜாதி. உடைகளைத் தேர்வு செய்வதில் மட்டுமல்ல. அவள் உடுத்திக் கொள்வதிலும் ரசனை நன்கு வெளிப்படும். அவளது உடைகளுக்கென்று தனி பீரோ. அதில் எப்போதும் சந்தன மணம் கமழும். அல்லது கதம்ப மலர்களின் வாசம் வீசும். அவற்றிற்கான வாசனைப் பொடி பாக்கெட்டுகளை அவ்வப்போது வாங்கி நிரப்புவாள். ஒருமுறை ஒரு புடைவையைப் பயன்படுத்தினால் அதை டிரைக்ளீனிங் செய்த பிறகுதான் மறுமுறை உடுத்துவது, ஒவ்வொரு புடைவைக்கும் இரண்டு பொருத்தமான ஜாக்கெட்டுகள் என்று பலவித நெறிமுறைகளைக் கடைப்பிடித்தாள்.

அம்மாவின் பீரோவைப் பார்ப்பதே பரவசம் தரும். எந்தெந்தப் புடைவைகளை, எந்த வரிசையில் வைத்தால் கண்ணுக்கு ரம்மியமாக இருக்கும் என்று சிந்தித்து அடுக்கியது போல் காட்சி தரும். எந்த அவசரத்திலும் புடைவை கட்டுவதற்கு எடுத்துக் கொள்ளும் நேரத்தை மட்டும் அம்மா குறைத்துக் கொண்டதே இல்லை.

ஆனால், சிறுவயதில் என்னை பிரமிக்க வைத்த அம்மாவின் அதீத உடை ரசனை நாளடைவில் கொஞ்சம் மாறிவிட்டது. இவ்வளவு ஈடுபாடு உடை விஷயத்தில் இருப்பது கொஞ்சம் ரசக்குறைவாகக் கூடப்பட்டது. அதுவும் பாட்டி அதுகுறித்து அடிக்கடிக் குறைப்பட்டுக் கொண்ட பிறகு, பாட்டி அதே ஊரில் ஐந்து தெரு தள்ளியிருக்கும் பெரியப்பா வீட்டிலேயே தங்கத் தீர்மானித்ததற்கு, அம்மாவின் அதீத உடை விருப்பமும், அது தொடர்பான சச்சரவுகளும் முக்கியக் காரணங்களாக இருந்தன. நாகரிகக் குறைவான சண்டைகள் இல்லை அவை. ஆனால் அடிக்கடி இரு தரப்பிலும் 'நறுக் சுருக்' அம்புகள் பறந்து கொண்டிருந்தன.



'இனி என் பெரிய பிள்ளை வீடுதான்' என்ற முடிவுடன் பாட்டி கிளம்பியபோது, அப்பாவின் கண்களிலிருந்து தொடர்ந்து நீர் வழிந்தது. அம்மாவின் முகத்தில் எந்தவித உணர்ச்சியையும் காண முடியவில்லை. பாட்டி ஆட்டோவில் அப்பாவோடு ஏறிக் கொண்டபோது, 'ஒரு நிமிஷம்' என்றபடி உள்ளேயிருந்து ஒரு கம்பளியைக் கொண்டு வந்து கொடுத்தாள். குளிர்காலம் தொடங்கியிருந்தது. "அதைக் கொடுப்பதற்காக நான் இன்னொரு முறை போயிருப்பேன்" என்று பிறகு அப்பா

ஆற்றாமையோடு கூறினார்.

பாட்டி பிரிந்து போனாலும் அதில் ஒரு நாசுக்கு இருந்தது. எனவே, பெரியப்பா வீட்டிற்கு அப்பா அடிக்கடி போவதில் எந்தத் தடையோ, தயக்கமோ ஏற்படவில்லை. ஆனால் ஒருமுறை கூட அம்மா தானாகச் சென்று பாட்டியைப் பார்த்ததில்லை. அப்பாவாகக் கூப்பிட்டால் மறுப்பு சொல்லாமல் கிளம்புவான். அங்கே போனாலும் மிகக் குறைந்த வார்த்தைகள்தான். பாட்டியின் முகத்தைப் பார்க்கப் பாவமாக இருக்கும். ஆறுதல் வார்த்தைகளுக்காக ஏங்கும் வயது. ஏதோ என்னாலான உற்சாகத்தைத் தந்துவிட்டு வருவேன்.

இவ்வளவையும் மீறி அம்மா அப்படியொன்றும் அநியாயம் செய்துவிடவில்லையென்றும் தோன்றிக் கொண்டே இருந்தது. பாட்டி ஏதோ தவறாக நடந்து கொண்டிருப்பாள் என்று குருட்டு சந்தேகம்.

திடுமென்று ஓர் இருமல் மருந்தை வாங்கிக் கொண்டு வந்து



அப்பாவிடம் தருவான். எந்த விளக்கமும் இருக்காது. முதல்நாள் பாட்டியைப் பார்க்கச் சென்றிருந்த போது பாட்டி இடைவிடாமல் இருமிக் கொண்டிருந்தது நினைவுக்கு வரும். அப்பா அதைத் தன் பையில் வைத்துக்கொள்வார், மாலை பெரியப்பா வீட்டுக்கு எடுத்துச் செல்வதற்காக. ''என்ன இருந்தாலும் பாட்டியிடம் அம்மாவுக்கு ஒரு பாசம் இருக்கத்தான் செய்யுது'' என்றபோது அப்பா கொஞ்சம் விரக்தியாக "குழந்தைகள் இருக்கும் வீட்டுக்கு பிஸ்கட் பாக்கெட் வாங்கிப் போவது

> ‘‘பாட்டி சாகப் பிழைக்கக் கிடக்கும் போது அப்படி ஒரு உடை அலங்காரமும் மேக்கப்புமாக அம்மா வந்ததைச் சொல்றேன்?’’

மாதிரிடா இதெல்லாம். ஒரு மரபு. அவ்வளவுதான். பாசம் இல்லை" என்றார்.

**வா**ர இறுதி நாட்களில் பெரியப்பா வீட்டுக்கு ஒருமுறை நான் சென்றிருந்த போதுதான் பாட்டி மார்பைப் பிடித்துக் கொண்டு 'ஐயோ' என்றலறினாள்.

ஏதோ விபரீதம் என்று உணர்ந்து அடுத்த தெரு டாக்டருக்கு போன் செய்தார் பெரியப்பா. "நான் போய் அப்பாவை அழைச்சிக்கிட்டு வரேன்' என்றபோது தடுத்தார். "உன் உதவி தேவைப்படலாம்" என்றபடி, தகவலை அப்பாவுக்குத் தொலைபேசி மூலம் தெரிவித்தார்.

டாக்டர் வந்து பல கேள்விகளைக் கேட்டார். பாட்டியைப் பரிசோதித்து மாத்திரைகள் கொடுத்துவிட்டுச் சென்றார். காலையில் மருத்துவமனைக்கு அழைத்து வரச் சொன்னார்.

அவர் கிளம்பிய அடுத்த இரண்டாவது நிமிடம் "அம்மாவுக்கு என்ன ஆச்சு?" என்ற பதற்ற ஒலி கேட்டது. அப்பா, பின்னால் அம்மா. அத்தனை பேருக்கும் அந்த ஸ்ருதிபேதம் புலப்பட்டது.

அம்மா பட்டுப்புடைவையில், பொருத்தமான ரவிக்கையோடும், ஒப்பனையோடு காட்சி தந்தாள். காதில் தொங்கட்டான்கள். இலேசான 'சென்ட்' மணம் வேறு. "உங்கம்மா சீரியஸானது இவளுக்குக் கொண்டாட்டமான விஷயமோ என்னவோ?" என்று பெரியம்மா தன் கணவரிடம் முணுமுணுத்தது என் காதுகளிலும் விழுந்தது.

அடுத்து அம்மா செய்த காரியமும் பொருத்தமற்றதாக இருந்தது. இறந்தவரின் உடலுக்கெதிரில் நின்று கண்மூடி அஞ்சலி செலுத்துவார்களே, அதுபோல் கண்களை மூடிக் கொண்டு ஏதோ முணுமுணுத்தாள். பிரார்த்தனையோ?

மறுநாள் பாட்டி இறந்துவிட்டாள். அப்பாதான் அதிகம் நிலைகுலைந்தார். பெரியப்பா அவரைத் தேற்றினார். அம்மா அப்படியெதற்கும் முயற்சித்ததாகத் தெரியவில்லை. "உங்கப்பா அழுதுதான் ஓயணுண்டா" என்று என்னிடம் சொன்னபோது முகத்தைத் திருப்பிக் கொண்டேன்.

**கா**ரியங்கள் முடிந்தபிறகு வீடு திரும்பினோம். அப்பாவுடன் கிடைத்த தனிமையில் அவர் உணர்வுகளை நானும் பகிர்ந்து கொள்வதை உணர்த்த விரும்பினேன்.

"அம்மாவாலே எனக்கும் ரொம்ப அவமானமாப் போச்சப்பா" என்றேன்.

"நான் என்னடா செய்வேன்?" என்பது போன்ற ஓர் கையாலாகாத உணர்வை எதிர்பார்த்திருக்க, அப்பாவின் முகத்தில் அதிர்ச்சி தெரிந்தது. "ஏண்டா அப்படிச் சொல்றே?" என்றார்.

"பாட்டி சாகப் பிழைக்கக் கிடக்கும் போது அப்படி ஒரு உடை அலங்காரமும் மேக்கப்புமாக அம்மா வந்ததைச் சொல்றேன்?"

"அன்னைக்கு அம்மாவும் நானும் மஞ்சுநாத் சார் வீட்டுக் கல்யாண ரிசப்ஷனுக்காகக் கிளம்பிக்கிட்டிருந்தோம்டா. அப்போதான் பாட்டி சீரியஸ்ங்கிற தகவல் வந்தது."

"இருக்கட்டுமே. டக்குனு எளிமையா ஒரு புடைவையை மாத்திக்கிட்டு முகத்தை அலம்பிண்டு வந்திருக்கலாமே. யாருக்குமே அப்படித்தானேப்பா தோணும்?"

"உங்கம்மாவுக்குத் தோணல்லே... நான்கூட வழியிலே 'இன்' செய்துக்கிட்டிருந்த சட்டையை வெளியே எடுத்து விட்டுக்கிட்டேன்" என்றவர் சற்று இடைவெளிவிட்டு "அதனாலேதான் உங்க அம்மாவை எனக்கு அதிகம் பிடிக்குதுடா" என்றார் நெகிழ்வு பொங்கிய குரலில். ○

## சிங்காரி சிநேகா தரும் ஆடை டிப்ஸ்!

**பு**ள்ளிகள், கோடுகள், கட்டங்கள் கொண்ட உடைகள் அணியும்போது, அவை உடலமைப்பின் குறைகளை அப்பட்டமாக காட்டிக் கொடுத்து விடும் அபாயமிருப்பதால் குறைகளை மைனஸ் செய்யும் விதத்தில் கச்சிதமாகத் தைத்து அணிய வேண்டும்.

அட்டை வண்ணப்படம்: **சங்கர் சத்தியமூர்த்தி**

# ஆல்பம்

பொறுப்பில்லாதவர்கள், பாலியல் தவறுகளை பாப்கார்ன் சாப்பிடுவதுபோல எடுத்துக் கொள்கிறவர்கள், இனக்கவர்ச்சியை காதலாகக் கற்பித்துக் கொள்கிறவர்கள்-இவைதான் சமீபத்திய தமிழ்ப் படங்கள் சித்திரித்து வரும் இளைஞர் உலகம். இதிலிருந்து மாறுபட்டு, இளைஞர்கள் தரமாகச் சிந்திக்கக் கூடியவர்கள், குடும்ப அமைப்பின்மீது நம்பிக்கையும் பொறுப்பும் கொண்டவர்கள் என்பதாக, கொஞ்சம் யதார்த்தத்தையும் சொல்ல முயன்றிருக்கிறார் புதிய இயக்குனர் வசந்த பாலன்.



இருபது வயதில் கம்யூனிசக் கொள்கையின் பால் கவரப்படும் இளைஞனை, நாயகனாக முன் நிறுத்தி, படத்தைத் தொடங்குகிறார்கள். ஆனால் அந்த இளம் காம்ரேட், 'புரட்சி வராது' என்று புரிந்து கொண்டாரோ என்னவோ, பிறகு குடும்பம், காதல், வில்லன் என்கிற பேமிலி டிராமாவுக்குள் அவரும் ஒரு தமிழ்ப்பட நாயகனாகி விடுகிறார். நாயகன், நாயகி இருவருக்கும் அடுத்தடுத்த வீடு. இருவரது குடும்பங்களுக்கு இடையிலும் நல்ல அந்நியோன்யம். இருந்தும், இவர்கள் இருவரும் காதல் வயப்பட்டிருப்பது கடைசியில்தான் தெரிய வருகிறது, என்றால் எப்படி நம்ப?

படத்தில் கூடுதல் யதார்த்தத்தோடு மிளிர்வது உறவு முறைகளுக்கு இடையிலான உணர்ச்சிகளைச் சித்திரித்துள்ள விதம். குறிப்பாக, நாயகன் ஜீவா (ராஜேஷ்), அவரது தந்தை (பாலச்சந்திர மேனன்), தாய் (சரிதா), தங்கை (ஹேமலதா), காதலி (ஸ்ருதிகா) இடையிலான பாசமும், காதலும், ஒவ்வொரு கோணத்திலும் கவிதை.

வீட்டை விட்டு வெளியேறிய மகனைப் பார்க்கத் தவிப்போடு சென்னைக்கு வரும் அப்பாவாக, மலையாள நடிகர் பாலச்சந்திரமேனன் வெளிப்படுத்தும் அளவான உணர்ச்சிகள், நடிப்பைக் கற்றுக் கொள்ள விரும்புகிறவர்களுக்குப் பாடம்.

ஒரே ஒரு காட்சியில் வந்து போனாலும் பாப்லோ நெருடா மாதிரி கவிதையை ஆயுதமாக்கும் கனவுகளோடு, சென்னைக்கு வந்து, தள்ளுவண்டியில் நாவல் பழம் விற்கிற பிரகாஷ் ராஜ் பாத்திரம் கனம்.

விடிந்தால் திருமணம் என்ற நிலையில், 'இரண்டு பேரும் ஓடிப் போயிடலாம்' என்ற ரீதியில் கல்யாண மண்டப மொட்டை மாடியில் பகிரங்கமாக நாயகன் நாயகி பேசிக் கொண்டிருப்பதும், இறுதியில் எதிர்பார்த்த மாதிரியே இருவரும் இணைந்து விடுவதும், படத்தை மேலோ டிராமாவாக ஆக்கி விடுகிறது என்றாலும் புரட்டப் புரட்ட போரடிக்கவில்லை என்பதே ஆல்ப ஆறுதல்.

- விஷுவல்தாசன்

● அபவ் ஆவரெஜ்

# மானம் காக்கும் மேரி!

வெப்பமும் வெளிச்சமுமாய் விரிந்து கிடக்கிறது அந்த ரயில்வே ஸ்டேஷன். மின்சார ரயிலொன்று, தடதடத்து வந்து நின்றதும், ஏறுவதும் இறங்குவதும், படிகளில் முட்டி மோதிக் கொண்டு ஓடுவதுமாக, எல்லாருக்கும் ஏதோ அவசரம்! என்னவோ தலை போகிற வேலை!

இரண்டு கைகளிலும் துணிப் பைகளை, தூக்க மாட்டாமல் சுமந்து கொண்டு வரும் மேரி – ராஜேந்திரன் தம்பதிக்கும் குடும்பம், அலுவலகம், வேலை, என ஆயிரம் வேலை இருக்கத்தான் செய் கிறது. ஆனாலும் அவர் களின் செயலைக் கவனியுங் கள். அதில்தான் எத்தனை அன்பு!



• மேரி



• ராஜேந்திரன்

அழுக்கேறிய சிமெண்ட் பெஞ்சுக்கு அடியில், சுருண்டு கிடக்கும் 'அந்த' உருவத்தை நெருங்குகிறார்கள். மெள்ள, தட்டி எழுப்பும் மேரி, குச்சி போல உலர்ந்த அந்த இளைஞனின் கைகளில் ஏதோ ஒரு தின்பண் டத்தை வைக்க, அவன் மலங்க மலங்க விழிக்கிறான். சட்டென்று ராஜேந்திரன், அவனது உடலில் பெயருக்கு ஒட்டிக் கொண்டிருக்கும் கந்தலாடையைக் களைந்து விட்டு, பையிலிருக்கும் பேண்ட், சட்டையை மாட்டி விடுகிறார். அழுக்கேறிய துர்வாடை வீசும் பழைய துணியை ஞாபகமாகச் சுருட்டி பாலிதீன் கவரில் வைத்துக் கொண்டு கிளம்புகிறார்கள், மேரி, ராஜேந்திரன் தம்பதி!

பல வருடங்களாக, இந்த 'மானம் காக்கும் சேவை'யை ஓசையில்லாமல் செய்து வரும் வித்தியாசமான தம்பதியைப் பற்றிக் கேள்விப்பட்டு, அவர்களைச் சந்திக்க பல்லாவரம், பச்சையம்மன் நகருக்குச் சென்றோம்.

"பேட்டியெல்லாம் வேணாம். ஏதோ எங்களாலே முடிஞ்ச சிறு சேவை" என்று மேரி முதலில் மறுத்தாலும், விடாப்பிடியாகப் பேசியதில், கொஞ்சம் மனமிரங்கினார். "நானும் என் கணவரும் ஒரு நாள் அலுவலகம் போய்க் கொண்டிருந்தோம். தெருவோரம் இருந்த குப்பைத் தொட்டி அருகே ஒரே கூட்டம். என்னவென்று எட்டிப் பார்த்த எங்களுக்கு அதிர்ச்சி தாங்கவில்லை. இருபத்தைந்து வயது மதிக்கத்தக்க இளம் பெண்ணொருத்தி, மனநிலை பாதிக்கப்பட்டவள். எச்சில் இலைகளைக் கிளறிக் கொண் டிருந்தாள். அவள் உடம்பில் மெல்லிய நைலான் புடைவை; அதுவும் ஏகப் பட்ட கிழிசல்களுடன் அவிழ்ந்து தொங்கிக் கொண்டிருந்தது. விடலைப் பையன்கள் சுற்றிலும் நின்று சிரித்துக் கொண்டிருக்க, சின்னப் பையன்கள் கல்லெறிந்தும், குச்சியால் குத்தியும் இம்சை செய்து கொண்டிருந்தார்கள். அதைக் கண் டதும் என் கணவருக்கு நெஞ்சு பொறுக்க வில்லை. கூடியிருந்த கும்பலை விரட்டினார்.

**ஆடைச் சிறப்பிதழ்**



என்னைக் காவலாக நிற்க வைத்துவிட்டு, ஓரே ஓட்டமாக வீட்டுக்கு ஓடி, என்னுடைய பழைய நைட்டியை எடுத்து வந்தார். முதலில் முரண்டு பிடித்து, திமிறிய அந்தப் பெண், எங்கள் டிபன் பாக்ஸிலிருந்த தோசையை எடுத்துக் கொடுத்ததும், கொஞ்சம் அமைதி யானாள். கையில் கிறல் எல்லாம் வாங்கிக் கொண்டு நைட்டியை ஒருவழியாக மாட்டி விட்டோம்.

"அன்றைக்கு அலுவலகத்துக்கு இரண்டு பேருமே லேட். ஆனாலும் மனசுக்குள் விவரிக்க முடியாத சந்தோஷம். சமூகத்தால் வெறுத்து ஒதுக்கப்பட்ட இந்த மாதிரியான ஜீவன்களுக்கு, சுயநினைவே இல்லாத மன நிலை பாதிக்கப்பட்டவர்களுக்கு, 'ஆடை அணிவிப்பதைத் தொடர்ந்தால் என்ன?' என்று தோன்றியது. அந்த நல்ல எண்ணமும் கடவுள் கிருபையால்தான் ஏற்பட்டது. அதற்கு ஆண்டவனுக்கு நன்றி" என்றார் மேரி.

**ம**னிதாபிமானமிக்க இந்தச் சேவையில் மேரிக்கு இப்போது அவரது மகன் விக்டர் துணையாகப் போகிறார். காரணம், ராஜேந்திரன் இப்போது உயிருடன் இல்லை. எட்டு மாதங்களுக்கு முன்பு எலும்புப் புற்றுநோயால் இறந்துவிட்டார் ராஜேந்திரன்.

"காலடியிலே இருக்கிற பூமி, சட்டென்று பிளந்து கொண்டால், எப்படி அதிர்ச்சி ஏற்படுமோ அப்படி நடந்து போச்சு. அவர் ரொம்ப ஆரோக்கியமானவர். எந்தக் கெட்டப் பழக்கமும் இல்லாதவர். 'இரக்கப்படுகின்றவன் பாக்கியவான்'னு எப்பவும் சொல்லிக்கிட்டிருப்பார். அவர் கோமா நிலைமைக்குப் போறதுக்கு முந்தி கூட, "நான் இல்லங்கிறதுக்காக, உடுப்பு தர மறந்துடாதே மேரி! விக்டரை அழைச்சுக்கிட்டுப் போ" என்று சொன்னார். அதற்கப்புறம் முழு வார்த்தையா அவர் எதுவுமே பேசலை" என்று கண்களைத் துடைத்துக் கொண்டார் மேரி.

''ட்ராஃபிக் கான்ஸ்டபிளும் நம்ம தலைவரும் ஒண்ணா.. எப்படி?''

''அடிக்கடி மக்களை திசை திருப்பி விடுறாரே!''

— தஞ்சை தாமு




**'வீ**சும் துர்நாற்றத்தைத் தாங்கிக் கொண்டு, மனநிலை பாதிக்கப்பட்டவர்களிடம் நெருங்கிப் பழக நிறைய சகிப்புத் தன்மை வேண்டுமில்லையா?' என்று கேட்டால், "நம்ம கூடப் பிறந்த அக்காவோ, தம்பியோ இப்படிக் கிடந்தா, பார்த்துக்கிட்டு சும்மா போவோமா?" என்று பளிச்சென்று கேட்கிறார் மேரி.

கணவர் இராஜேந்திரன் உயிரோடு இருந்த போதே, 'ஜோசஃப் இல்லம்' என்ற கருணை இல்லத்தை மிக எளிமையான முறையில் நடத்தி வந்தாராம். எதிர்பாராத விதமாக அவர் நோய்வாய்ப்படவே, ஜோசஃப் இல்லவாசிகளைப் பராமரிக்க முடியாத மேரி, தனக்குத் தெரிந்த முதியோர் இல்லங்களிலும், அநாதைகள் விடுதிகளிலும், விட்டுவிட்டு வந்திருக்கிறார். ராஜேந்திரன் இறந்த செய்தி கேட்டு அழுத உள்ளங்கள் மீண்டும் மேரியிடமே வந்து, "நீங்க கஞ்சி ஊத்தினாலும் பரவாயில்லை. நாங்க உங்க கூடவே இருக்கோம்" என்று சொல்லவே, மீண்டும் ஜோசஃப் இல்லத்தை நிர்மாணிக்கும் யோசனையிலிருக்கிறார் மேரி.

''எனக்கு அரசாங்க வேலை. என் கணவரும் தனியார் கல்லூரியில் உயர் பதவியில் இருந்தவர். ஆசைக்கொரு மகளும், அன்புக்கொரு மகனுமாக மகிழ்ச்சிகரமாகப் போய்க் கொண்டிருந்த என் வாழ்க்கை, இப்படிச் சூன்யமாகிப் போனதற்கும் ஏதோ ஒரு காரணம் இருக்க வேண்டும். கர்த்தர், என்னை ஏதோ ஒரு பெரிய காரியத்துக்காகத் தயார் செய்கிறார் என நம்புகிறேன். என் கணவரின் சேமிப்பையெல்லாம் போட்டு, கருணை இல்லத்தை விரிவுப்படுத்தப் போகிறேன். அதற்கு, நல்ல நெஞ்சங்களின் ஆசி தேவை என்கிறார் மேரி.

— ஆதர்ஷ்

படம் : யோகா



# புற்று நோய்க்கு தெய்வீக இயற்கை மூலிகை மருத்துவம்



நம் உடலில் உள்ள ஒவ்வொரு செல்களும் வளருகின்றன. ஒவ்வொரு நிமிடமும் பழைய செல்கள் அழிந்து புதிய செல்கள் உருவாகி கொண்டே இருக்கின்றன. இதற்கு இயற்கையாகவே ஒரு கட்டுப்பாடு உள்ளது. ஆனால் சில செல்கள் கட்டுப்பாடின்றி உடலில் எந்த இடத்திலும் பல்கிப் பெருக வளர ஆரம்பிக்கும். கட்டுப்பாடு இல்லாமல் வளர்ச்சியடையும் செல்கள் ஒரு கட்டியாக மாறுகிறது. இதைத்தான் புற்றுநோய் என்கிறோம். எல்லா ரக புற்று நோய்களுக்கும் சில வகை பழக்க வழக்கங்களே காரணமாக இருக்கின்றன. புகையிலை போடுவதால் வாயில் புற்று நோய், சிகரெட் பிடித்தல் காரணமாக நுரையீரல், தொண்டை, உணவுக் குழாய், மூத்திரப் பையில் புற்று நோய், பொடி போடுவதால், மூக்கில் புற்று நோய், மது அருந்துவதால்காமாலை வந்தால் கல்லீரல், இரைப்பையில் புற்று நோய் அதிக குழந்தைகளை பெறுதல், பல ஆண்களுடன் தொடர்பு கொள்ளுதல் ஆகியவற்றை கர்ப்பப்பை புற்று நோய், ஏற்படுகின்றது. மேலும் நாம் உண்ணும் உணவு வகைகள் தயாரிப்பில் நிலங்களில் அதிகமாக இரசாயன உரங்கள், மருந்துகள் சேர்ப்பதாலும், சுகாதாரமற்ற சுற்றுபுற சூழ்நிலைகளாலும், அவ்வப்போது நாம் உபயோகிக்கும் இரசாயன மாத்திரைகளாலும் அதிகமான கோபம், பயம், மன உளச்சல், பரபரப்பு அடிக்கடி உணர்ச்சி வசப்படுதல் போன்றவற்றின் காரணமாக தோன்றும் நரம்புத் தளர்ச்சியாலும் புற்று நோய் வரலாம். ஒரு புற்று நோய் செல் பல்கி பெருகி புற்று நோய் கட்டியாக மாறுவதற்கு குறைந்தது 7 முதல் 10 ஆண்டுகள் ஆகும்.

**புற்றுநோய் ஆரம்ப அறிகுறிகள் :** ஒவ்வொரு உறுப்புக்கும் எந்தவிதமான நோய் வந்தாலும் ஒரே விதமான அறிகுறிகள் தான் தென்படுகின்றன. உதாரணமாக காச நோய், நிமோனியாக் காய்ச்சல் ஆகியன நுரையீரலைத்தாக்கும்போது இருமல், சளி, மூச்சு வாங்குதல், சளியில் இரத்தம் ஆகிய அறிகுறிகள் தென்படுகின்றன. நுரையீரலைப் புற்றுநோய் தாக்கும் போதும், இதே அறிகுறிகள்தான் இருக்கும். இதேபோன்று வயிற்றுப் புண்ணுக்கு இருக்கும் அறிகுறிகள்தான் இரைப்பையில் புற்றுநோய் வந்தால் இருக்கும். எனவே எந்த நோயின் அறிகுறிகளும் இரண்டு வாரத்திற்கு மேல்இருந்தால் உடனடி மருத்துவ ஆலோசனை அவசியம். எச்சில் துப்பும்போது ரத்தம் வந்தால் அலட்சியப்படுத்தக் கூடாது. ஏனெனில் புற்று நோய்க்கென தனிப்பட்ட அறிகுறிகள் கிடையாது. பொதுவான அறிகுறிகளுடன் புற்று நோய் இருக்க வாய்ப்புகள் அதிகம்.

**புற்றுநோய்க்கு தெய்வீக மூலிகைகள் :** வேப்பிலை, வில்வம், துளசி, மாவிலை, அருகம்புல், அத்தி, வெற்றிலை, தும்பை, கீழாநெல்லி, நித்திய கல்யாணி, முருங்கை, நெல்லி, கரிசலாங்கண்ணி, வல்லாரை ஆகியவைகளை பொடி செய்து பின் சமஅளவில் ஒரு பாட்டிலில் கலந்து வைத்துக் கொள்ளவும். பின் இதில் இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு ஒரு மணி நேரம் முன்பாக காலை, பகல், இரவு ஆகிய மூன்று வேளையும் உட்கொள்ள வேண்டும். இம் மூலிகைகளினால் முதலில் புற்று செல்கள் பெருகி வளர்ச்சி அடைவது தடுக்கப்படுகின்றது. பின்னர் புற்று செல்கள் உருவாகாமலும், கட்டிகள் உடைந்து மெதுவாக வெளியேற்றப்படுகின்றது. இந்த தன்மை மேற்கூறிய மூலிகைகளுக்கு உண்டு என்பது மறுக்கப்படாத உண்மையாகும்.

**புற்று நோய்களைத் (தவிர்க்கும்) தடுக்கும் உணவு வகைகள் :** புற்று நோயாளிகளுக்கு பச்சை காய்கறிகள் நல்லது. மஞ்சள் நிறத்திலும், பச்சை நிறத்திலும் உள்ள காய்கறிகள் மற்றும் பழங்கள் புற்று நோயைத் தடுக்க கூடியவை. இவற்றில் வைட்டமின். A, C சக்திகள் அதிகம். வைட்டமின் A-வில் பீட்டாகரோட்டின் என்ற பொருள் உள்ளது. இது ஒரு ஆண்டி ஆக்சிடெண்ட் புற்றுநோயை தடுக்கும் குணம் இதற்குண்டு. **காரட், தக்காளி, மாம்பழம், பலாப்பழம், கொய்யா, ஆரஞ்சு, ஆப்பிள், திராட்சை, எலுமிச்சை, நெல்லிக்காய், முட்டைகோஸ், பீட்ரூட் போன்றவற்றில் மேற்சொன்ன சத்துக்கள் அதிகமுள்ளன.** இவற்றை அடிக்கடி உண்பவர்களுக்கு புற்றுநோய் வாய்ப்பில்லை. இதேபோல் நார்பொருள் நிறைந்த உணவுகளை சாப்பிட்டால் பெருங்குடல் தொடர்பான புற்றுநோய்கள் வருவது குறைகிறது. கோதுமை, கம்பு, சோளம், கேழ்வரகு, தேங்காய், நிலக்கடலை, அவரை, கத்திரிக்காய், வெள்ளரிக்காய், வெண்டைக்காய், பட்டாணி, வெங்காயம், பேரிச்சம்பழம், வாழைப்பழம் ஆகியவற்றில் நார்ச்சத்து அதிகம். மேலும் முருங்கை கீரை, பொன்னாங்கன்னி கீரை, மணத்தக்காளி கீரை, மஞ்சள், சீரகம், துளசி, கசகசா, வெள்ளைப்பூண்டு ஏலக்காய் ஆகியவற்றிலும் புற்று நோயைத் தடுக்கின்ற நொதிப் பொருட்கள் அடங்கியுள்ளன. ஆகவே இவைகளை அடிக்கடி நமது உணவுகளில் தவறாமல் பயன்படுத்துவது நல்லது.



*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்* **Chennai Cell : 98410 45138 Vellore Cell : 98423 69696**

தலைமை முகவரி : Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, Dr.M.சிவசக்தி, S/o Dr.C.K.மாணிக்கவாசகம்

P.B.No.30, No.3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A.) - 635 601 ✆ 04179-220469, 222769

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 10

**இரு முகவரிகளிலும் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1, மாலை 5 to 7** ✆ 6424285, 6427638

**குறிப்பு :** சென்னை, வேலூர், காஞ்சிபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர், ஓசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம் - விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**தகவல் :** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 28 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய **'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.100/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய **'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.100/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.70/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

**7 & 8ந் தேதி** - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), ✆ : 4011589, 4083879

**9ந் தேதி** - பெங்களூர் : காலை 11 to மாலை 1 மணி வரை, ஹோட்டல் பிரட்வே, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பேகவுடா ரோடு. ✆ : 080-2266374, 2873013

**18 & 19ந் தேதி** - புதுடெல்லி : காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, ✆ : 5717126, 5723651

## பா. ராகவன்

தொடர் -1

# ஹாய்..!

இரண்டு கார்கள். ஒரு வேன். கதவுகள் திறந்து, கால்கள் தரையைத் தொட்டதும் மண்டபம் பரபரப்படைந்தது. மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் வந்து விட்டார்கள். ஆரத்தி எங்கே? அப்பா எங்கே? ஓடிப் போய் மைதிலிக்கு விஷயத்தைச் சொல்லு. அவள் ஜானவாச ரவிக்கை கொஞ்சம் பிடிப்பதாகச் சொன்னாளே, பிரித்துக் கொடுத்தாயிற்றா? காப்பி, காப்பி ரெடியா என்று சமையல்காரரைக் கேள். அவர்கள் பக்கத்தில் பல பேருக்கு ஷுகர் கம்ப்ளைண்ட். விசாரித்து, கவனிக்கச் சொல்லு. வாங்கோ, வாங்கோ.

போட்டோகிராபர் முதல் படத்துக்கு ஃபோகஸ் செய்து முடிப்பதற்குள் மாப்பிள்ளை நகர்ந்து உள்ளே வர, கட்டி வைத்த வாழையைக் காதலுடன் பார்த்துக் கொண்டிருந்த மாடு மங்களகரமாக முதலில் பதிவானது. அதனாலென்ன, பசு மாடு. பரம விசேஷம்.

கூட்டம் உள்ளே நுழைந்ததும் ஆரத்திச் சிவப்பில் கோலம், வேறு கோலம் கொண்டது. எல்லாமே அழகுதான். எல்லாமே மங்கலம்தான். மனசு அல்லவா தீர்மானிக்கிறது?

பெண் இருக்கும் அறையை மாப்பிள்ளை பார்வையில் தேடிக் கொண்டிருந்தார். ஒரு தரிசனம். அரைப் புன்னகை. உதட்டு நடனத்தில் ஒரு ஹலோ. தவறென்ன? நிச்சயதார்த்தம் முடிந்த மறுதினமே, என்னவோ ஐ.எஸ்.ஓ. ஆடிட் என்று அகமதாபாத் போய் விட்டார். மாநிலத்தின் மதக் கொந்தளிப்பு எஸ்.டி.டி. பூத்களுக்கு விடுமுறை அளித்திருந்த சமயம் அது. வேண்டாத வெளிதேச விருந்தாளிகளுக்கு எச்சரிக்கை விடுக்க, வேண்டிய மத்திய அமைச்சர்கள் விமானம் பிடித்து வந்திறங்கிய காவல் கெடுபிடி நாட்கள்.

வருங்கால மனைவியுடன் போனில் கூடப் பேச முடியாத மாப்பிள்ளை. நாடு தழுவிய கட்டுமான நிறுவனத்தில் சீனியர் இஞ்சினியர். அகமதாபாத்திலிருந்து ஐதராபாத். பிறகு பகளாபாத். பிஸிபேளாபாத். மைதிலியும் இனிமேல் கூடவே சுற்றிக் கொண்டுதான் இருக்க வேண்டும்.

"ஐ, ஜாலி!" என்றாள் அவள். நல்லுறவு வளர்த்து வர வெளிதேசங்கள் செல்லும் குடியரசுத் தலைவர், உபகுடியரசுத் தலைவர்களின் மனைவிகளைத் தவறாமல் அவள் தொலைக் காட்சிகளில் பார்த்திருக்கிறாள். எத்தனை இனிமையான வாழ்க்கை என்று எண்ணியிருப்பாள். அத்தனை சொகுசு வாய்க்காவிட்டாலும் கட்டுமான இஞ்சினியரின் மனைவியாகக் குறைந்தபட்சம் சென்னைக்கு வெளியிலாவது சென்று பார்க்க முடியும்.

"நாலு ரீஜன்ல, எப்ப வேணா, எங்க வேணா ட்ரான்ஸ்ஃபர் பண்ணுவா" என்று மாப்பிள்ளையின் அப்பா முன்னதாக அறிவித்திருந்தார்.

திருவல்லிக்கேணியில் வீடு அமைந்தால் தேசத்தின் ஒரு எல்லை மிகவும்

குறுகி விடுகிறது. அங்கே இரவெல்லாம், பகலெல்லாம் விழித்திருந்து வடக்கு நோக்கிக் கை காட்டும் அண்ணா இந்த வாழ்க்கையைத்தான் இத்தனை வருஷங்களாகச் கட்டிக்காட்டியிருக்கிறார் போலும். பெரியவர்களுக்கு நன்றி.

விடுவா" என்றாள் அனு.

"சீ போ" என்று செல்லமாக வெட்கப் பட்டாள் பாட்டி. "நீயும் ஒண்ணும் இப்போ அதெல்லாம் பண்ணிக்க வேண்டாம். அக்கா கல்யாணம்னா, தங்கை கொஞ்சம் அசமஞ்சமா காட்டிக்கறதுதான் நல்லது" என்றாள் ரகசியமாக.

ஆன வயதுக்கு டீவி பார்த்து, பாட்டி இப்படிக் கெட்டுப் போயிருக்க வேண்டாம் என்று அனு நினைத்தாள்.

"டீவி மட்டுமா? திருட்டு சிடில படம் பார்க்கறாடி பாட்டி" என்றாள் அத்தைப் பெண் கல்பனா.

பொதுவில் மீடியாவால் பாதிக்கப்படும் முதிய தலைமுறையைப் பற்றிப் பெண்கள் எல்லோரும் கொஞ்ச நேரம் கவலைப் பட்டபடி மெஹந்தி இட்டுக் கொண்டார்கள். கல்யாண மண்டபத்தின் நீள அகலங்களைத் தன் திறமையால் இனி கொஞ்சும் மாக்கோலங்களாக இட்டு நிரப்பியிருந்த கல்யாணி சித்தியை



மைதிலி உற்சாகமாயிருந்தாள். முன்தினம் அழகு நிலையம் சென்று வந்திருந்ததில் முகத்தில் சற்று மெருகு கூடியிருந்தது. மாயவரத்துக் கமலா பாட்டி அதைக் கல்யாணக் களை என்று வருணித்தாள்.

"கல்யாணக் களையா? அது வேற பாட்டி. ரொம்ப காஸ்ட்லி அது. ஒண்ணரை லட்சம் செலவு. அப்பா முகத்தைப் பார். அங்கேதான் அது இருக்கு. இந்தக் களை கம்பாரிடிவ்லி சீப். முன்னூறு ரூபாதான். உனக்கு வேணும்னாலும் பண்ணி

ஏகமனதாகப் பாராட்டினார்கள். சமையல் ஆட்கள் அழுக்குத் துண்டுடன் காப்பி வாளியைத் தூக்கிக் கொண்டு கடந்து போன

போதெல்லாம் கேட்டுக் கேட்டு அரை வாய் குடித்தார்கள்.

"நம்மாத்து மனுஷாளே காப்பியை காலி பண்ணிட்டா மாப்பிள்ளை ஆத்துக்காராளுக்கு வெந்நீர்தான் தரவேண்டியிருக்கும்னு உங்கக்கா கவலைப்படறாடி அனு. ஜாக்கிரதை'' என்று காதில் வைத்த டிரான்ஸிஸ்டரில் காமென்ட்ரி கேட்டபடிக்குச் சொல்லி விட்டுப் போனார் பம்பாய் பெரியப்பா.

**நா**கஸ்வரம் உரக்க ஒலித்தது. பெண்கள் சிரித்தார்கள். மாலைகள் மீன்பாடி வண்டியில் வந்து இறங்கின. பெண்கள் முகம் கழுவ எழுந்து போனார்கள். பரிவாரங்களுடன் வாத்தியார் வந்து சேர்ந்தார். பெண்கள் நிலைக்கண்ணாடியை முகங்களால் நிறைத்தார்கள். அக்குளில் இடுக்கிய எல்.ஜி. கூட்டுப் பெருங்காயப் பையில் சொத்து முழுவதையும் தினத்தந்தியில் சுற்றிச் செருகிக் கொண்டு அப்பா அலைந்து கொண்டிருப்பதை அனு பார்த்தாள். பெற்ற இரண்டும் பெண்களாய்ப் போய் விடுவதில் மிடில் கிளாஸ் தந்தைக்கு நாற்பதிலேயே நரைத்து விடுகிறது. அதிலும் பாதி உதிர்ந்து விட்ட இடத்தை அவ்வப்போது தடவிப் பார்த்துக் கொண்டு நிமிர்வதற்குள் பந்தயக் குதிரைகள் உத்தரவுக்கு நின்று விடுகின்றன. சுமை என்றால் சுமை. சுகம் என்றால் சுகம். மனசே நீ ஒரு மந்திர மோகினி.

கடந்து போகிற வேகத்தில் தன் இரண்டாவது மகளை அரைக் கணம் பார்த்துச் சிரித்தார் நரசிம்மன். இதோ வந்துடறேம்மா. அடுத்தது நீதான்.

இரண்டையும் பெண்களாகப் பெற்றிருந்ததால் அவருக்கு முதுகிலும் இரு கண்கள் உதித்திருந்தன. கடந்த ஒன்றரை மணி நேரத்தில் அனுவைத் துளைத்த 'அவர்கள் பக்கத்து' விழிகள் அனைத்தையும் அவர் அறிவார். வாலிப, வயோதிக அன்பர்களின் வயதுக்கேற்ற வருணனைகள் அங்கொன்றும் இங்கொன்றுமாக அவர் காதுகளில் அதற்குள் விழுந்திருந்தன.

அழகான அனு. லக்ஷ்மிகரமான அனு. செம ஃபிகர் அனு. பாங்கான அனு. சூட்டிகையான அனு. நல்ல டிக்கெட் அனு.

அவரால் பெருமூச்சு விட மட்டுமே முடிந்தது. நல்ல டிக்கெட் என்று வருணித்தவனிடம் சென்று, "டிபன் ரெடியா இருக்கு. வாங்கோ" என்று அழைத்து விட்டுப் பெருமூச்சு விட்டார்.

> **செம ஐடியா!**
>
> ''நம்ம துணிக் கடைக்குப் பக்கத்திலேயே ஒரு லாட்ஜ் ஆரம்பிச்சுடுங்க முதலாளி!''
>
> ''எதுக்கு!''
>
> ''லாட்ஜுல ரூம் போட்டுத் தங்கித்தான் இப்பல்லாம் புடைவை செலக்‌ஷனுக்கே வராங்க. வாடிக்கையாளருக்கும் வசதி; உங்களுக்கும் வருமானம்!''
>
> — எம். அருள்மூர்த்தி

**இ**ருட்டத் தொடங்கிய நேரம் வாத்தியார் மந்திரங்களை உச்சரிக்க ஆரம்பித்தார். அன்று படித்த நிச்சயதார்த்தப் பத்திரிகையை மீண்டும் படித்தார் அப்பா. மேளம் ஓங்கி ஒலித்தது. சகாய சன்மானத்துக்கு ஒப்புக் கொண்ட நாகஸ்வர வித்வான், ஸ்ரீரஞ்சனியா - ஆபோகியா என்று கண்டுபிடிக்க முடியாமல் பத்து நிமிடம் குழப்பி விட்டு 'மாருபல்க குனா நேமிரா' என்று எடுத்தார்.

விழுந்து சேவித்து, குவாலியர் சூட்டிங் உடையைப் பெற்றுக் கொண்டு, மாப்பிள்ளை தன் வீட்டாருடன் பக்கத்துக் கோயிலுக்கு வழிபடப் புறப்பட்டார். திரும்பி வரும் போது வரவேற்கத் தயாராக மைதிலி தன் கடைசி விநாடி ஒப்பனைகளில் இருந்தாள்.

"யாருடி அந்த ட்வின்ஸ்?" என்றாள் அனு, அவள் காதருகில் ரகசியமாக.

"யாரு?"

"மாப்பிள்ளை பக்கத்துல அந்த இடது மூக்குத்தி மாமியை ஒட்டி நின்னுண்டிருந்தாளே?"

''நான் பார்க்கலையே?'' என்றாள் மைதிலி.

"நீ ஏன் பார்க்கலைன்னு நான் கேட்கலை. அவா யாரு? மாப்பிள்ளை சைடுல என்ன உறவுன்னுதான் கேட்டேன்."

மைதிலி அவளை ஒருகணம் நிமிர்ந்து உற்றுப் பார்த்தாள். காதோரம் அடங்காமல் காற்றுக்குப் பறந்த இழைகளை மீண்டும் ஒருதரம் வாரிப் படிய வைத்தபடி, "ரெண்டு பேரும் ஃபேரா இருந்தாளா?" என்று கேட்டாள்.

"உம்."



"ரெண்டு பேரும் ஸ்பெக்ஸ் போட்டிருந்தானா?"

"உம்."

"ரெண்டு பேரும் ஒரே கலர் டிரெஸ்?"

"உம்."

"அசப்புல கொஞ்சம் காம்ப்ளான் பாய் மாதிரி..."

"சொல்லுடி" என்று பரபரத்தாள்.

"நான் பார்க்கலை. ஆனா அவர் ஒருதரம் சொல்லியிருக்கார். அவரோட மாமா பசங்களாம். ரெண்டும் அண்ணா யூனிவர்சிடில படிக்கறதாம். ஃபைனல் இயர்னு சொன்னார்னு ஞாபகம். ஏன் கேக்கறே?"

சற்று நேரம் யோசனையில் இருந்தவள் சட்டென்று மொட்டவிழ்ந்தவளாக, "ம்? நத்திங். இத்தனை கூட்டத்துல அந்த ரெண்டு பசங்க மட்டும் வித்தியாசமா தெரிஞ்சாளேன்னு கேட்டேன்."

மண்டப வாயிலில் மேளச் சப்தம் கேட்டது. கோயிலுக்குப போனவர்கள் திரும்பி வந்து விட்டார்கள். பல பேர் பரபரப்பாக ஓடினார்கள். ஆரத்தி, ஆரத்தி என்று மாமிகள் குரல் கொடுத்தார்கள். தன் புதிய ஆறாயிரம் ரூபாய் புடைவையில் அம்மா அவசரமாக உள்ளே வந்தாள்.

"மைதிலி, வா."

அவசரத்துக்கு அருகில் இருந்த பாட்டியை மட்டும் சேவித்து விட்டு மைதிலி புறப்பட்டாள்.

"மனசுக்குள்ள வனமாலி கதிசாங்கி சொல்லிண்டே இரு" என்றாள் அம்மா.

வனமாலி கதிசாங்கி சங்ரீ சக்லீ சநந்தகி.

ஒரு தேவதையைப் போல் நடந்து மைதிலி மண்டபத்தின் வாயிலை அடைந்தாள். அவளை ஒட்டிக் கொண்டு நெருக்கமாக நின்றிருந்த அனுவுக்கு போட்டோகிராபர் தனியாக டைட் குளோசப் வைத்தார்.

மைதிலி, புன்னகை பூசிய பார்வையில் குவாலியர் ஷர்ட்டைப் பார்த்தாள். நீடித்த பந்தம். காதுகளில் ஒலிக்கிற விளம்பரக் குரல். கழுத்தில் விழுந்த முதல் மாலைக்குக் கூட்டம் கைதட்டியது.

மின்னிய ஃப்ளாஷ்களில் மண்டபம் பிரசன்னமடைந்தது. அதிசயமாக, ராகம் புரியும்படி நாகஸ்வரவித்வான் வாசிக்க ஆரம்பித்தார். நடந்து வரும் மாப்பிள்ளைக்கு வழிகாட்டியவராக அப்பா. அப்போதும் இருந்தது, அக்குளில் இடுக்கிய கூட்டுப் பெருங்காய பை.

திருவிழாவுக்குப் போன சிறுவன் பஞ்சு மிட்டாய்க்காரனையே பார்த்துக் கொண்டிருப்பது போல அப்போதும் அனுவின் கவனம் அந்த இரட்டையரின் மீதே இருந்தது.

அழகான இரட்டையர். அண்ணா யூனிவர்சிடி இரட்டையர். இரண்டு பேரில் யாரோ ஒருவன், அவள் பார்க்காத போதெல்லாம் அவளைப் பார்ப்பதாக அவளது ஏழாவது அறிவு சொன்னது.

யார் அவன்?

நேருக்குப் பார்த்துவிட நேர்ந்தால் சொல்லி வைத்த மாதிரி ஒரு பால் பாக்கெட் புன்னகை சிந்துகிறார்கள். ஒரே மாதிரி. அச்சு பிசகாமல். அப்படியே வாயில் ஆளுக்கொரு குழலைச் சொருகி, உச்சந்தலையில் ஓங்கி ஒரு அழுத்தம் கொடுத்தால் பப்பர பப்பர பொய்ங் என்று ஜெமினி இரட்டையர் போலாகி விடக்கூடும் என்று அவள் நினைத்தாள்.

வெடித்துக் கொண்டு புறப்பட்ட சிரிப்பை அவளால் கட்டுப்படுத்த முடியவில்லை.

மேளம் உச்சத்தில் ஒலித்தது. மாப்பிள்ளையும் மைதிலியும் மேடைக்குப் போனார்கள். அனுவும் கூடவே போனாள்.

"அந்த ரெண்டு பேர்தானே?" மைதிலி அவளைக் கிள்ளி, ஜாடையில் கேட்டாள்.

"உம்."

"அடிப்பாவி. உன்னையேதான் பார்த்துண்டுருக்கு, ரெண்டும்."

"தெரியும்" என்றாள் அனு.

(தொடரும்)

# அரண்மனையில் உருவாகும் ஆடைகள்!



சென்னை அடையாறில் உள்ள திருவிதாங்கூர் அரண்மனை வளாகம் எங்கும், வண்ணமயமான சுடிதார்களும், சேலைகளும்தாம். சாயமிடும் 'டையிங்' பகுதி, பிரிண்ட்டிங் பகுதி, எம்பிராய்டரி, டெய்லரிங் என்று அரண்மனையின் பல பழைய கட்டடங்களும் உயிர்த் துடிப்போடு இயங்குகின்றன.

"சுமார் பத்து வருடங்களுக்கு முன் நான் இதை ஆரம்பித்தபோது ஒரே ஓர் உதவியாளர்தான் இருந்தார். இப்போது 35 பேர் இங்கே வேலை பார்க்கிறார்கள்" என்றார் கோபிகா வர்மா.

"நீங்கள் அரச குடும்பத்தைச் சேர்ந்த பெண். இந்தத் துறையில் நுழையக் காரணம் என்ன?"

"அது ஒரு சோகக் கதை... எனக்குக் குழந்தை இல்லை என்று சென்னையின் மிகப் பிரபல மகளிர் மருத்துவரிடம் போனேன். யாருடைய ஃபைலையோ பார்த்துவிட்டு, எனக்குச் சிகிச்சையைத் தவறாகச் செய்து குழப்படி செய்து விட்டார். டாக்டர்கள் பெரும்பாலும் ஆதரவாக எடுத்துச் சொல்லுவார்கள். இவர் ஒரே முரட்டுத்தனம். டெஸ்ட் ட்யூப் பேபிக்கும் வழியில்லை. மோகினி ஆட்டம் நடன நிகழ்ச்சிகள் எதற்கும் என் உடலும் ஒத்துழைக்கவில்லை. மனம் ஒரேயடியாகச் சோர்ந்துபோய் இருந்தது. 'கிளப்பு'களுக்குப் போய் நேரம் கழிப்பது வீண் என்று தெரியும். இதிலிருந்து மீளவும் வேண்டும். பிறருக்குப் பயன்படும்படியாக ஏதாவது செய்ய வேண்டும் என்று எழுந்து நிமிர்ந்து உட்கார்ந்தேன். அப்புறம்தான் சிறியதாக ஒரு யூனிட் தொடங்கினேன். பிரிண்ட்டிங், டையிங், பத்திக் என்று கொஞ்சம் கொஞ்சமாக விரிவுபடுத்தினேன். இங்கேயே எல்லோருக்கும் பயிற்சி கொடுக்க வழி செய்தேன். உடல் ஊனமுற்றோர், செவி கேளாத – வாய் பேசாத பெண்கள் என்று வாழ்க்கையில் ஆதரவு இல்லாதவர்களுக்கும் பயிற்சி பெற வசதி செய்து கொடுத்தேன். சிலர் என்னுடன் இங்கேயே இன்னும் இருக்கிறார்கள். சிலர் வெளியே வேலை பார்க்கிறார்கள்."

"ஆறுதலுக்காக இதில் இறங்கினீர்கள். உங்கள் உடல் நிலை என்னவாயிற்று?"

"சாயி பக்தையான டாக்டர் ஹிரமாலினி சேஷாத்ரியை அதிர்ஷ்ட வசமாகச் சந்திக்க நேர்ந்தது. அவர் என்னுடைய பிரச்னையைக் கேட்டு விட்டு, பரிசோதித்த பிறகு எனக்குத் தைராய்டு பிரச்னை இருக்கிறது என்று கண்டுபிடித்தார். அதற்கு மருத்துவம் செய்தார். நான் குணமானது மட்டுமல்ல, இப்போது என் மகனுக்கு ஐந்து வயது ஆகிவிட்டது!"

"அப்புறம் இந்த பிஸினஸை விட்டுவிட யோசித்தீர்களா?"

"ஆமாம். ஆனால் என்னை ஆதரித்து வந்த என் ஊழியர்



ஆடைச் சிறப்பிதழ்

களைக் கைவிட்டுவிட நான் விரும்ப வில்லை. வியாபாரமும் விறுவிறுப்பாகி யிருந்தது. அதனால் தொடர்ந்து நடத்து கிறேன்.





பழைய பட்டுச் சேலைகளை, வயதான மாமிகளிடமிருந்து பெற்று, நெசவாளியிடம் கொடுத்து, அதே மாதிரி டிசைனில் நெய்து வாங்கிக் கொள்ளுகிறார் கோபிகா. ஓய்வு நேரம் சிறிது கிடைத்தாலும், நெசவாளியிடம் போய் உட்கார்ந்து கொண்டு, தம் ஐடியாக்களைச் சொல்லி, புது வடிவம் உருவாக்கி விடுகிறார்.

ஈரோட்டிலிருந்தும், திருப்பூரிலிருந்தும் மல் துணிகள் வாங்கி வந்து வடிவமைத்தாலும், ஆந்திராவிலிருந்தும் நிறையத் துணிகளை வரவழைக்கிறார். 'பிரமாதமான இடம் ஆந்திரா' என்கிறார்.

ஸில்க், ஸில்க் – காட்டன், ஸ்பன் ஸில்க், மல், பாலிகாட் என்று சேலைகளுக்கும், சல்வார் கமீஸுக்கும் இவர் ஐடியாக்கள் கொடுக்க, நெசவாளர் அவருடைய திறனைப் பயன்படுத்தி அவற்றுக்கு உருக்கொடுத்து விடுகிறார்!

போர்டு எதுவும் இல்லாமலே, விளம்பரம் எதுவும் இல்லாமலே வியாபாரம் ஒழுங்காக நடக்கிறது என்கிறார் கோபிகா. ஒருவர் வாங்கி, திருப்தி அடைந்தால், அவர் பத்துப் பேரிடம் சொல்கிறார். "இப்படித்தான் வாய் மொழியாக என் கஸ்டமர்கள் பெருகினார்கள்!" என்கிறார் கோபிகா.

இத்துடன் நின்று விடவில்லை. சுமார் முப்பது பெண்கள், சொந்தக் காலில் நின்று, சுதந்தரமாக பிஸினஸில் ஈடுபட விரும்பியதால், அவர்கள் கோபிகாவிடமிருந்து தயாரிப்புகளைப் பெற்று, வீட்டிலிருந்தபடியே விற்றுக் கணிசமாகச் சம்பாதிக்கிறார்களாம்.

"நான் சொல்லும் வகையில் தைத்துத் தர எங்களிடமே டைலர்களும் இருக்கிறார்கள். டையிங், பிரிண்ட்டிங், எம்பிராய்டரி, டெய்லரிங் என்று 'ஒரு வாடிக்கையாளருக்கு வேண்டிய எல்லாமே ஒரே கூரையின் கீழ் என்னிடம் கிடைக்கும்! குறைந்தபட்ச மார்ஜின் வைத்துத்தான் விலை வைக்கிறேன். கஸ்டமருக்குக் கூடுதல் பயன் கிடைத்தால் எனக்கு மகிழ்ச்சி!" என்கிறார் கோபிகா.

"ஏற்றுமதி?"

"நான் செய்வதில்லை. எனக்கு அந்த ப்ரொஸீஜர் எல்லாம் அலர்ஜி. ஆனால் என்னிடமிருந்து வாங்கிக் கொண்டு போகிறவர்கள் துபாய்க்கும், சிங்கப்பூருக்கும் ஏற்றுமதி செய்து வருகிறார்கள்."

"தொண்ணூறு சதவிகிதத்துக்கு மேற்பட்ட பெண்கள் காட்டன் துணியை விரும்பினாலும், ஸிந்தடிக் துணிவகைகள் வசதியாகவும், விலை குறைவாகவும் இருப்பதால், அவற்றுக்கு ஆதரவு இருக்கத்தான் செய்கிறது" என்கிறார் கோபிகா வர்மா.

சந்திப்பு: சாருகேசி

வண்ணப்படம்: வெங்கடேஷ்

# பெண்களின் சிறை!

புக் பேங்க்

பாஸ்கர் சக்தி

'கொல்லப்படுகிறது' எனும் இந்நூல் ஜெயாமித்ரா என்பவரால் வங்காளத்தில் எழுதப்பட்டது. பாட்டாளி மக்களுக்கு ஆதரவாக இந்திய - அரசியல் சமூக அமைப்பை மாற்ற விரும்பிய பெண்மணி ஜெயாமித்ரா. இதன் காரணமாக அரசியல் கைதியாக 1970ல் கைது செய்யப்பட்டு, நான்கு ஆண்டுகள் விசாரணை இன்றி சிறை வைக்கப்பட்டார். அந்த அனுபவங்களை நூலாக எழுதி இருக்கிறார்.

புத்தகத்தைப் படித்து முடித்ததும் மனத்தில் எழுவது... பெண்களுக்கிடையேயான நட்புறவு, பரிவு, குழந்தைகள் மீதான பாசம் முதலிய குணங்களை, அவர்கள் சிறை வாழ்விலும் பேணி வருகின்ற ஆச்சர்யம். உணவினைப் பகிர்ந்து கொள்வதும், தங்களது துணிகளைக் கிழித்து சக கைதியின் குழந்தைகளுக்கு கவுன் தைப்பதும் என்று ஒவ்வொரு கதையிலும் ஏதோ ஓர் இழையில் பிணைந்திருக்கும் அன்பு நம்மை வியக்க வைக்கிறது. சிறை வாழ்வு பெண்களை இறுக்கம் தட்டிப் போகச் செய்யவில்லை. மாறாக, அவர்கள் தோழமையும், அன்பும் கொண்டு கிளர்ந்தெழுகிறார்கள்.




ஜெயாமித்ராவின் நடையில் அவ்வப்போது கசப்பானதொரு நகைச்சுவையும், தேர்ந்ததொரு கச்சிதமும் வெளிப்படுகிறது. மொழிபெயர்ப்பு, அதனை மேலும் கூர்மைப்படுத்துவது போலிருக்கிறது. (மொழி பெயர்த்தவர். சு. கிருஷ்ணமூர்த்தி)

... வாயில் வழியே ஸ்ட்ரெச்சர் வெளியே வந்தது. இது போலீஸ் ஸ்டேஷனா, மருத்துவமனையா அல்லது எங்கள் நகரத்தின் சிறிய சிறையா என்று புரியவில்லை. காலையில் என்னை நீதிமன்றத்துக்கு அழைத்துப் போகும் போது ஒரு காவல்துறை அதிகாரி என்னிடம் சொன்னார். "நாங்க போலீஸ் ஸ்டேஷன்லே உங்களுக்கு ஒருவிதக் கொடுமையும் செய்யலே; ஞாபகம் வச்சுக்கங்க!" இதைக் கேட்டு நான் வண்டிக்குப் பக்கத்தில் தூவென்று துப்பினேன். அந்த எச்சிலில் இரத்தக்கறை இருந்தது...

(எச்சிலில் தென்பட்டால் அது இரத்தமா அல்லது இரத்தக்கறையா?)

புத்தகத்தில் காணப்படும் மனிதர்களும், அவர்களது வாழ்வும் நம்மைப் பல்வேறு உணர்வுகளுக்கு ஆட்படுத்துவது உண்மை... அதே போன்ற மற்றொரு உண்மை: துண்டு துண்டான சம்பவங்களையும், பல்வேறு பெண்களின் கதைகளையும் தொகுத்திருக்கும் விதம், சற்று ஏமாற்றமளிக்கிறது. எல்லா கனமான விஷயங்களும் தனித்தனியே உதிரியாக இருப்பது போன்ற உணர்வு நிரடுகிறது என்ற போதிலும், இது நிச்சயம் படிக்கப்பட வேண்டிய புத்தகமே... சில இடங்கள் கவிதையாய், சிறுகதையாய்ப் பளிச்சிடுகின்றன.

.... காலை வேளையில் எனக்கு அனுமதிக்கப்பட்ட நேரத்தில் தோட்டத்தில் உலவுகிறேன். குழந்தைகளுக்குப் பாடம் சொல்லித்தர ஆசிரியைகள் வந்திருக்கிறார்கள். இந்தக் குழந்தைகள் பெண் கைதிகளோடு வந்தவர்கள் அல்லது சிறையிலேயே பிறந்தவர்கள். சில நாகரிக நாடுகளில் குழந்தையுள்ள மகளிரை சிறையில் போடுவதில்லையாம். இந்தக் குழந்தைகள் - பூனை பார்த்திருக்கிறார்கள். நாய் பார்த்ததில்லை. கைதி 'சகி காத்தூன்' தன் மூன்றாண்டு சிறைவாசம் முடிந்து, வீடு திரும்புவதற்கு ஒரு வாரம் முன்பு, தன் மூன்று வயசில் பையனை பலமாக அடித்து விட்டாள். "சகி, ஏன் குழந்தையை அடிக்கறே?" என்று நான் கேட்டதற்குச் சொன்னாள்.

"பின்னே என்னம்மா, இப்படி அச்சானியமாப் பேசறான்! விடுதலையாகி நாம வீட்டுக்குப் போனா வீட்டில யாரு நம்மை லாக் அப்பு பண்ணிப் பூட்டுவாங்க?'ன்னு கேக்கறான்."

(அலைகள் வெளியீட்டகம், 25, தெற்கு சிவன் கோயில் தெரு, கோடம்பாக்கம், சென்னை - 24, விலை ரூ.45)

அகிலா கார்த்திகேயன்

# தீபாவளி செலிபி'ரேஷன்'

புவனா என்ற புடைவை பிசாசே, புடைவை பிசாசே, "ரேஷன் புடைவை பருவாயில்லை, நாற்பது ரூபாய் பருவாயில்லை, மலிவு சேலை பருவாயில்லை" என்று சொன்னபோது என் ஒரு காதில் கஞ்சியும், மறுகாதில் பிரியாணியுமாக விழுந்து திக்குமுக்காடச் செய்தது.

"புவனா! சொல்வது நீதானா...? சொல் சொல் என் கேள்விக்குறியே!!!" என்று ஆச்சர்யக் குறிகளோடு என் மனைவியைக் கேட்டு நின்றேன்,

"அட! நான் சொன்னா சொன்னதுதான்... நேரா ரேஷன் கடை போறோம்... நறுக்குனு நாற்பது ரூபா புடைவையை அள்ளிட்டு வர்றோம். எனக்கு மட்டும் நீங்க படற கஷ்டம் தெரியாதா என்ன? இத்தனை மலிவா அரசாங்கமே கொடுக்கறபோது, நம் பங்குக்கு அதை வாங்கறது நம்ப கடமையில்லையா... அப்படி என்ன வாரி இரைச்சி செலவு பண்றாப் போலவா இப்ப நம்ப நிலைமை இருக்கு... தீபாவளி முடிஞ்சதும் நம்ப பையன் கல்யாணம் வருது. ஆர்ப்பாட்டமா செலவு செஞ்சா கட்டுப்படியாகுமா... அதனாலத்தான் இந்த முடிவு" புவனா உறுதியாகக் கூறினாள்.

குண்டு வெடிக்காத காஷ்மீராய், கபினி தடுக்காத காவிரியாய், புவனா இந்த வருட தீபாவளி பர்சேஸில் இப்படியொரு இன்ப அதிர்ச்சியைத் தருவாளென்று நான் நினைத்துப் பார்க்கவில்லை.

"உம்... சீக்கிரமா கிளம்புங்க... ரேஷன் கடையிலே பெரிய கியூவாம்... நாப்பது ரூபாயிலே 'ஸாரி' கிடைச்சா யார்தான் 'வேண்டாம் வெரி ஸாரி'ன்னு சொல்லுவாங்களாம்?" என்று வித்தியாசமாக சிலேடையுடன் வேறு பேசி சிலிர்க்க வைத்தாள்.

புவனாவின் தீபாவளிப் புடைவை 'பர்சேஸ்' என்பது பலவகைகளில் பாதிப்பை உண்டாக்கும் சங்கதியாக எனக்குப் பழகிபோன ஒன்று. முதலில் என்னிடமிருக்கும் ஊர்ப்பட்ட கிரெடிட் கார்டுகளையும் தேய்க்க சௌகர்யமாக, முந்தைய கடன்களையெல்லாம் அடைத்து அந்த அட்டைகளைத் 'தயார்' செய்து கொள்ள வேண்டும். "எதை மாற்றினாலும் மாற்றுவேன். இந்தக் குறிப்பிட்ட ஜவுளிக் கடையை மாற்ற மாட்டேன்" என்ற லட்சுமியின் உயரிய கொள்கைக்கு முற்றிலுமாக மாறுபட்டு, ஜெயசந்திரனில் ஆரம்பித்து சென்னை சில்க் வழியாக 'நல்லி நூறு' வரை நானூறு கடைகளின் நாலைந்து மாடிகளை இவளுடன் ஏறி இறங்க வேண்டும். அப்படியும் அடர்ந்த காட்டுக்குள் அலைந்து தேடியும் கிடைக்காத வீரப்பனாக இவளுடைய புடைவை வேட்டை தோல்வியுறும். ஒருமுறை இங்கே சென்னையில் ஒரு ரவுண்ட் வந்து புடைவை

செலக்ஷன் ஆகாமல், ஈரோடு வரை சென்று 'பரணி'யில் பட்டு வாங்கி வந்த சாதனையும் புவனா செய்திருக்கிறாள்.

இவளது புடைவை பொறுக்கலுக்குப் பொறுமையாக நாட்கணக்கில் காத்திருப்பது பழகிவிட்டது. ஆபீஸில் பெண்மணிகளுக்கு கருத்தரிப்பு லீவ் மாதிரி ஆண்களுக்கு 'காத்திருப்பு லீவ்' வழங்க இப்போதெல்லாம் அரசாங்கமே முன் வந்திருப்பதில், இந்த முறையும் அப்படி ஒரு விடுப்போடுதான் இவன் தீபாவளி புடைவைத் தேடலுக்குத் தயாராய் இருந்தேன்.

சாதாரணமாக ஆண்டுதோறும் வரும் தீபாவளியாக இது இல்லாமல், தீபாவளிக்கு அடுத்தபடியாக என் மகனுடைய கல்யாணமும் சேர்ந்து விட, ஆபீஸுக்கு 'கிரெடிட் கார்ட் வாங்கலையோ கிரெடிட் கார்ட்' என்று கூவாத குறையாக வரும் அனைத்து வங்கியினரிடமிருந்தும் புதுப் புது அட்டைகளாக வாங்கி சேகரித்துக் கொண்டுமாயிற்று.

இப்படி ஜவுளி சந்தைக்கு ஏதோ பார்டர் சண்டைக்கு போவது போல ஆயத்தங்கள் செய்துகொண்டு ஒரு பெரும் 'பேஜாரான சங்கடத்தை எதிர்கொள்ள மனத்தை திடப்படுத்திக் கொண்டிருந்த போதுதான் இப்படி ஓர் அதிரடி அதிர்ச்சியை புவனா தந்து நின்றாள்.



**போ**கும் வழியில் மறுபடியும் புவனாவைக் கேட்டேன்.

"நல்லா யோசிச்சு தான் முடிவெடுத்தியா புவனா?" மெகா சீரியல் அப்பாக்கள் கதாநாயகி மகளிடம் கேட்கும் பாந்தத்தோடு கேட்டேன். முடிவை மாற்றிக் கொண்டு மறுபடியும் முருங்கை மரம் ஏறி விடாமல் புடைவைப் பிசாசு இருந்து தொலைக்க வேண்டுமே என்ற பீதியும் இருந்தது.

ஆனால் புவனாவை ரேஷன் புடைவை மோகம் பேயாட்டம் பிடித்துக் கொண்டுவிட்டது.

"யோசனை என்ன யோசனை... இதோ நாலு தெரு தாண்டி இருக்கிற ரேஷன் கடையிலே கிடைக்கறதை விட்டுட்டு, நாலு மாடி அஞ்சு மாடின்னு பறப்பாங்களா என்ன?"

''யோசனை என்ன யோசனை... இதோ நாலு தெரு தாண்டி இருக்கிற ரேஷன் கடையிலே கிடைக்கறதை விட்டுட்டு, நாலு மாடி அஞ்சு மாடின்னு பறப்பாங்களா என்ன?'' பனிச்சென்று



## தீபக் நாராயண் தரும் ஆடை டிப்ஸ்...

**"சி**றிய மார்புள்ள பெண்கள், பிளெயின் டாப்ஸ் அணிவதைத் தவிர்க்க வேண்டும். லேஸ், எம்பிராய்டரி, பெரிய பிரிண்ட் போடப்பட்ட டிசைன் மேலாடையும், காண்ட்ராஸ்ட் கீழாடையும் அணிந்தால், அந்தக் குறை தெரியாது."

பதிலளித்தாள்.

"புடைவையை நீ பார்த்திருக்கே யில்லே?" என்றேன் தயக்கத்துடன்.

"ஏன் இன்னிக்குக் கார்த்தாலே முனியம்மா கட்டிட்டு வந்தாளே நீங்க பார்க்கலையா?" என்று கேட்டாள்.

"ஹி...ஹி... நான் ஏண்டீ அதையெல்லாம் பார்க்கப் போறேன்" என்று சொன்னாலும் உண்மையில் பார்த்திருந்தேன். ஏதோ எளியோருக்கான புடைவை. பணத்துக்காக 'பருவாயில்லை' என்று நானே ஒப்புக் கொள்ள முடியாத ரகம். தீபாவளியென்றால் பிரத்யேகமான டிசைனில், லேட்டஸ்ட் சினிமாப் பெயரோடு மார்கெட்டில் விற்கப்படும் சேலைகளுக்கு நடுவே, இது எப்படி புவனாவைத் திருப்திப்படுத்தும் என்பது புதிராக இருந்தது.

"முனியம்மா என்ன... பக்கத்து வீட்டு மாமிகூட இன்னிக்கு ஒண்ணு ரேஷன்ல வாங்கிக் கட்டிண்டு வந்தா... ஆஹா ஓஹோன்னு ஐந்நூறு ஆயிரம் கொட்டி வாங்கினாத்தான் புடைவையா என்ன? ஆர்ப்பாட்டமா இல்லேன்னாலும் சிம்பிளா இருக்கா இல்லையா? அதனாலேதான் சட்டு புட்டுன்னு போய் வாங்கிட்டு வந்துடணும்னு தோணிச்சு... நீங்க என்னடான்னா இத்தனை தயங்கறீங்களே?" என்று பயத்தை பதறடித்து விரட்டினாள்.

ஆஹா அரசாங்கமே நீ வாழ்க! ஆண்டு தோறும் தீபாவளி சமயங்களில் ரேஷனில் அஸ்காவை அதிகப்படியாப் போட்டு ஆனந்தப்படுத்துவாய்... இந்த முறை அல்வாவாக புடவையையல்லவா தந்து என் கிரெடிட் கார்டுகளைத் தேயாமல் பாதுகாத்து விட்டாய்!

ரேஷன் ஸ்வீட், ரேஷன் ஜவுளி, ரேஷன் பட்டாசு என்று இப்படி வந்துவிட்டால் தீபாவளி செலவி'ரேஷன்' செலவில்லாமல் போய்விடுமே!

"ஏங்க இந்த கலர் எப்படி இருக்கு? இது பரவாயில்லையா?" என்று அங்கிருந்த பத்துப் பதினைந்து புடைவைகளை வாங்கி புவனா அடுக்கிக் கொண்டிருந்தாள்.

அடுக்கட்டுமே, யாருக்கென்ன கவலை? பதினைந்து வாங்கினாலும் என் பர்ஸ் ஒன்றும் கிழியப்போவதில்லை. வருஷத்துக்கு பருப்பு, புளி என்று என் அம்மா அந்தக் காலத்தில் வாங்கி வைத்துக் கொள்வது போல், இவளும் வருஷத்துக்கும் புடைவை வாங்கிக் கொள்கிறாளோ என்னவோ? இனி தை தள்ளுபடி, ஆடிக் கழிவு என்று ஆண்டு தோறும் புடைவை புரோகிராம் இருக்காது பாருங்கள்!

**"ஏ**ன் புவனா நிறுத்திவிட்டாய்? இன்னும் ரெண்டு எடுத்துக்கறதுதானே?" என்று என்றுமில்லாத வாஞ்சையோடு புவனாவைக் கேட்டேன்.

இதைக் கேட்டு புளகாங்கிதமடைவாள் புவனா என்று நினைத்து ஏமாந்தேன்.

"சரிதான். இது என்ன ஊறுகாயா என்ன வாங்கி, போட்டு வைச்சுக்கிறதுக்கு? எல்லாம் கணக்கு பண்ணிதான் வாங்கியிருக்கேன். உங்க அக்கா, தங்கை, மன்னிகள், தம்பி பொண்டாட்டி, உங்க மாமிகள்னு எல்லாப் பட்டாளத்துக்கும் நம்ப பையன் கல்யாணத்துக்கு வைச்சு கொடுக்க பதினைஞ்சு புடைவை போறாதா... அதிலே ஒண்ணு மீறும். அதை முனியம்மாவுக்குக் கொடுத்தாகணும்... சரி, சரி சட்னு 'பே' பண்ணிட்டு வாங்க... வீட்டுக்குக் கொண்டு போய் இந்த மூட்டையை எறிஞ்சுட்டு, தி.நகர் போயாகணும்... தீபாவளிக்குமா கல்யாணத்துக்குமா சேர்த்து எனக்கும், என் அம்மாவுக்கும், தங்கைகளுக்கும் புடைவை வாங்கியாகணும்... எத்தனை கடை ஏறி இறங்கணுமோ தெரியலே" அலட்சியமாகக் கூறிவிட்டு புவனா விடுவிடுவென்று நகர்ந்தாள்.

"யார்டா அது கடைக்குள்ளே பட்டாசு வெடிக்கறது?" என்று ரேஷன் கடை சிப்பந்தி கேட்கும் உச்சத்திற்கு என் பற்களைக் கடித்துக் கொண்டு நின்றேன்.○

# பேருந்து பிழைப்பு!

**வெ.வெங்கடாசலம்**

**தா**ர் சாலையில் பரவிக் கிடந்த
தற்காலிக நெல்வயலில்
நெல்மணிகள் சிலவேனும்
உதிர்ந்திருக்க வேண்டும்
எதிர்த்திசையைக் கிழித்துக்கொண்டு
என்னைச் செலுத்தும் பேருந்தின் மிதிபட்டு

காற்றுள்ளபோதே தூற்றும்
யுவதி ஒருவளின் முறத்தினின்று
சன்னல் வழியாக
கேழ்வரகுத் துகளொன்று
கண்ணில் பட்டு உறுத்திற்று.

பேருந்தின் ஓட்டத்திற்கு
இணையாக எதிர்த்திசையில்
ஓடி ஓடி மறைந்தன
சாலை இரு மருங்கின் புளியன் மரங்கள்.
சாலையோரம் வளைந்தோடும்
சிறுவனின் சைக்கிள் டயர்
அவன் மனத்துடன் ஓடிற்று
ஒரு விமான வேகத்தில்.



ஒண்ணரை அங்குல பைப்
உமிழும் கிணற்று நீரில்
பாவாடையை மார்பில் கட்டி
நீராடிக் கொண்டிருந்தாள் பதுமை

சர்வகச்சிதமாய் அடுக்கப்பட்ட
டிராக்டர் கரும்புகளுடன் போராடி
தோற்றுக்கொண்டிருந்தான்
சிறுவனொருவன்
ஒரு கணுவுக்கும் கதியற்று
சக்கையாய் சூம்பிய முகத்துடன்

ஓட்டுநர் கைபட்டு
அவ்வப்போது பல் கொறித்தது
கியர் கம்பி

விழிகளில் கரைந்தொழுகும்
சொந்தக் காட்சிகளுக்காய்க் கலங்கிடினும்
பயணம் தொடர வேண்டியிருக்கிறது
பீதில் ஊதும் நடத்துனருக்காக.

# சனி நீராடு!

பளபளப்பான காரில் வந்திறங்கினார் ரமேஷ் வோரா. நல்ல உடற்கட்டு. வாட்டசாட்டமான தேகம். கண்டினால் ரத்தம் தெறிக்குமோ போன்ற சிவந்த நிறம். எந்நேரமும் கரன்ஸியை சுவாசிப்பவர் போன்ற தோற்றத்துடன் இருந்தார். வடக்கத்திக்காரர்.

"டாக்டர் ஸாப்! எனக்கு நிறைய பணம் இருக்கு. அன்பான மனைவி, அழகான குழந்தைகள் இருக்காங்க. ஆனால் இரண்டு வருஷமாச்க நான் சரியாகத் தூங்கி. தூக்க மாத்திரை போட்டால் ஒரு நாலு மணி நேரம் தூங்க முடியுது. மாத்திரை எதுவும் சாப்பிடாமலேயே, என்னாலே எல்லாரையும் போல இயல்பாகத் தூங்க முடியாதா?" என்று பரிதாபமாகக் கேட்டார்.



அமைதியான உறக்கமும், அதுதரும் ஓய்வும் இல்லாததால், ஆசாமிக்கு தலைச் சுற்றல் வேறு சேர்ந்திருந்தது. ரமேஷ் வோராவுக்கு எடுக்கப்பட்ட டெஸ்ட்டுகள் எல்லாமே நார்மலாக இருந்ததால், 'செய்வினையோ பில்லி சூனியமோ?' என்றெல்லாம் அவர் பயந்து போயிருந்தார்.

"ஓகே ஸார். உங்க வியாதிக்கு சிறந்த மருந்து இருக்கு. நாளைக்கு வாங்க" என்று சொல்லியனுப்பினோம். மறுநாள் உள் மருந்துகளோடு கூடிய சிரோதாரை சிகிச்சை அவருக்குத் தரப்பட்டது.

**தேவ மருந்து - 14**

**டாக்டர் எல். மகாதேவன்**

'சிரோதாரை' என்றால் என்னவோ ஏதோ என்று நினைக்க வேண்டாம். எண்ணெய்க் குளியல்தான்.

சிகிச்சை தேவைப்படுபவரை, அவரது தலைக்கு மேலே ஒரு சட்டியில் எண்ணெய் விட்டு, அது ஒரே மெல்லிய தாரையாக அவரது நெற்றியில் தொடர்ந்து விழும்படி செய்வோம். சிற்றாமுட்டி போன்ற அரிய மூலிகைகளினால் தயாரிக்கப்பட்ட தன்வந்த்ரி தைலம், சீராக நாற்பத்தைந்து நிமிடங்களுக்கு, தொடர்ச்சியாக நெற்றியில் விழும். இதைச் செய்யும்போது உடலுக்கு எண்ணெய் பிழியப்படும் 'காயஸேகம்' என்ற சிகிச்சை செய்யப்படும். இவற்றை பின்னர் தனியாக விளக்குகிறேன்.

இந்த 'சிரோதாரை' சிகிச்சையை, ரமேஷுக்கு பதினான்கு நாட்கள் தந்ததும் அவரது உடல் நலம் ஆச்சரியப்படும் வண்ணம் முன்னேறியது. மருந்து மாத்திரை இல்லாமலேயே அமைதியானத் தூக்கம் ஏற்பட்டது. ஆயுர்வேதம் மிகவும் உயர்ந்ததாகச் சிலாகிக்கும் ஸ்நேக சிகிச்சையை நீங்கள் உங்கள் வீட்டிலேயே எண்ணெய்க் குளியலாக எடுத்துக் கொள்ளலாம்.

எண்ணெய் தேய்த்துக் குளிப்பதைப் பற்றி ரொம்ப விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. 'ஸ்நானம்' என்றாலே அப்யங்க ஸ்நானம்தான். எண்ணெய்த்

தேய்ச்சுட்டு குளிக்கிற பழக்கம்தான் நல்ல முறை. அதுதான் நீண்ட காலமா பழக்கத்திலும் இருந்தது. ஆனா இப்போ, சென்னை மாதிரியான சில ஊர்களிலே, குளிச்சிட்டு எண்ணெய் தேய்ச்சுக்கிறாங்க. அப்புறம் சைனஸ் வந்ததுன்னு சொல்றாங்க.

'சனி நீராடு'ன்னு ஔவையே சொல்லியிருக்காங்க. 'சனி'ங்கிறது வாத கிரகம். வாதத்தோட ரூக்ஷத் தன்மை (வறட்சி) மாறணுங்கிறதுக்காக, சனிக்கிழமை எண்ணெய் தேய்ச்சுக்கறோம். எள்ளிலேயிருந்துதான் எண்ணெய் வந்தது. நல்லெண்ணெய், சனி கிரகத்துக்குப் ப்ரீதியானது. 'தைலம்' என்பது 'திலம்' என்ற வார்த்தையிலே வந்ததுதான். தரமான நல்லெண்ணெயை, இலேசாகச் சூடாக்கி, எண்ணெய்க் குளியலுக்குப் பயன்படுத்தணும். பொதுவாகவே, சூரியன் உதித்த பிறகுதான், எண்ணெயைத் தேய்ச்சுக்கணும். சூரியன் உதயம் ஆகறதுக்கு முன்னாலே எண்ணெய் தேய்ச்சுக் குளிப்பது, நரக சதுர்தஸி அன்னிக்கு மட்டும்தான். அதாவது தீபா வளிப் பண்டிகை அன்று மட்டும்தான்.

**கேள்வி : காலை எழுந்ததும், ஒரு சொம்பு நிறைய சுத்தமான நீர் குடித்தால், ஆரோக்கியம் பலப்படும் என்று சொல்கிறார்கள். இது உண்மையா டாக்டர்?**

**நங்கநல்லூர் ஆர். நாகராஜ்.**

பதில் : ஆயுர்வேதம், ஒரே வேளையில் அதிக அளவு தண்ணீர் குடிக்கச் சொல்வதில்லை. ஒரு சிலருக்கு, இவ்வாறு தண்ணீர் குடிப்பதால், மலசுத்தியை ஏற்படுத்தி, பல னளிக்கிறது. இந்தப் பழக்கம் அனைவருக்கும் தேவையானது என்று சொல்ல முடியாது. ஒரு நாளைக்கு 2 லிட்டர் தண்ணீர் வரை தேவைப் படுகிறது. ஆனால் ஒரே வேளையில் வேண்டாம்.

எண்ணெய்த் தேய்ப்பதற்கும் ஒரு கிரமம் இருக்கு. எண்ணெயை எடுத்து இலேசாகச் சூடாக்கி, உச்சந்தலையில் தடவணும். தலையிலே எண்ணெய் தடவுவதற்கு 'சிரோப்யங்கம்'னு பேரு. சிரோப்யங்கத்திற்கு சில குணங்கள் இருக்கு. தலைக்கு எண்ணெய் தேய்ச்சுக் குளிக்கும்போது, அது பிராண சக்தியைக் வளப்படுத்துகிறது.

தலையில் தேய்த்து முடித்தபிறகு, பாதத்தில் தேய்க்கணும். பாதத்தில் எண்ணெய் தேய்ப்பதால், கண்ணுக்கு நல்லது. நல்ல தூக்கம் வரும். அதற்குப் பிறகு இரண்டு கைகளிலும், தொப்புளிலும் தேய்த்து, மேலிருந்து கீழாக மசாஜ் பண்ணி பத்திலிருந்து பதினைந்து நிமிஷம் ஊறிய பிறகு ஆற வைத்த வெந்நீரில் குளிப்பது ரொம்ப நல்லது.

எண்ணெய் தேய்ச்சுக் குளிச்சதும், ஒரு சிலர் மத்தியானம் முழுக்கத் தூங்குவார்கள். அது தவறு. எண்ணெய் தேய்த்துக் குளித்தால் அன்று பகல் உறக்கம் கூடாது. தயிர் சம்பந்தப்பட்ட உணவு சாப்பிடக் கூடாது. ஐஸ்க்ரீம், கூல் டிரிங்க்ஸ் இதெல்லாம் தவிர்க்கணும். எண்ணெய்ப் பலகாரங்கள் சாப்பிடறது, மது அருந்துவது, வெயிலில் அலைவது இதெல்லாம் நிச்சயமா செய்யக் கூடாது. எண்ணெய் ஸ்நானம் செய்தவர்கள், மிக மிதமாக 'மல மிளக்கி' சாப்பிடறது முண்டு. அதுக்கு 'ஸ்நேக ஸ்வேத விரேசனம்'னு சொல்றதுண்டு. 'லேக்ஸேடிவ்' எடுத்துக்கிறதும் நல்ல பழக்கம்தான். தப்பில்லை. திரிபலாப் பொடி (கடுக்காய், நெல்லிக்காய், தாணிக்காய்) இதற்குச் சிறந்தது.

எண்ணெய் தேய்த்துக் குளிப்பதால் என்ன பலன் தெரியும்? அது தேக சிரமத்தைப் போக்கும். chronic fatigue syndromeனு சொல்றாங்களே, அந்தக் கோளாறை அறவே போக்கும். நரம்புத் தளர்ச்சி, அலுப்பு எல்லாம் தீருவதோடு, சருமமும் சுருக்கமில்லாமல், பளபளப்பாக இருக்கும். மூப்பு சீக்கிரமா வராது. தேக புஷ்டி தரும். கண்கள் தெளிவாக இருக்கும். சரீரம் இடமாகும். சருமம் மிருதுவாகும். இதெல்லாம் அப்யங்கத்தின் குணங்கள்.

'தைலம்' என்றாலே நல்லெண்ணெய் தான். அது உஷ்ண வீரியமானது. வாத, கபகரமானது. கொலஸ்ட்ராலை உண்டாக்காதது . மெலிந்தவர்களுக்கும் உடல் பருத்தவர்களுக்கும் நல்லெண்ணெய் நன்மை தரும். சமையலுக்கெல்லாம் நல்லெண்ணெய் பயன்படுத்தலாம். சில சமயங்கள்லேதான் அஸிடிடி, சரும நோயைக் கூட்டக் கூடிய தன்மையைக் கிளறிவிடும். அந்தச் சமயத்திலே மட்டும் கொஞ்சம் குறைச்சுக்கணும். மற்றபடி நல்லெண்ணெய், நல்ல எண்ணெயேதான்.

# பாலகுமாரன்

சங்கரய்யர் சுபத்ராவை கூர்மையாகப் பார்த்தார். அவள் இடக் கையைத் தன் வலக்கையில் வைத்து தடவிக் கொடுத்தார். மெல்லச் சிரித்தார்.

"இவோ இப்ப குண்டா இருக்கறதுக்குக் காரணம் சாப்பாடு மட்டுமில்லை. உள்ளுக்குள்ள சில ரசாயன மாறுதல்கள் வேகமா ஏற்படறது. குழந்தை சீக்கிரம் பெரியவளாயிடுவோ. அப்போ தானா இளைச்சிடுவோ. கவலைப்பட வேண்டாம். இரண்டு குழந்தேளும் அற்புதமான குழந்தேள். முன்ன நான் சொன்ன மாதிரி இரண்டும் இரண்டு வரம். கவலைப்பட வேண்டாம். ஏதாவது கேள்வி இருக்கா?"

ரேவதியைப் பார்த்துக் கேட்டார்.

ரேவதி இல்லையென்று தலையசைத்தாள்.

தன்னைப் பார்த்துக் கேட்பாரோ என்று ராதாகிருஷ்ணன் ஆவலாக இருக்க, அவரைப் பார்க்காமல் சுபத்ராவின் அருகே போய் மெல்ல அவளை அணைத்துக் கொண்டார்.

'பகவத் கீதையிலிருந்து முக்கியமான ஸ்லோகங்கள்' என்று தொகுக்கப்பட்ட தமிழ் வடமொழி புத்தகத்தை குழந்தைகளுக்குப் பரிசளித்தார். ராதாகிருஷ்ணனை நோக்கி கைகூப்பினார்.

"எனக்கொரு கேள்வி" என்று ராதாகிருஷ்ணன் பவ்யமாகச் சொல்ல, "உனக்கு எப்படி வருமானம் வருது. நீ என்னமா சம்பாதிக்கற. இது என்ன உனக்குத் தொழிலா. இல்லை விளையாட்டா. அப்படின்னு கேட்கப் போறீரா?" என்று கூர்மையாகச் சொல்ல ராதாகிருஷ்ணன் திடுக்கிட்டார்.

தான் சற்று நேரம் முன்பு இவ்விதமே யோசித்தது அவருக்குத் தெரிந்தது. ஆனால் மன்னிப்புக் கேட்க முடியவில்லை.

"வயசாக வயசாக நமக்குள்ளே வர கள்ளத்தனத்துக்கு அளவே இல்லை. உம்ம குழந்தை மனசுல இருக்கறத வெளிய பேசினான். எல்லாத்தையும் வெளிய கொட்டினான். அவன் உள்ள காலியா இருந்தான். அவனைத் தொட்டவுடனே நெருப்பு பிடிச்சிண்டா மாதிரி சுவாமி உள்ளுக்குள்ள வந்து உட்கார்ந்துண்டார். என்ன சொன்னாலும் உமக்குப் புரிய வைக்க முடியாதய்யா. உள்ளுக்குள்ள இருக்கற கள்ளத்தனத்தை வெளிய விரட்டும். அப்புறம் பார்க்கலாம்" என்று கடுமையாக சங்கரய்யர் சொல்ல, ராதாகிருஷ்ணன் மறுபடியும் திகைத்தார். 'சரி' என்று தலையசைத்தார்.

## மனம் உருகுதே



ஏதோ அடிபட்டு அவமானப்பட்டவர்போல கை கட்டிக்கொண்டு மெல்லப் பின்னடைந்தார்.

ரேவதி விழுந்து நமஸ்கரித்தாள்.

"அவரை ரொம்ப கடுமையாகக் கோவிச்சுக்க வேண்டாம். அவர் குழந்தை."

மெல்லிய குரலில் ரேவதிக்கு மட்டும் கேட்கும்படி பதில் சொன்னார்.

"நான் விட்டுட மாட்டேன். கவலைப்படாத. ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு வைத்



தியம். உன் புருஷனுக்கு கொஞ்சம் கடுமையாத்தான் சொல்லணும். நான் பார்த்துக்கறேன். நான் கூடவே இருப்பேன். ஞாயித்துக்கிழமை கார்த்தால குழந்தேளை அனுப்பு. டீவி பார்க்காம என்கூட வந்து உட்கார்ந்திருக்கட்டும்" என்று கட்டளையிட்டார்.

ரேவதி சரியென்று சொன்னாள்.

ராதாகிருஷ்ணனுக்கு ரேவதி சங்கரய்யரோடு தனியே பேசியது பிடிக்கவில்லை.

ஓர் ஆணின் அகங்காரம் அதிகம் வெளிப்படும் இடம் பெண்ணின் முன்னிலைதான். இன்னும் குறிப்பாக மனைவியின் முகத்துக்கு எதிரேதான் ஆணின் அகங்காரம் பிரம்மாண்டமாக வெளிப்படுகிறது. என்னை யாருன்னு நினைச்சுண்டிருக்கே, என்ற மார் தட்டுதல் பல முறை மனைவியிடமே ஆண்கள் செய்கிறார்கள். மற்றவரிடம் எகிற முடியாத தாபத்தையெல்லாம் அப்பாவியான மனைவியின் முன்னே செய்கிறார்கள். அகங்காரப்பட்டு... அகங்காரப்பட்டு தோல்வியடைந்த ஆண்களே சமயம் நேரும்போது இந்த மனைவிமார்களைக் கடுமையாகக் குத்திக் காட்டுகிறார்கள். "என்னை அகங்காரப்பட்டு வதைத்தாயே நீ, என்ன கிழித்தாய்?" என்று ஏளனம் செய்கிறார்கள். குடும்ப வாழ்வில் விரிசல் அகங்காரத்தினால்தான் ஏற்படுகின்றன. மரணம் என்ற மகத்தான விஷயம் எல்லோர் தலையிலும் உட்கார்ந்திருக்கும் பொழுது இந்த அகங்காரம் அர்த்தமற்றிருக்கிறது.

> " உள்ளுக்குள்ள இருக்கின்ற கள்ளத்தனத்தை வெளியே விரட்டும் "

ஆனால், எந்த மனிதனுக்கும் தலையில் உட்கார்ந்திருக்கின்ற மரணம் பற்றி நினைவே இருப்பதில்லை. அதனால்தான் சகலமும் தெரிந்தவன், மிகுந்த வல்லமை உடையவன் என்கிற முறைப்பு இடையறாது தோன்றிக் கொண்டே இருக்கிறது. வலி என்பது மரணத்தின் சாயல். உடல் வலியோ, மன வலியோ ஏற்படுகிறபொழுது மரணம் நினைவுபடுத்தப்படுகிறது. அப்போது அகங்காரம் என்பது மெல்ல மெல்ல குறைந்து, வலியுனுடைய விகிதாச்சாரத்திற்கேற்ப கடைசிப் புள்ளிவரை தேய்ந்து அமர்ந்திருக்கிறது. வலி மறைந்ததும் அகங்காரம் மீண்டும் தலையெடுக்கிறது. இப்படியொரு விஷயம் உள்ளே நடைபெறுகிறது என்பதே மனிதர்களில் முக்கால்வாசிப் பேருக்குத் தெரியாது. தெரிந்தவர்களும் இதை எப்படி அடக்குவது என்று தெரியாமல் விழிக்கிறார்கள். அகங்காரம் நீக்குவதற்குண்டான உபாயம் சத்சங்கம். நல்லவர்களின் நட்பு. நல்லவர்களின் நட்பால் ஏற்படும் ஞானம். அந்த ஞானத்தின் உதவியால் ஏற்படும் விசாரம். தன்னை விசாரித்து, யார் என்று அறிந்து கொள்வதால் உண்டான தெளிவு. அதனாலேயே அகந்தையை அழிக்க முடியும் என்பதை, திரும்பத் திரும்ப பல பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

ஆனால், உலகம் உண்மையான உபதேசங்களைக் கண்டுகொள்வதே இல்லை. காது கொடுத்து எதையும் கேட்பதில்லை, கண் திறந்து எதையும் பார்ப்பதில்லை, தனக்குள் ஓர் உலகத்தை உருவாக்கிக் கொண்டு அதற்குள் தன் அகங்காரத்தைப் படரவிடுகிறார்கள். அந்த உள் உலகத்தில் இருக்கின்ற ஆத்திரமும் ஆகுலையுமே வெளியே மற்றவர்கள் மீது விதம் விதமாகப் படர்கின்றன. இடையறாத இம்சை நடைபெறுகிறது.

ராதாகிருஷ்ணனுக்குள் இனம் தெரியாத வன்மம் கிளர்ந்தெழுந்தது. எங்கே பாய்வது என்று தெரியாமல் உள்ளுக்குள்ளேயே அலைந்தது. அவர் அதை மனைவியின் மீது பாய விட்டார். ராதாகிருஷ்ணன் தந்திரமானவர். உடனடியாக அந்த வன்மத்தை வெளிப்படுத்தாமல் சங்கரய்யரைச் சந்தித்து ஆறு மணி நேரம் கழித்து, மிகத் தந்திரமாக வேறு ஒரு விஷயத்தில் மனைவியைச் கண்டிப்பது போல், கோபத்தைக் காட்டினார்.

ஐந்தரை மணிக்கு உப்புமாவைச்

கொண்டு வந்து எதிரே வைத்தபோது, உற்றுப் பார்த்த ராதாகிருஷ்ணனுக்கு, தன் கோபத்தை எப்படி செயல்படுத்துவது என்று தெரிந்துவிட்டது.

"என்ன இது?"

"உப்புமா." ரேவதி சாதாரணமாக பதில் சொன்னாள்.

"எதுக்கு?" என்று கேட்க, திகைத்துப் போனாள்.

"எந்தப் பைத்தியக்காரன் சாப்பிடுவான் இதை?"

உப்புமாவை பளிச்சென்று வேகமாக நகர்த்தினார்.

தட்டு சுழன்று உப்புமா கீழே சிந்தியது.

"ஏன்? என்னாச்சு?"

"வெறும் உப்புமாவைக் கொண்ணாந்து கொடுத்தா நான் என்ன பிச்சைக்காரனா?"

மறுபடியும் சீறினார்.

"என்னாச்சு உங்களுக்கு?"

"நான் கேட்ட கேள்விக்கு பதில் சொல்லு. நான் புருஷனா, பிச்சைக்காரனா?"

"நீங்க புருஷன்தான்."

அப்பாவியாக, ஒரு கேள்விக்குப் பதில் சொல்வது போல ரேவதி பதில் சொல்ல, அவர் அவளை கடுகடுப்பாகப் பார்த்தார்.

அந்தப் பார்வை, ரேவதிக்குப் பயத்தைக் கொடுத்தது.

"ஏன்னா... ஏன் கோச்சுக்கறேள்."

அவள் கெஞ்சினாள். அவர் வேகமாக மிஞ்சினார்.

"தொட்டுக்கறதுக்கு ஒண்ணும் இல்லாமல், வெறும் தட்டுல ஒரு உப்புமாவை போட்டு, என்னவோ தெருநாய்க்குப் போடற மாதிரி கொண்டு வந்து வைக்கற. உனக்கு அறிவே கிடையாதா? இதுதான் சொல்லிக் கொடுத்தாளா உன் வீட்ல."

அவள் துணுக்குற்றாள்.

"கொண்டு வந்து வைச்சுட்டு தொட்டுக்கறதுக்கு சர்க்கரையா, ஊறுகாயா, குழம்பான்னு கேட்கறதுக்காக வந்தேன். மூணுத்தையுமே எடுத்துண்டு வந்துடலாமேன்னு உள்ள போனேன். ஏன் இவ்வளவு வேகப்படறேள்?"

"இந்த மூணும் தேவையில்லை."

"வேறு என்ன வேணும்?"

"தொட்டுக்கறதுக்கு என்ன பண்ணியிருக்க?"

"உப்புமாக்கு தொட்டுக்கறதுக்கு இது மூணுதானே?"

"கத்திரிக்காய் கொத்ஸு பண்ணக் கூடாதா?"

"அந்த எல்.ஐ.சி. ஏஜெண்டுக்குக் கைராசியே இல்லை!"

"எப்படிச் சொல்றே சொர்ணம்?"

"உங்கம்மா பேரில் ஒரு லட்சம் ரூபாய் பாலிசி எடுத்து ரெண்டு ப்ரீமியமும் கட்டியாச்சு... இன்னும் பணம் வந்தபாடில்லையே!"

- புளியரை கணேசன்



"இதோ. இப்போ பண்ணிடறேன்."

"தேவையில்லை."

அவர் எட்டி, தள்ளிவிட்ட தட்டைக் குப்புறக் கவிழ்த்தார். உப்புமா தரையில் பரவியது.

"புருஷன்மேல அக்கறை இல்லைடி உனக்கு. குடித்தனம் பண்றதுக்கு லாயக்கே இல்லாத போயிட்டே."

அவள் புரியாமல் விழித்தாள்.

"குடித்தனம் பண்ற பொம்மனாட்டி, புருஷனுக்கு என்ன வேணும். புள்ளைகளுக்கு என்ன வேணும்னு சதா யோசனை பண்ணிண்டு இருக்கணும். வேற எங்கயும் சிந்தனைய வைக்கப்படாது."

"நான் எங்க வைச்சேன்? உங்களைப் பத்திதான் யோசனை பண்ணிண்டிருக்கேன்."

"யோசனை பண்றவளா இருந்தா கத்தரிக்காய் கொத்ஸு முன்னமேயே வந்துருக்கும்."

"மன்னிச்சுக்கோங்கோ. இப்போ உடனே கத்தரிக்காய் கொத்ஸுக்கு ஏற்பாடு பண்றேன்."

அவள் நகர்ந்து போனாள்.

"அடிச்சு பல்லை உடைச்சுடுவேன்!"

ராதாகிருஷ்ணன் கை ஓங்கினார்.

யார் மறுபடியும் அடிக்க மாட்டார்களோ, யார் சின்ன எதிர்ப்புகூட காட்ட மாட்டார்களோ, யார் தன் வலிவு மொத்தமும் சேர்த்து தாக்குதலை வாங்கிக் கொள்கிறார்களோ, மௌனமாக ஏற்று அழுகிறார்களோ அவர்களைத்தான் மறுபடியும் தாக்குவது ஆண்களின் வழக்கம். பதிலுக்குக் கடும் எதிர்ப்பு வந்தால் அவர்கள் மன்னிப்புக் கேட்கவும், மண்டியிட்டு அழவும்

தயாராக இருப்பார்கள்.

ரேவதிக்குக் கண்ணிலிருந்து குபுக் கென்று நீர் பெருக்கெடுத்து ஓடி கன்னத்தில் வழிந்தது.

"என்னாச்சு உங்களுக்கு? இன்னிக்கு கார்த்தாலகூட சாதாரணமாகத்தானே இருந் தேள். அல்பமான விஷயத்துக்கு இப்படிக் கைய ஓங்கறேளே..."

"புருஷனுக்கு சோறு போடாதது அல்பமான விஷயமா?"

"உங்களுக்கு சோறு போட மாட்டேன்னு சொல்வேனா? அதுக்குத்தானே பிறந்திருக் கேன்."

"எனக்கு அப்படித் தெரியலை."

"ஏன் இப்படி நிஷ்டூரமா பேசறேள்."

"உனக்கு திமிர் ஜாஸ்தியாயிடுச்சு நாயே!"

அவர் மறுபடியும் சீறினார்.

"என்ன தப்பு. சொல்லிட்டு சீறுங்கோ."

குழந்தைகள் இரண்டு பேரும் பெற் றோரின் சண்டையைப் பரிதாபமாக வேடிக்கை பார்த்தார்கள்.

"கோச்சுக்கோங்கோ. பரவாயில்லை. இப்போ என்ன, கத்தரிக்காய் கொத்ஸு பண்ணி எடுத்துண்டு வரேன். அவ்ளோ தானே..."

"வேண்டாம்."

"வேறே என்ன வேணும்?"

"ஒரு இழவும் வேண்டாம்."

மறுபடியும் சீற, வீடு திகைத்துப் போய் அவரையே பார்த்தது.

ராதாகிருஷ்ணனுக்கு அந்தப் பார் வையை சந்திக்க முடியவில்லை. குழந்தைகள் வேதனைப்படுவது உள்ளூர வருத்தத்தை ஏற்படுத்தியது. ஆனால் வலிந்து தன் கோபத்தை முகத்தில் தேக்கி வைத்துக் கொண்டார்.

"என்ன பண்ணணும்? சொல்லுங்கோ."

"ஒரு இழவும் வேணாம்."

அவர் பளிச்சென்று எழுந்தார். சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டார்.

"நான் வெளிய போய் கொட்டிக்கறேன். இழவு எடுத்த வீடா இருக்கு" என்று மறுபடியும் சிடுசிடுத்தார்.

குழந்தைகள் பயத்தோடு அவரை பார்த்தன. ரேவதி மிரட்சியோடு அவரை எப்படி சமாதானப்படுத்துவது என்று தெரி யாமல் அவரையே பார்த்துக் கொண்டிருந் தாள்.

"நான் வேறே ஏதாவது தப்பு பண்ணிட் டேனா?" என்று திடீரென்று ஞாபகம் வந்தவளாய்க் கேட்டாள்.

"எனக்கு மரியாதை கொடுடி. அது போதும்."

"நான் எப்போ மரியாதைக் குறைவா நடந்துண்டிருக்கேன்."

"அப்பப்போ நடந்துக்கறே. எனக்கு அது பிடிக்கலை."

"என்னன்னு சொல்லுங்கோளேன்."

"புருஷனைப் பத்தி புருஷன்கிட்ட பேசு. புருஷனைப் பத்தி இன்னொருத்தன்கிட்ட குறை சொல்லாத."

"ஐயோ... நான் அப்படிச் சொல்லவே இல்லியே."

"சொல்லியிருக்க..."

அவள் அமைதியாக யோசனை செய்து பார்த்தாள்.

அவர் வேட்டியை உதறி மறுபடியும் கட் டிக் கொண்டு வராண்டாவிற்குப் போனார்.

பிள்ளை அம்மாவை நெருங்கினான்.

"அம்மா, நீ சங்கரன் மாமாவோட பேசறது அப்பாக்குப் பிடிக்கலை. பார்த்து பல்லைக் கடிச்சார். நான் பார்த்துட்டேன் என்று சொல்ல ரேவதிக்கு பளிச்சென்று உள்ளுக்குள் விளக்கு எரிந்தது.

(தொடரும்)

## ஸ்ரீரஞ்சனி தரும் டிப்ஸ்...

உலகிலேயே மிகவும் விரும்பி அணியப்படும் நிறம் வெள்ளைதான்! சுத்தமான வெண்ணிற ஆடையை அணிந்து பாருங்கள். தன்னம்பிக்கை அதிகரிக்கும். உடலின் குறைகளை மறைத்து, முக அழகைத் தூக்கிக் காட்ட விரும்பும் சமயங்களில் வெள்ளை ஆடை அணிய வேண்டும்.

# அக்னிசர்மா

**மேஷம் :** பெண்களுக்கு இது அதிர்ஷ்ட மான வாரம். பொன், பொருள், நகைகள்னு சேர்ப்பீங்க. கணவன்மார்களே, பர்ஸ் பத்திரம். குடும்பத்தில் சின்னப் பிரச்னைகள் ஏற்பட்டு விலகும். இதுக்காக கவலைப்பட வேண்டாம். விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. சனி சஞ்சாரம் காரணமாக, சிக்கலான பிரச்னை களையும் சமயோசிதமா செயல்பட்டு நிறை வேற்றுவீங்க. புதிய முயற்சிகள் கைகூடும். உங்களோட உண்மையான உழைப்பு, மனோ திடம், கடமையுணர்வு உங்களைப் பிரகாசிக்க வைக்கும். கொடுக்கல் வாங்கல் விஷயத்துல கவனமா இருங்க.

**ரிஷபம் :** இந்த வாரம் எதிர்பாராத பயணம் சிலருக்கு ஏற்படலாம். எதுக்கும் தயாரா இருங்க. அலுவலகத்தில் திடீர் திருப்பம் உருவாகும். சிக்கலான பிரச்னையை யும், உங்க சாதுர்யத்தால வெற்றிகரமா நிறைவேற்றுவீங்க. இதனால மேலதிகாரிகள் பாராட்டுக் கிடைக்கும். கடன் தொல்லைகள் நீங்கி கையிருப்பு அதிகரிக்கும். குடும்பத்தில் ஒற்றுமை, மகிழ்ச்சிக்குப் பஞ்சமிருக்காது. பணம் பலவழிகள்ல வரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு புதிய ஒப்பந்தம் கிடைக்கும். பெண்களுக்கு இது உற்சாகமான வாரம்.

**மிதுனம் :** இந்த வாரம் தெய்வீக காரி யங்களில் ஈடுபாடு அதிகரிக்கும். நண்பர்கள், உறவினர்கள் உதவ முன் வருவாங்க. எதிர்ப்புகள் இருக்காது. எதிரிகள் ஓடிப் போய்டு வாங்க. சுயமா தொழில் பண்றவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. விஞ்ஞானம், எலக்ட் ரிகல்ஸ், கம்ப்யூட்டர், அழகு சாதனப் பொருட் கள் ஆகிய இனங்கள் லாபம் தரும். குடும்பத்துல கணவன் மனைவி உறவு நிலை திருப்தியா இருக் கும். குருபலம் நிறைந் திருப்பதால் பொன், பொருள், ஆபரண சேர்க்கை நிகழும். குடும்பத்துல சுபகாரிய முயற்சிகள் வெற்றிகரமா நடக்கும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு, பெயர் புகழ் உண்டு.

**கடகம் :** இந்த வாரம் எடுத்த காரியத்தை எப்பாடுபட்டாவது வெற்றிகரமா செய்து முடிச்சிடுவீங்க. இதனால, மனசுல சந்தோஷமும் உற்சாகம் பிறக்கும். அலுவலகத்தில் மேலதி காரிகள் பாராட்டுற அளவில் ஏதாவது செய்வீர்கள். பதவி உயர்வு, இடமாற்றம் ஆகியவை ஏற்படலாம். மதிப்பு, அந்தஸ்து உயரும். இதுவரை வராமலிருந்த தொகை இப்போ வந்து நிம்மதி தரும். எழுத்து, கணிதம், பத்திரிகை ஆகிய துறைகளைச் சேர்ந்தவங்க, முன்னேற்றம் காண்பாங்க. குடும்பத்துல மகிழ்ச்சி நிறைந்து இருக்கும். பெண்களுக்கு இது ஜாலியான வாரம்.

**சிம்மம் :** இந்த வாரம் சரளமான பண வசதி கிடைக்கும். இதனால சந்தோஷம் தாண்டவமாடும். புதிய வேலை தேடுறவங் களுக்கு அதுக்கான வாய்ப்பு வரும். சுய தொழில் பண்றவங்களுக்கு ஆதாயம் உண்டு. கணிதம், எழுத்து, பத்திரிக்கை ஆகிய துறை களைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. கலைத்துறையைச் சேர்ந்தவங்க வளர்ச்சி காண்பாங்க. குடும்பத்துல ஒற்றுமை நிலவும். நண்பர்கள், உறவினர்கள் உதவ முன் வருவாங்க. மாணவர்கள், படிப்புக்காக மேல் நாடு செல்ல வாய்ப்புண்டு. முன்ன பின்ன தெரியாதவங்கக்கிட்ட அதிகமா வாய்விட வேண்டாம். பேச்சில் இனிமை அவசியம்.

**கன்னி :** திடீர் அதிர்ஷ்டம், எதிர்பாராத பயணம் என்று இந்த வாரம் ஜாலியா இருக் கும். இப்போ நீங்க எடுக்கிற முடிவு உங்க எதிர் காலத்துக்கு ஏற்ற மாதிரி பலமா அமையும்.

## நடக்குமென்பார்; நடக்கும்!

அதனால எந்தக் காரியத்துலயும் நல்லா சிந் தித்து செயல்படுங்க. தேவைக்கு ஏற்ப பண வசதி கிடைக்கும். அலுவலகத்தில் சுமூகமான நிலை காணப்படும். மேலதிகாரிகள் பாராட்டு கிடைக்கும். பார்ட்னர் ஷிப்பில் தொழில் பண்றவங்களுக்கு

**அக்டோபர் 30 முதல் நவம்பர் 5 வரை**

முன்னேற்றம் உண்டு. பழைய கடன் தொல்லைகள் நீங்கி, புது தெம்பளிக்கும். குடும்பத்துல சுப செலவினங்கள் உண்டாகும். சிலருக்கு வீடு, வாங்கும், கட்டும் பாக்கியம் இருக்கு.

**துலாம் :** உங்க புத்திசாலித்தனம் வெளிப்படற நேரம். மனசுல அமைதி நிலவும். இதுவரை விரோதமா இருந்து வந்த உறவினர்கள், நண்பர்கள், மனம் மாறி சகஜ நிலைக்கு இப்போ வருவாங்க. எதிர்பாராத பயணம் உண்டு. தயாரா இருங்க. அலுவலகத்தில் இடையூறுகள் விலகி அமைதியான சூழல் நிலவும். சிலருக்கு இடமாற்றம், பதவி உயர்வு கிடைக்கும். கொடுக்கல் வாங்கல், பிரச்னையில்லாம இருக்கும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கும் புதிய ஒப்பந்தங்கள் வரலாம். குடும்பத்தில் சிறு சிறு பிரச்னைகள் ஏற்பட்டு விலகும். பேச்சில் கடுமை வேண்டாம். விட்டுக் கொடுத்துப் போங்க.

**விருச்சிகம் :** எடுத்த காரியத்தை இந்த வாரம் திட்டமிட்டபடி முடிச்சிடுவீங்க. பயணத்தால் அனுகூலம் உண்டு. பணவசதி தாராளமா கிடைக்கும். அதுக்காக டாம் டூம்னு செலவழிக்காதீங்க. அலுவலகத்தில் உற்சாகமான மனநிலை கிடைக்கும். சிலருக்கு, புதிய பொறுப்புகள் வந்து சேரும். வியாபாரிகள் புதிய தொழிலில் ஈடுபட இது நல்ல நேரம். மனை, நிலம், வீடு, தொடர்பான இனங்கள் லாபம் தரும். குடும்பத்தில் சுப காரிய முயற்சிகள் நடக்கும். பெண்களுக்கு இது சந்தோஷமான வாரம்.

ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் அதிபர் முரளியின் துணைவியார் கல்யாணிக்கு (விருச்சிகம்) சந்தோஷமான வாரமாம்.

படம் : யோகா



**தனுசு :** உங்களுக்கு இருந்த எதிர்ப்புகள், இடையூறுகள் காணாமல் போகும். உங்க திறமை, புத்திசாலித்தனம் வெளிப்படும். சிக்கலான பிரச்னைகள் எளிதில் நிறைவேறும். அலுவலகத்தில் மேலதிகாரிகள் பாராட்டு கிடைக்கும். சிலருக்கு எதிர்பாராத அதிர்ஷ்ட வாய்ப்புகள் இருக்கு. எதிர்பார்த்திருந்த உதவி, தக்க சமயத்தில் வந்து சேரும். வியாபாரிகள் அனுகூலம் அடைவாங்க. கடன்கள் குறையும். குடும்பத்தில் ஒற்றுமை நிலவும். வழக்கு விவகாரங்களில் நல்ல திருப்பம் வரும். சிலர் புனித ஸ்தல யாத்திரை செல்ல வாய்ப்பிருக்கு.

**மகரம் :** அதிர்ஷ்ட வாய்ப்புகள் தேடி வரப் போகுது. பொருளாதார பிரச்னை இருக்கும். மனசுல சந்தோஷம் தவழும். தன்னம்பிக்கை பிறக்கும். அலுவலகத்தில் மேலதிகாரிகள் பாராட்டு கிடைக்கும். சிலர் வேலை விஷயமா வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. சுயமா தொழில் பண்றவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. அரசியல்வாதிகளின் மதிப்பு, அந்தஸ்து உயரும். சினிமா, சங்கீதம், நாடகம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு புகழ், பாராட்டு கிடைக்கும். திருமணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வரும். மாணவர்கள் நிலை உயரும்.

**கும்பம் :** இதுவரை இருந்து வந்த குறுக்கீடுகள், தடைகள் விலகி மனசுக்கு நிம்மதி தரும். புதிய முயற்சிகளில் அவசரம் வேண்டாம். எந்தக் காரியத்தையும், ஒரு முறைக்குப் பலமுறை சிந்திச்சு செயல்படுவது நல்லது. அலுவலகத்தில் சிறு பிரச்னைகள் வந்தாலும் பெரிய பாதிப்பு இருக்காது. கொடுக்கல் வாங்கல் வகையில எச்சரிக்கை அவசியம். பிரச்னைகள் வரலாம். பார்ட்னர்ஷிப்ல தொழில் பண்றவங்களுக்கு ஆதாயம் உண்டு. குடும்பத்தில் ஒற்றுமை, மகிழ்ச்சி நிலவும். புதிய பொருள் சேர்க்கை நிகழும். பெண்களுக்கு சில பிரச்னைகள் ஏற்பட்டு விலகும். சாப்பாடு விஷயத்தில் கவனம் அவசியம். உடல் உபாதைகள் வந்து இம்சை பண்ணலாம்.

**மீனம் :** இந்த வாரம் சரளமான பண வசதி கிடைக்கும். தெய்வீக ஈடுபாடு அதிகமாகும். திட்டமிட்டபடி எல்லாக் காரியங்களும் வெற்றிகரமா முடியும். புதிய முயற்சிகள் அனுகூலம் தரும். வேலை சம்பந்தமாக, வெளியூர் / வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. சிலருக்கு புதிய பொறுப்புகள் வந்து சேரும். மனசுல தன்னம்பிக்கை பிறக்கும். கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு புதிய ஒப்பந்தங்கள் வந்து சேரும். குடும்பத்தில் குதூகலம் நிறைந்திருக்கும். திருமணம் ஆகாதவங்களுக்கு, அதுக்கான வாய்ப்பு வந்து சேரும். பெண்களுக்கு உற்சாகமான மனநிலை உண்டாகும்.

# பாக்கெட் வைச்ச வேஷ்டி!

**'ஆடைச் சிறப்பிதழ்' என்று சொல்லி விட்டு, கல்லூரி மாணவ, மாணவிகளைக் கூட்டி, ஒரு கலந்துரையாடல் நடத்தா விட்டால், ஜென்மம் சாபல்யம் அடையுமா? ஏற்பாடு செய்து விட்டோம். அவர்களது உடையாடலின் சில பகுதிகள் :**

பங்கு பெற்றவர்கள் : ரம்யா, அஸ்வந்த், ராஜா, வெங்கடேஷ், ரேஷ்மா, சிவசங்கரி.

**ரேஷ்மா** : என்ன! தீபாவளி பர்சேஸ் எல்லாம் முடிச்சாச்சா?

**ரம்யா** : இப்பல்லாம். தீபாவளிக்குப் புது டிரஸ் எடுக்கறதுல ஒரு திரில்லே இல்லை!

**அஸ்வந்த்** : ஆமாம்! முன்னெல்லாம் தீபாவளி, பிறந்த நாள், வீட்டிலே ஏதாவது விசேஷம்னாதான் புது டிரஸ் எடுப்பாங்க. ஆனால், இப்போ நினைச்சப்போ டிரஸ் வாங்கற பழக்கம் வந்துடுச்சு. ஒரு பண்டிகையும் இல்லாத ஆடி மாசம்கூட, 'ஆடித் தள்ளுபடி'ன்னு சேல்ஸ் பண்றாங்க.

**ரம்யா** : இன்றைய தலைமுறைக்கு 'டிரஸ் சென்ஸ்' நிறையவே இருக்கு.

**ராஜா** : ஆனா, காலேஜ் பசங்க, படிக்க வர்றாங்களா, இல்லை பிக்னிக் வர்றாங்களான்னு நினைக்கத் தோணுது. முக்கால் பேண்ட் போட்டுக்கிட்டு ஒரு பையன் எங்கள் காலேஜுக்கு வந்தான்.

**சிவசங்கரி** : எல்லாரும் கிண்டல் பண்ணினாங்களா? பாராட்டினாங்களா?

**ராஜா** : ஒரு சிலர் கிண்டல் பண்ணினாங்க. ஆனா மறு நாளே நிறையப் பேர் முக்கால் பேண்டு போட்டுக்கிட்டு வந்தாங்க!

**ப்ரியா** : கல்லூரி நிர்வாகம் கண்டுக்கலையா?

**ராஜா** : பெரிசா தண்டனைன்னு தரலை.

**ரேஷ்மா** : கண்டிச்சு விட்டுட்டாங்க. எங்க காலேஜ்லே இந்த உடைதான் அணியணும்னு கட்டுப்பாடெல்லாம் கிடையாதுப்பா. ஆனா, எது மாதிரி உடை அணியக் கூடாதுன்னு ரூல்ஸ் இருக்கு. மீறினால் டேஞ்சர்தான். 'டைட்டான உடை கூடாது. குட்டையான உடை கூடாது' இப்படித்தான் ரூல்ஸ்.

**வெங்கடேஷ்** : 'நல்லா டிரஸ் பண்ணிக்கிட்டு இருக்கார்'னு சொல்லணும்னா அவங்களோட உடை எப்படி இருக்கணும்?

**சிவசங்கரி** : இடத்துக்கும், சந்தர்ப்பத்துக்கும் ஏற்ற மாதிரி டிரஸ் பண்ணிக்கிட்டு போறவங்களைத்தான் இப்படிச் சொல்வேன்.

**ரம்யா** : பாரம்பரிய உடையணிபவரைத்தான் நான் 'வெல் டிரஸ்டு' என்று சொல்லுவேன்.



**வெங்கடேஷ்** : இது கொஞ்சம் டூமச்! இளம் பெண்களோட பாரம்பரிய டிரஸ் பாவாடை - தாவணிதான்! இன்னிக்கு எத்தனை பேர் அப்படி வர்றாங்க. கிராமத்து சினிமாவில்கூட பாவாடை தாவணியைக் காணோமே!

**ராஜா** : உடை என்பது சௌகரியத்தைப் பொருத்த விஷயம். ஃபாஷன் என்று சொல்லிக் கொண்டு மிகவும் டைட்டாகவோ, இல்லை தொளபுளா என்றோ

உடை யணிவது அசட்டுத்தனம்.

**அஸ்வந்த் :** கல்லூரி மாணவ, மாணவிகள் டிரஸ் பண்ணிக் கொள்வதைப் பார்த்துத்தான் நாங்கள் அதேபோல டிரஸ் அணிகிறோம் என்று சினிமா நட்சத்திரங்கள் சொல்கிறார்கள். இதில் எனக்கு உடன்பாடில்லை. உண்மையில், கல்லூரி மாணவர்கள் சினிமாவில் வர மாதிரி உடை அணிய ஆசைப்படறாங்க.

**ரேஷ்மா :** சினிமாவிலே, நல்ல டிரஸ் சென்ஸ் உள்ளவங்க நிறையப்பேர் இருக்காங்க. அறுபது வயது வெள்ளை தாடிக்காரராக இருந்தாலும் நேர்த்தியா உடையணிகிறாரே அமிதாப் பச்சன்!

**வெங்கடேஷ் :** அதேபோல பெண்களில் ஷபனா ஆஸ்மியைச் சொல்லலாம்! பாரம்பரியம் ப்ளஸ் புது சிந்தனை கலந்த அவரது பர்ஸனாலிட்டிக்கு ஏற்ற டிரஸ் அணிகிறார்.

**ரேஷ்மா :** சோனியா காந்தியும், பிரியங்காவும் என் சாய்ஸ்.

**ராஜா :** நம்ப கமல் ஹாசனுக்கு நல்ல டேஸ்ட் உண்டு.

**சிவசங்கரி :** மம்மூட்டி கூட ஓ.கே.

**அஸ்வந்த் :** சுஷ்மா ஸ்வராஜை விட்டுட்டீங்களே! ஐஸ்வர்யா ராய் கூட அழகா டிரஸ் பண்ணிக்கிறாங்க?

**ரம்யா :** போதும் சினிமாப் பேச்சு! காஸ்ட்லியா இருக்கிறதுதான் நல்ல டிரஸ்ஸா?

**அஸ்வந்த் :** அப்படி கிடையாது. அதற்காக, பிளாட்பார ரேட்டும் வேண்டாம். ஆயிரம், ஆயிரத்து ஐந்நூறுன்னு கொட்டவும் வேண்டாம். நடுத்தரமா இருக்கணும். அழகும் தரமும் முக்கியம்னாலும், பட்ஜெட்டையும் பார்க்கணுமே!

**ரேஷ்மா :** ஆண்களைப் பார்த்தால் பாவமாக இருக்கு. பெண்களுக்கு எத்தனையோ வெரைட்டி டிரஸ் கிடைக்குது. ஆனால் ஆண்களுக்கு... பாவம் அரைக்கை சட்டை, முழுக்கை சட்டை, டீஷர்ட், எல்லாத்துக்குமே பேண்ட்தான்!

**சிவசங்கரி :** ஏன் வேஷ்டி இருக்கே!

**அஸ்வந்த் :** பாண்ட்னா மூன்று பாக்கெட் வைச்சுக்கலாம். ஆனா வேஷ்டியிலே என்ன ஃபாஷனும் பண்ண முடியாதே!

**ரம்யா :** அதனால் என்ன? பாக்கெட் வைத்த வேஷ்டியை டிஸைன் செய்து, அடுத்த தீபாவளிக்கு ரிலீஸ் பண்ணிட்டா போச்சு!

தொகுப்பு : கௌதம் ராம்
படங்கள் : ஸ்ரீஹரி

# தாட் பூட் கோட் சூட்!

“முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்க முடியுமா என்று தெரியாது. ஆனால் எனக்குத் தெரிந்த தையல் கலை மூலம் தொப்பையுடன் உள்ள மனிதர்களைக் கூட, சற்று தொப்பையை மறைக்கும் வகையில் சில யுக்திகளுடன் கோட்டு தைத்துத் தர முடியும்'' என்று சவால் விடுகிறார் சஜ்ஜத் அகமது.

“சிலருக்கு ஒரு தோள் இறங்கி இருக்கும். சிலருக்கு மார்புப் பகுதிகளிலும் வித்தியாசம் இருக்கும். இது போன்ற குறைபாடுள்ள மனிதர்களுக்கு, அவை தெரியாத வகையில் கோட்டுகள் தைக்க முடியும்'' என்றும் சொல்கிறார் அகமது.



சஜ்ஜத் அகமதுவின் தாத்தா, சையது பாக்கர், மைசூர் மகாராஜாவின் அரண்மனைத் தையல்காரராக இருந்தவர். மகாராஜா பரம்பரைக்குக் கோட்டு தைத்துக் கொடுத்த பரம்பரைக்கு சொந்தக்காரரான சஜ்ஜத், இன்று சென்னையில் சூட் தைப்பதில் ஒரு தனிப் பெயரை எடுத்திருக்கிறார். கவர்னர்கள், நீதிபதிகள், ஐ.ஏ.எஸ். அதிகாரிகள், சினிமா நடிகர்கள் என்று பலரும் இவரது வாடிக்கையாளர்கள்.

''எங்களிடம் சூட் தைக்க நாங்கள் போடும் ஒரே நிபந்தனை, எங்களிடமே துணி வாங்க வேண்டும் என்பதுதான்'' என்று சொல்லும் சஜ்ஜத், தமது வாடிக்கையாளர்களில் மறைந்த நடிகர் ரங்காராவ் பற்றி பெருமிதமாகச் சொல்கிறார். “அவருக்கு மிகப் பிரமாதமாகப் பொருந்தும் உடை அது. நாங்களும் ஒரு எக்ஸ்ட்ரா ஈடுபாட்டுடன் அவருக்குத் தைப்போம். அதே போல் என்.டி.ராமாராவுக்கும் நான்தான் தைப்பேன்'' என்கிறார் பெருமிதத்துடன்.

வளர்ப்பு மகன் சுதாகரன், ஸ்டாலின் மகன் உதய நிதி ஆகியோரது கல்யாணத்திற்குத் தைத்துக் கொடுத்தது இவரது குடும்பம்தான். மத்திய அமைச்சர் மாறன், இளையராஜா, ஏ.ஆர். ரஹ்மான், பிரசாந்த் ஆகியோர் சஜ்ஜத்தின் கஸ்டமர்கள். இவரிடம் பதினெட்டு தையல் கலைஞர்கள் வேலை பார்த்தாலும், சஜ்ஜத்தான் துணியை கட்டிங் செய்து கொடுப்பாராம். சூட் தைப்பதில் மிஷினை விட, கைத் தையல்தான் அதிகம். அளவுகளைக் குறித்து வைத்திருக்கும் நோட்டுப் புத்தகத்தைப் பார்த்தால், நீதிபதிகள், தொழில் அதிபர்கள் என்று சென்னையில் வி.வி.ஐ.பி.க்களாகத் தென்படுகிறார்கள். 1994ல் சஜ்ஜத் சிறந்த தையல் கலைஞருக்கான விருதை, அமைச்சராக இருந்த அர்ஜுன் சிங்கிடம் பெற்றிருக்கிறார்.

''கல்யாணத்திற்கு கோட்டு தைக்கும் பழக்கம் தற்போது குறைந்து வருகிறதா?''

''உண்மைதான். இப்போது எத்னிக் டிரஸ் என்று சொல்லப்படும் மரபுரீதி யான உடைகளுக்குத்தான் கிராக்கி. அந்த வகையில் கல்யாண மாப்பிள்ளைகள் கலைநயத்துடன் கூடிய ஷெர்வாணி - குர்தா அணிவதையே விரும்புகிறார்கள்.''

— கௌசி

படம் : ராஜன்



# குறையொன்றுமில்லை

## 13

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

ஆழ்வார் பாசுரங்களின் பெருமையைப் பற்றிச் சொன்னேன். வேத சப்தமானது நம்மை அப்படியே ஈர்க்கக் கூடியது. அர்த்தத்தளவும் செல்ல வேண்டியிராமலே, சப்த சுவாரஸ்யத்தினாலேயே நம்மை ஈர்க்கிறது. இந்த வேத சப்தத்தையே தமிழ் சப்தமும் அப்படியே உரித்து வைத்துக் கொண்டிருப்பதனாலே பகவானுடைய வடிவழகை தமிழும் சிறப்பாகக் காட்டுகிறது.

மஹரிஷி வால்மீகியின் வாக்கும் அவ்வண்ணமே ஓசை ஒலியாலும், பொருள் நயத்தாலும் பகவானைக் காட்டித் தருகிறது. அவன் பாபங்களைப் போக்கக் கூடியவன். பர்வதாக்ருஹத்திலே விளங்கக் கூடியவன் எம்பெருமான் என்கிறது ராமாயணம்.

ஒரு கர்மா முடிகிறபோது, அந்த கர்மாவினாலே நாம் பூரண பலனை அடைய வேண்டுமானால், ஜயாதி ஹோமம் என்று ஒன்றைச் செய்ய வேண்டும். பூர்வ காலத்திலே பிருஹஸ்பதி, தேவர்களுக்கே இதைப் பண்ணிவைத்தார். அதனாலேயே அவர்களுக்கு ஜெயம் ஏற்பட்டது. எல்லாக் காலத்திலும், கல்யாண காலத்திலும், சீமந்த காலத்திலும்கூட - இந்த ஜெயாதி ஹோமம் இல்லாமலிருக்காது. அதற்கப்புறம்தான் பிராயஸ்சித்த ஹோமம். ஜெயாதி ஹோமம் 53 சுவாகாகாரங்களுடன் கூடியது. எல்லா தேவதைகளும் அங்கே வருகிறார்கள். 'விஷ்ணு : ப்பர்வதானாம் அதிபதி : - பர்வதங்களுக்கெல்லாம் அதிபதியாய் இருக்கிறான் விஷ்ணு என்று அதிலே வருகிறது. அதனால்தான் சுவாமி தேசிகன் 'வேங்கட வெற்பென விளங்கும் வேத வெற்பே' என்று பாடினார்.

திருவேங்கடமுடையான் எழுந்தருளியிருக்கிறானே... அந்த வேதமே ஏழுமலையாகித் தாங்குகிறது அவனை - ஏழு காண்டங்களும் ஏழு மலையாகித் தாங்குகின்றன. அதில் வேத பிரதிபாத்யமான - வேதத்தினால் சொல்லப்படக்கூடிய - எம்பெருமான் அழகாகக் காட்சி தருகிறான்.

தயா சதகத்திலேயும் 'பிரபத்யே தம் கிரிம் ப்ராய:' என்று வருகிறது. அவன் பெரிய கரும்புக் கடை - பகவான். பக்தர்களெல்லாம் 'கோவிந்தா!' என்று சொல்லிக் கொண்டு வருகிறார்கள். அப்போது அந்த கரும்புக் கடை அப்படியே உருகி, கருப்பஞ்சாறு ஓடி வருகிறது! பக்தர்களைக் கண்டமாத்திரத்திலே அப்படியே மலையாக உறைந்து போகிறது! கற்கண்டு மலை அது! கற்கண்டுக் கட்டி!

இவ்வாறு பர்வதமே பகவத் ஸ்வரூபம் ஆன காரணத்தினாலே, 'அந்தப் பர்வதத்தைப் பார்; அது நம்முடைய பாபத்தைப் போக்கும், என்கிறது வேதம் இங்கே!

வேங்கடய நீதி வேங்கட : - அந்த வேங்கட சப்தத்திலேயே பார்க்கலாம் இந்த விஷயத்தை.

சஞ்சிதம், ஆகாமி, பிராப்தம் என்று மூன்று வித பாபக் குவியல்களுக்கும் சேர்ந்து ஒரு பதம் உண்டானால் அது 'வேன்' என்கிற பதம்தான்.

சஞ்சிதம் என்றால் - நாம் நிறைய சேர்த்து வைத்திருக்கிற பாபம். மூட்டை மூட்டையாக இருக்கிறது - இன்னும் அவிழ்க்கவே இல்லை, அந்தப் பாபங்களையெல்லாம்.

இப்போது நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோமே இந்த உலகத்திலே... நாம - ரூபத்தோடு வாழ்ந்து கொண்டிருக்கிறோமே, இதெல்லாம் என்னவென்று கேட்டால், அத்தனை மூட்டைகளில் ஓரே ஒரு [illegible]ட்டையை எடுத்து அவிழ்த்து வை[illegible] கொண்டு அனுபவிக்கிறோம். மீதியெ[illegible] நிறைய இருக்கிறது. அவிழ்த்த மூட்டை[illegible] மட்டும்தான் - இது பிராரப்தம்.

இதற்கும் மேலே நாம் சும்மாவா இருக்

கிறோம்..? எத்தனையோ பாபங்கள் பண்ணுகிறோம். அவை பாட்டுக்குச் சேர்ந்து கொண்டேயிருக்கின்றன. மூட்டை மூட்டையாகக் சேர்கின்றன - இவைதான் ஆகாமி.

ஆகையினாலே, சஞ்சிதம், ஆகாமி, பூர்வ உத்தராகங்கள் என்று பெயர். பிராரப்தம் என்பது பயனைக் கொடுக்க ஆரம்பித்த கர்ம வினை. இவை மூன்றையும் சேர்த்தது தான் 'வேன்' என்ற சொல்லால் குறிப்பிடுவது.

'வேங் கடயதி' என்றால் இந்தப் பர்வதாகிருஹத்துக்குச் சென்று, அந்த எம்பெருமானைச் சேவித்து, யார் அந்தத் திருமலையிலேயிருந்து இறங்குகிறார்களோ, அவர்களுடைய பாபமெல்லாம் பொசுக்கப்படுகிறது! அடியோடு பாபமில்லாமல் மாற்றிவிடுகிறான் பரமாத்மா.

பர்வதாகாரத்திலேயே பரமாத்மா இருப்பதனாலே, எம்பெருமானுடைய அனுக்ரஹம் பெற்றவர்களுக்கு இந்த உலகிலே ஹிம்ஸை என்பது உண்டோ? கஷ்டங்கள் ஏற்படுமோ?... ஒரு கஷ்டமும் ஏற்படாது. இந்த லோகத்திலேயும் உயர்வுதான்; அந்த லோகத்திலேயும் உயர்வுதான்.

**சு**வேதாஸ்வதர உபநிஷத்திலே விசேஷமாக இந்த மந்திரம், எம்பெருமானின்





பெருமையைக் காட்டக்கூடிய மந்திரமாக அமைந்திருக்கிறது - பாபங்களைப் போக்கி, உயர்ந்த கதியை வழங்கக்கூடியவன் அவன் ஒருவனே என்கிறது. இந்த உயர்ந்த காரியத்தை அவன் ஒருவனால்தான் பண்ண முடியும்.

பாப - நிவ்ருத்தியே மோட்சமில்லை. இதை நாம் நன்றாகக் கவனிக்க வேண்டும்.

பாப நிவ்ருத்தி பூர்வக

பரிபூர்ண பகவத் பிராப்தி - இதுதான் மோக்ஷம்.

ரோக நிவ்ருத்தியே ஆரோக்கியம் அல்ல. ஒருத்தர் இரண்டு மாதமாகப் படுத்துக் கொண்டிருக்கிறார். ஏகமாகப் படுத்துக் கொண்டிருக்கிறார். இப்போது அந்த வியாதி அவரைவிட்டுப் போய்விட்டது. ஆனால், அந்த வியாதி இத்தனை நாளாக அவரை ஆக்கிரமித்துக் கொண்டிருந்ததாலே, சரீரம் எந்த வேலையையும் செய்வதற்கு வேகமாக வரமாட்டேனென்கிறது. தள்ளாமை அதிகமாய் இருக்கிறது. சுரத்தாக வேலை செய்ய மாட்டேனென்கிறார். அதற்காக இன்னொரு மருந்தைக் கொடுத்து, "இதைச் சாப்பிடுங்கள் நாற்பது நாட்களுக்கு" என்கிறார்கள். அதைச் சாப்பிட்டவுடனே புஷ்டி வருகிறது. புஷ்டி வந்தவுடனே பரிபூரண ஆரோக்கியமும் ஏற்பட்டுவிடுகிறது. கிடுகிடுவென்று வேலை செய்கிறார்.

ஆதலால், ரோக நிவ்ருத்தியே ஆரோக்கியம் இல்லை... ரோக நிவ்ருத்தி பூர்வக; பரிபூர்ண ஆரோக்யதா சித்தி:

- முதலில் ரோகம் நிவ்ருத்தி ஆக வேண்டும், அதன் பின் பரிபூர்ண ஆரோக்கியம் அமைய வேண்டும்.

இதேபோல்தான் சம்ஸார நிவ்ருத்தி முதலில் அமைய வேண்டும். ஆனால் சம்ஸார நிவ்ருத்தியே மோக்ஷமில்லை...

சம்ஸார நிவ்ருத்தி பூர்வக : பகவத் பிராப்தி.

அவன் திருவடியிலே போய்க் கைங்கர்யம் பண்ண வேண்டுமல்லவா...? இந்த ஸம்ஸாரம் நம்மை விட்டுவிட்டது; சுவர்க்க லோகத்திலே போய் உட்கார்ந்து கொண்டால் அல்லது மற்றொரு லோகத்துக்குச் சென்றால் அது மோக்ஷமாகிவிடுமா..! மறுபடி பிறவிதான் தரும் அந்நிலைகள்.

பிறவியைத் தராமல், பிறவித் துயர் மாற, பிறவியை அறுக்கும் மருந்து எது என்றால், நம்மாழ்வார் திருவாய்மொழியிலே சொல்

கிறார்.

வேதங்கள் அறிந்தன; ஞானிகள் உணர்ந்தனர்; இதிகாஸ புராணங்கள் நமக்குக் காட்டித் தருகின்றன... என்னவென்று...? நம் நோய்கள் அறுக்கும் மருந்து அந்த பரமாத்மாவே என்று.

மஹாவீர வைபவம் என்று சொல்லும்படியான ரகுவீர கத்யம் - ராம பிரானுடைய பெருமைகளைச் சொல்வது. இதை யார் சொல்கிறார்களோ, கேட்கிறார்களோ அவர்களுக்கெல்லாம் பிறவி என்னும் நோய்க்கு இது மருந்தாக அமையும்.

ஆகையினால், 'மருந்தே நம் வினைக்கு' என்றார் ஆழ்வார்.

முதல் வைத்தியன் பரமாத்மாதான்! மருந்தைக் கொடுத்து பாபத்தை நீக்கி உயர்ந்த கதியைக் கொடுக்கிறான். சுவேதாஸ்வதர உபநிஷத்தில் வரும் இவ்வுயர்ந்த கருத்து, உபநிஷத் ஸாரமாக, வேத ஸாரமாக - சுவாமி தேசிகனால் அழகாய் எடுத்தாளப்படுகிறது.

பரமாத்மாவை அவ்வாறு அழைப்பதற்குக் காரணம் என்ன...?

இத்தனை உயர்ந்த லட்சியங்கள் இருப்பதனாலேயே அவன் பரமாத்மா, இலட்சியம் என்பது அவனேதான். அவனைக் காட்டக் கூடிய லட்சணங்கள் எவை...?

பதினொரு லட்சணங்கள் இருக்கின்றன. இந்தப் பதினொரு லட்சணங்கள்தான் அவனைப் பரமாத்மாவாகக் காட்டித் தருகின்றன. இல்லையென்றால் அவனை அவ்வாறு சொல்வதற்கும் அழைப்பதற்கும் இல்லை.

ஸர்வோப நிஷத்ஸாரமான ஒரு சொல் உண்டா என்றால், அச் சொல்தான் பரமாத்மா.

ராமாயணத்திலே பாருங்கள்... எங்கெல்லாம் நூல் போட்டுத் தேடினாலும் ஒரே ஒரு இடம் தவிர வேறு எங்கேயும் பரமாத்மா என்கிற சப்தம் கிடையாது.

ராமாயணத்தில் அனேக இடங்களிலே மஹாத்மா என்று சொல்கிறார்கள் ராமனை; ஆனால் பரமாத்ம சப்தம் ஒரே ஒரு இடத்தில்தான்.

ராவணன் கீழே விழுந்து கிடக்கிறான். மண்டோதரி அவன் பக்கத்தில் உட்கார்ந்து அழுகிறாள்...

"நல்லதைப் பண்ணுகிறவன் நல்லதை அடைகிறான்; தீயதைப் பண்ணுகிறவன் தீயதையே அடைகிறான்.

"விபீஷணன் உயர்ந்ததைப் பண்ணினான்; நல்லதை அடைகிறான். தாங்கள் இப்படிக் கெட்டுவிட்டீர்களே. தப்புப் பண்ணி இப்படி வீழ்ந்து விட்டீர்களே!"

"வில் பிடித்த கையினனாய், சிரஸிலே ஜடை, இடையிலே மரவுரி... அதே கோலத்தில் ஸ்ரீ ராமன் பக்கத்தில் வந்து நிற்கிறான்.

மண்டோதரி அவனைப் பக்கத்தில் பார்க்கிறாள். பார்க்கிற பொழுது அவள் என்ன சொல்கிறாள்..? ரொம்ப அழகான வாக்கு மண்டோதரியுடையது :

"தெளிவாய்ச் சொல்கிறேன்; இதோ இருக்கிறானே, அவன் பரமாத்மா! மகாயோகி, சனாதனன். சங்க சக்கர கதாபாணியாய் வக்ஷஸ்தலத்திலே மஹாலக்ஷ்மியோடு காட்சியளிக்கிறான். வானரர்கள் மொத்த பேரும் தேவர்கள். இத்தனை நாழியும் நடந்தது தேவாகர யுத்தம்" என்று ஸ்பஷ்டமாய்ச் சொல்கிறாள்.

க்ஷத்ரிய புருஷனாக அவதரித்தாலும் மஹா பதிவ்ரதையான மண்டோதரியின் கண்களுக்குத் தன்னை மறைக்க முடியவில்லை பரமாத்மாவினால்!

(வளரும்)





• சுரேஷ்



• ராஜேந்திரன்



• கிஷோர்

"இப்படி ஒரு தொடக்கத்தோடு இருக்கும் திரைப்படப் பாடலில் 'ஊத்திக்க' என்பதற்கு பதிலாக 'உடுத்திக்க' என்று போட்டாலும் வண்ணாரப் பேட்டைக்குப் பொருத்தமாக இருக்கும்.

தி.நகர் ரங்கனாதன் தெரு அளவுக்கு என்று சொல்ல முடியாவிட்டாலும், அதில் முக்கால்பங்கு இருக்கிறது. வண்ணாரப்பேட்டை. எம்.சி சாலையும், ஜி.ஏ.சாலையும் எப்போதும் பிஸியாக இருக்கின்றன. இந்தப் பகுதியில் மட்டும் சுமார் ஆயிரத்து ஐந்நூறு துணிக் கடைகள் இருக்கின்றன. சிறிதும், பெரிதுமாக, சில்லறை, மொத்த வியாபாரம் செய்யும், இந்தக் கடைகளை மொய்ப்பவர்கள் பெரும்பாலும் வறுமைக் கோட்டுக்குக் கீழே இருக்கும் ஏழை எளிய, நடுத்தர மக்கள். தமிழக எல்லைப் பகுதியை ஒட்டியிருக்கக் கூடிய ஆந்திர கிராமங்களில் சிறு துணிக் கடைகள் வைத்திருப்பவர்கள மற்றும் சைக்கிளில் துணி வியாபாரம் செய்பவர்களும், வண்ணாரப்பேட்டையை நாடி வருகிறார்கள்.

"அட போங்க ஸார்.. சில வருடங்களுக்கு முன் வரை ஸ்ரீலங்காவிலிருந்து கூட வியாபாரிகள் இங்கு வந்து பெரிய அளவில் கொள்முதல் செய்துகொண்டு போனார்கள். ஆனால் அவர்கள் இப்போது நேரடியாக சூரத்திற்குச் சென்று கொள்முதல் செய்கிறார்கள். தி.நகரில் வருடத்துக்கு ஒரு புதிய பெரிய ஷோ-



# வா மச்சான் வா... வண்ணாரப்பேட்டை!

ரூம் திறக்க, கணிசமான கூட்டம் அந்தப் பக்கமும் திரும்பியிருக்கிறது. இருந்தாலும், இங்கு கிடைப்பது போல மலிவாக, சேலை மற்றும் ஆண்களுக்கு வேண்டிய ரகங்களை எங்கும் வாங்க முடியாது'' என்கிறார் மொத்த வியாபாரியான சுரேஷ்.

எம்.சி சாலையில் உள்ள துணிக்கடை அதிபர்கள் சூரத்திற்கும் வேறுபல ஊர்களுக்கும் சென்று, நேரடியாகக் கொள்முதல் செய்து வருவதாலும், மிகக் குறைந்த லாபத்துக்கு விற்பதாலும், மக்களுக்கு மிக, மிக, சகாய விலையில் துணி ரகங்கள்



கிடைக்கின்றன. 'ஷிபான்' சேலைகளில் நூற்றுக்கணக்கான டிசைன்கள் இருக்கின்றன. ப்ளெயின் பார்டர் ரசகுல்லா சேலை, ரூபாய் இருநூறு முதல் அறுநூறு ரூபாய் வரை இருக்கிறது.

"இந்தப் பகுதிக்கு, பல வசதிக் குறைவுகள் இருக்கின்றன. குறிப்பாக மின்சார



ரயில் வசதி கிடையாது. பஸ் வசதியும் நிறைவாக இல்லை. அது தவிர, இங்கு பார்க்கிங் வசதியும் இல்லை. இருந்தாலும், எங்களாலும் கஸ்டமர்களைக் கவர்ந்திழுக்க முடிகிறது என்றால் அதற்குக் காரணம் எங்கள் மலிவு விலையும் வாடிக்கையாளர்கள் திருப்திப் படும்வரை ரகம், ரகமாக சோம்பல் இல்லாமல் எடுத்துக் காட்டும் நடைமுறையும்தான்'' என்கிறார் சுரேஷ்.

இந்தப் பகுதியில் மட்டும் ஆண்டு ஒன்றுக்கு சுமார் 200 கோடி ரூபாய் துணி வியாபாரத்தில் புரள்கிறது. மிகவும் புகழ் பெற்ற சௌந்தரபாண்டி ஸ்டோர்ஸ் இப்போது கைமாறி இருக்கிறது.

"இங்கு நாங்கள் மிக ஹைப்ரொஃபைல் கஸ்டமர்களை எதிர்பார்ப்பதில்லை. பட்டுச் சேலைகள்கூட இரண்டாயிரம் மதிப்பில்தான் அதிகமாக வைத்திருப்போம். ஆடி, புரட்டாசி மாதங்களில் வியாபாரம் கொஞ்சம் டல்லடிக்கும். மற்றபடி வியாபாரம் சுறுசுறுதான்'' என்கிறார் அதன் புதிய நிர்வாகிகளுள் ஒருவரான கிஷோர். இவர்களின் பலம் பள்ளிப்பிள்ளைகளின் சீருடை. கிட்டத்தட்ட ஐம்பது பள்ளிகளின் சீருடைத்




• கலகலக்கும் கடைவீதி...



''காளையை அடக்குபவர்களுக்குத்தான் இளவரசி என்று அறிவித்த பின்பும் யாரும் வரவில்லையே, காளையைப் பார்த்து பயமா?''

''இல்லை மன்னா... இளவரசியைப் பார்த்து...''

– எஸ். மோகன்



''என்னதான் நீங்க சுப்பர் மார்க்கெட் வியாபாரியா இருந்தாலும் பெண் பார்க்கப் போகும்போது பையன் கழுத்தில் M.R.P 50000யிரம்னு எழுதி மாட்டிக்கிட்டுப் போறது கொஞ்சமும் நல்லாயில்லைங்க...!''

- சாயம் வெ. ராஜாராமன்



"வீரப்பன்கிட்ட இருந்து வந்த புது கேசட்டுல என்ன செய்தியாம்?"

''தீபாவளியன்று புது டிரெஸ், கங்கா ஸ்நானத்துக்கு எண்ணெய், பட்டாசு எல்லாம் தூதர்கிட்ட கொடுத்து அனுப்பணுமாம்!"

- வி. சகிதா முருகன்

துணிகளை இவர்கள்தான் விற்கிறார்கள்.

**எ**ம்.சி சாலையில் மற்றொரு முக்கிய மொத்த விற்பனையாளர் டி.வி. ராஜேந்திரன்.

''நாங்கள் மக்களுக்குத் துணி வியாபாரம் மட்டும் செய்யவில்லை. பலருக்குச் சுய வேலை வாய்ப்பும் உருவாக்கிக் கொடுக்கிறோம்'' என்கிறார். இவர் சூரத்தில் கொள்முதல் செய்யும்போது நூற்று இருபது ரூபாய் ஆகும் சேலை இவர்களால் நூற்று முப்பது ரூபாய்க்கு மட்டுமே விற்கப்படுகிறது. ஆயிரம் ரூபாய் முதலீட்டில் துணி வியாபாரத்தைத் துவங்கிய குரோம்பேட்டை பெண்மணி ஒருவர், இன்று இவரிடம் ஐந்து லட்சம் ரூபாய்க்குத் துணி வாங்கி, தவணை முறையில் வியாபாரம் செய்கிறார்! நூற்று முப்பது ரூபாய்க்கு வாங்கப்படும் சேலை, ஐந்து மாதத் தவணை முறையில் சுமார் இருநூற்று முப்பது ரூபாய் முதல் இருநூற்று ஐம்பது ரூபாய் வரை விற்கப்படுகிறது. தமிழகம் முழுவதும் இது போன்ற சுய வேலை வாய்ப்பில் ஈடுபட்டிருக்கும் இருநூறுக்கும் மேற்பட்டவர்கள், ராஜேந்திரனிடம் பிஸினஸ் செய்து வருகிறார்கள். இவரிடம் உள்ள சிறப்பு, விற்பனைக்காக வாங்கிச் செல்லப்படும் சரக்குகள் வியாபாரிகளிடம் தேங்கிப் போனாலும், அதை மாற்றிக் கொண்டு தேவையான வேறு ரகங்களைக் கொடுப்பது தான்.

''எம்.சி. சாலை என்பது, ஏழை நடுத்தர மக்களுக்கு மட்டுமல்ல; சிறு துணி வியாபாரிகளின் சொர்க்கமும் இதுதான். அந்த வகையில் இந்தப் பகுதியில் உள்ள துணிக் கடைகளுக்கு என்றென்றும் பிஸினஸ் இருந்து கொண்டேயிருக்கும் என்பதில் சந்தேகமில்லை!'' என்கிறார் ராஜேந்திரன்.

– ஸ்ரீநிவாசன்

படங்கள்: ராஜன்

# ஆடைச் சிறப்பிதழ்

* பத்மா

'தீபாவளி மூடு' வந்து ஏற்கெனவே பட்டு ஆசையில் பரபரவென்று இருக்கும் பெண்களிடம், ஒரு புகைப்படத்தைக் காட்டி, சின்னப் பொறி ஒன்றைப் பற்ற வைத்தோம்.

"தீபாவளி லேட்டஸ்டாக நல்லி சில்க்ஸில் வந்திருக்கிற லட்ச ரூபாய் புடைவை இது! இதைப் பற்றி உங்க அபிப்ராயம் என்னவோ?" என்று கேட்டதுமே பூச்சட்டியும் மத்தாப்பும் முகத்தில் அப்பட்டமாய்ப் பூத்தது.

# லட்ச ரூபாய் அழகி!



* சுகுணா

**சுகுணா :** ரொம்ப அழகா இருக்கு. வேலைப்பாடு அப்படியே கண்ணைப் பறிக்குது. காலம் இருக்கிற இருப்புலே வெள்ளி ஜரிகை போட்ட புடைவையையே, அசந்தா, முந்தானையை மட்டும் வெட்டிக் கிட்டுப் போயிடறாங்க. லட்ச ரூபாய் புடைவைன்னா, ஆளையே கடத்தக்கிட்டுப் போயிடுவாங்க. அப்புறம் பாதுகாப்புப் படையோடதான் வெளியே போகணும். அழகான ரிஸ்க்!



* சங்கீதா



**பத்மா ரங்கராஜன் :** சுத்த வேஸ்ட்! பட்டிலும் ஜரிகையிலும் இவ்வளவு பணம் கொட்டற மாதிரியா நம்ப நாட்டு பொருளாதாரம் இருக்கு? ஒரு லட்ச ரூபாய்க்குப் புடைவை வாங்கறதெல்லாம் வீண் பந்தா! அதுக்கு ஐயாயிரம் விலையில், இருபது புடைவை வாங்கி, வாழ்நாள் பூரா அழகா உடுத்திக்கலாம்!

**சங்கீதா :** ரொம்ப பிரமாதமான கலைத்திறன். பார்டரும், உடல்நிறமும் எவ்வளவு அற்புதமா இழைஞ்சிருக்கு! 'ஐஸ்வர்யா', 'அழகி' அது இதுனு நீங்க பேர் சொன்னாலும், எனக்கென்னவோ, கண்ணன் வரவுக்காக, காதலுடன் காத்திருக்கும் ராதை போலத்தான் தெரிகிறது. பல லட்சம் கொடுத்து சொகுசு கார் வாங்கறதில்லையா? அது மாதிரி இதுவும் ஓர் அந்தஸ்து அடையாளம்! கூந்தலிருக்கிற சீமாட்டி அள்ளி முடியட்டுமே!



* மீரா

**மீரா :** பத்தாயிரம் ரூபாய் கொடுத்து வாங்குற பட்டுப் புடைவையே, உடுத்த சந்தர்ப்பம் வராமல், பீரோவில் தூங்குது. அழகி ஐஸ்வர்யா இப்போ பாப்புலரா இருக்காங்க. இன்னும் இருபத்தைந்து வருஷம் கழிச்சு, புடைவை அப்படியே



இருக்கும். அவங்களுக்கு மார்கெட் இருக்காது. அப்ப புடைவைக்கும் மவுசு போயிடுமோ என்னவோ? சினிமா நடிகைகளும், பெரிய வீட்டுப் பெண்களும் கட்டலாம்.

"ஒரு லட்ச ரூபாய் புடைவைன்னு நீங்க குறிப்பிட்டிருந்தாலும் இந்த 'அழகி' புடைவை, ரூபாய் ஆறாயிரத்திலேயிருந்து தரத்துக்கேற்ப கிடைக்குது. அதிக பட்ச விலை ஒரு லட்சம். எங்களுடைய காஞ்சிபுரம் டிஸைனர் வரதாஷா இந்த டிஸைனைத் தயாரித்து வந்து காட்டினார். புதுமையும், பாரம்பரியமும் இணைந்த கலைநேர்த்தி என்னை சட்டென்று கவர்ந்துவிட்டது. புடைவையில் நெய்யப்பட்ட அந்த முகம், ஐஸ்வர்யா ஜாடையில் இருப்பதாகப்படவே, 'அழகி' என்று பெயர் சூட்டினோம். டிஸைன் பிடிச்சவங்க, ஆறாயிரம் ரூபாய் கொடுத்து புடைவை வாங்கறாங்க. உயர் தரம் பார்க்கிறவங்க, லட்ச ரூபாயைப் பற்றிக் கவலைப்படறதேயில்லை" என்றார் நல்லி குப்புசாமி.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Pvt. Ltd.
Editorial Team : C. Egnath Raj, Anuradha Sekhar, C.Jesudoss. Layouts : S.Stephen, P.R. Rajan.
Editor : Seetha Ravi.
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Half Yearly Subscription : India : Rs. 165/-
Overseas (Air Mail) Annual : 62 U.S. Dollars, Srilanka Rs.2000/-

சுப முகூர்த்த
காலங்களை!
சாரதாஸ்
பட்டு
சேலைகளுடன்
கொண்டாடுங்கள்!



தீபாவளி
வாழ்த்துகள்

# சாரதா'ஸ்

முகூர்த்தப்பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்

**45, என்.எஸ்.பி. ரோடு, திருச்சி – 620 002.. போன் : 702077**

**தன் பில்டிங் 827, மவுண்ட் ரோடு, சென்னை–600 002. போன் : 852117 7,8520227**

சாரதாஸ் நம் அலங்கார ஆதாரம்

# கல்கி

3.11.2002
தீபாவளி
சிறப்பிதழுடன்
இணைப்பு



‘மெனுராணி’
செல்லம் வழங்கும்



# திடீர் சுவை



நளபாக நாயகி, முப்பத்து மூன்று வருட 'குக்கரி' அனுபவம் என்றெல்லாம் ஒரு முழத்துக்கு நீட்டி எழுதவே தேவையில்லை. 'மெனு ராணி' செல்லம் என்று சொன்னாலே போதும்.

'கல்கி' தீபாவளி சிறப்பிதழின் இலவச இணைப்புக்காக, நான்கு நிமிடங்களுக்குள் தயாரித்து அசத்தும் விசேஷ சமையல் குறிப்புகள் தந்திருக்கிறார்.

உங்கள் கை வண்ணத்தைச் சுவைக்க, 'நான் முந்தி, நீ முந்தி' என்று முட்டி மோதும் கூட்டத்தைச் சமாளிப்பது இனி உங்கள் பாடு...

என்ன, தீபாவளி விருந்துக்கு வரலாமா?

## ஆஸ்திரேலிய சீஸ் புட்டிங்

**என்னென்ன தேவை?**

*க்ரீம் - 1/2 கிண்ணம்*

க்ரீம் சீஸ் - 1/2 கிண்ணம்

சர்க்கரை - 2 கிண்ணம்

வெனிலா எஸென்ஸ் - சில துளிகள்

ஜெலடின் - 1 டீஸ்பூன்

ஜெலடின் கரைக்க - 1/4 தம்ளர் தண்ணீர்

விதையில்லாத திராட்சைப் பழம் - கால் கிலோ



எப்படித் தயாரிப்பது?

க்ரீம் சீஸ், சர்க்கரை, சேர்த்து நன்றாக அடிக்கவும். நுரைத்து வெண்ணெய் போல் வரும்போது. எஸென்ஸ் கலந்து அடிக்கவும். பிறகு க்ரீம் அல்லது பாலேடு சேர்த்துக் கலக்கவும். ஜெலடினை, சிறிதளவு வெந்நீரில் கரைத்து, துளித்துளியாக அடித்த க்ரீம் சீஸ் கலவையில் கலக்கவும். இறுதியில் திராட்சைப் பழங்கள் கலந்து பீங்கான் அல்லது கண்ணாடிப் பாத்திரத்தில் கொட்டி, ஃபிரிஜ்ஜில் வைத்து, 'செட்' செய்யவும். ஜில்லென்று பரிமாறவும்.

திராட்சைக்குப் பதிலாக, மாம்பழம், பைனாப்பிள் கொண்டும் சுவையான ஆஸ்திரேலிய சீஸ் புட்டிங் தயாரிக்கலாம்.

# தௌஸண்ட் ஐலண்ட் சாலட்

**என்னென்ன தேவை?**

குளிர்ந்த பால் - அரைக் கிண்ணம்
க்ரீம் - இரண்டு கிண்ணம்



வெள்ளை வினிகர் - 2 டீஸ்பூன்
உப்பு - தேவையான அளவு
தக்காளி சாஸ் - 1/4 கிண்ணம்
சில்லி சாஸ் - 2 டீஸ்பூன்
மிளகுத் தூள் - 1 டீஸ்பூன்
கடுகுத் தூள் - 1 டீஸ்பூன்

**எப்படித் தயாரிப்பது?**

க்ரீமுடன் சிறிதளவு குளிர்ந்த பால், சேர்த்துக் கலக்கி, வினிகர், உப்பு, தக்காளி சாஸ், சில்லி சாஸ், மிளகுத் தூள், கடுகுத் தூள் சேர்த்துக் கலக்கவும். பால் சேர்க்காமல், வினிகர், உப்பு போன்றவற்றைச் சேர்த்தால், க்ரீம் கெட்டுவிடும்.

அதனால் முதலில் குளிர்ந்த பால் சேர்க்கவும்.

வெஜிடபிள் சாலட்டுக்கு, குடைமிளகாய், வெங்காயம், வெள்ளரிக்காய், வெங்காயத் தாள், காரெட் போன்ற காய்கறிகளை மெலிதாக நறுக்கிக் கொள்ளவும்.. ஐஸ் வாட்டரில் முக்கி எடுத்து, வடித்து சிறிது உப்பு சேர்த்து, பிசிறிக் கொள்ளவும், தயாராக வைத்துள்ள தௌஸண்ட் ஐலண்ட் கலவையில் சேர்த்து ஃபிரிஜ்ஜில் வைக்கவும். மிகுந்த சுவையுள்ள சாலட் தயார்.




இந்த வெஜிடபிள் க்ரீம் சாலட் முழு போஷாக்கான உணவு. ஃப்ரைட் ரைஸ், சப்பாத்தி, பூரி, கலந்த சாதம் போன்ற ஐட்டங்களுக்கு, தொட்டுச் சாப்பிட தோதாக இருக்கும். அல்லது 'அப்படியே சாப்பிடலாம்', ஹார்லிக்ஸ் விளம்பரம் போல!

## பாபடி சாட்

தீபாவளிக்கு அண்டை அயலாரும், உற்றார் உறவினர்களும் ஏதேதோ பலகாரங்கள் கொடுத்தனுப்புவார்கள். ஓமப்பொடி, மிக்ஸர், தட்டை, காராபூந்தி, காராசேவு, என பல தரப்பட்ட கார வகைகள் கலந்தடித்துப் போயிருக்கலாம். இதை எப்படித் தின்று தீர்ப்பது என்று யோசிக்க வேண்டாம். 'பாபடி சாட்' செய்து சாப்பிடுங்கள். ஒரு துளி வீணாகாது.



**என்னென்ன தேவை?**

மிச்சம் மீதியுள்ள கார வகைக் கலவை - 2 கிண்ணம்

தயிர் - 2 கிண்ணம்

வேகவைத்து, பொடியாக நறுக்கிய உருளைக்கிழங்கு - 1 கிண்ணம்

உப்பு - சிறிதளவு

சாட் மசாலா - 1 டீஸ்பூன்

சீரகப் பொடி - 1 டீஸ்பூன்

மிளகாய்த் தூள் - 1 டீஸ்பூன்

சில்லி சாஸ் (அ) புதினா சட்னி - 2 டீஸ்பூன்

**எப்படித் தயாரிப்பது?**

உருளைக் கிழங்கையும், தயிரையும் தவிர, மற்ற ஐட்டங்களையெல்லாம் கலந்து வைக்கவும். பரிமாறுவதற்கு முன் உருளைக் கிழங்கையும் தயிரையும் கலந்து பரிமாறவும். இன்னும் சுவை ஏற்ற விரும்புபவர்கள், பொடியாக நறுக்கிய வெங்காயம், ஃப்ரெஷ் கொத்தமல்லித் தழை சேர்க்கவும்.

உருளைக் கிழங்கையும் தயிரையும் சாப்பிடும் நேரத்தில் சேர்க்கவும். முன் கூட்டியே சேர்த்துவிட்டால், ஓமப்பொடி, மிக்ஸர் போன்றவை தயிரில் ஊறிப் போய்விடும். மொறு மொறுப்பான சுவை கிடைக்காது. 'கரம் குரும்' தானே இதனுடைய ஸ்பெஷாலிடி!



## பனீர் பான் கேக்

**என்னென்ன தேவை?**

**பான்கேக் தயாரிக்க :**

மைதா - 2 கிண்ணம்

பால் - 1/2 கப்

எண்ணெய் - 1 டீஸ்பூன்

உப்பு - தேவையான அளவு

தண்ணீர் - சுமார் 3 கிண்ணம்

**எப்படித் தயாரிப்பது?**




மேற்கண்ட சாமான்களை சேர்த்துக் கலந்து, தோசை மாவு போல கரைத்துக் கொள்ளவும்.

**ஸ்டஃபிங் செய்ய :**

துருவிய பனீர் - 2 கிண்ணம்

உப்பு - ருசிக்கு

மிளகுத் தூள் - 1 டீஸ்பூன்

துருவிய சீஸ் - 100 கிராம்

நறுக்கிய கொத்தமல்லி - 1/2 கிண்ணம்

நறுக்கிய வெங்காயம் - 1/2 கிண்ணம்

**எப்படித் தயாரிப்பது?**

ஒரு வாணலியில் ஒரு டீஸ்பூன் எண்ணெயில் மேற்கண்ட சாமான்களை வதக்கவும். சுமார் அரை நிமிடம் போதும். பனீர் மொறுமொறுவென்று ஆகக் கூடாது.

ஸ்டஃபிங் தயாரானதும், பான்கேக் தயாரிக்கப் போகலாம்.

அடுப்பில் தோசைக் கல்லை வைத்து, சூடேற்றி, மெல்லிய மைதா தோசைகளாக வார்த்துக் கொள்ளவும்.




ஒரு பக்கம் வெந்ததுமே, தணலை மிதமாக்கிக் கொண்டு, தயாராக வைத்துள்ள ஃபில்லிங்கை தூவி பரப்பவும். தக்காளி சாஸ், சில்லி சாஸ் மேலே ஊற்றி, துருவிய சீஸையும் போட்டு, சுருட்டி வைக்கவும்.

மைக்ரோவேவ் 'அவன்' இருப்பவர்கள், இதற்கு ஏற்ற பாத்திரத்தில் பான்கேக்குகளை வரிசையாக வைத்து, மேலே சீஸ் தூவி ஒரு நிமிடம் பேக் செய்யவும். 'அவன்' இல்லாதவர்கள், தோசைக் கல்லின் மேலே வரிசையாக அடுக்கி வைத்து, பொருத்தமான ஒரு மூடி போட்டு மூடவும். ஐந்து நிமிடம் கழித்து (தூவிய சீஸ் உருகியிருக்கும்) சூடாகப் பரிமாறவும்.

சத்தான, சுவைமிக்க டிபன். குழந்தைகள் விரும்பிச் சாப்பிடுவார்கள். பனீருடன் நறுக்கி வதக்கிய காளானையும் சேர்த்து ஸ்டஃப் செய்யலாம். காளான் புரதச் சத்து மிக்கது என்பதால், சுவைக்குச் சுவை. ஊட்டத்துக்கு ஊட்டம்!



## பிரெட் ரஸமலாய்

சமையல் கலையில் பால பாடம் மட்டுமே தெரிந்தவர்கள்கூட, சில நிமிடங்களில் பிரெட் ரஸமலாய் செய்து திடீர் விருந்தாளிகளை அசத்திவிடலாம்.

**என்னென்ன தேவை?**

பிரெட் துண்டுகள் - தேவையான அளவு
கன்டென்ஸ்ட் மில்க் - தேவையான அளவு
சர்க்கரை - 1/2 லிட்டர்
சுண்டிய பால் - 1/2 லிட்டர்

**எப்படித் தயாரிப்பது?**

விருப்பப்பட வடிவத்தில் அல்லது வட்ட வடிவத்தில் பிரெட் துண்டுகளை வெட்டவும். இரண்டு துண்டுகளுக்கு இடையே கன்டென்ஸ்ட் மில்க் வைத்து ஒட்டி, ஒரு தட்டில் வரிசையாக வைத்து, கொதித்து சுண்ட வைத்துக் காய்ச்சிய பாலில்

சர்க்கரை சேர்த்து, மேலே ஊற்றி ஊற வைத்து அலங்கரித்துப் பரிமாறவும்.

## பைனாப்பிள் மில்க் ஷேக்

'மில்க் ஷேக்' என்றாலே மிகவும் ஃப்ரெஷ்ஷாக தயாரிக்க வேண்டிய கூல் டிரிங் என்பதை மனத்தில் கொள்ளவும். மிக்ஸியில் அடித்து, நுரைத்து வரும்போது, உடனே உயரமான கண்ணாடித் தம்ளர்களில் இட்டு பரிமாறவும்.



**என்னென்ன தேவை?**

நறுக்கிய பைனாப்பிள் துண்டுகள் - 2 கிண்ணம்

ஐஸ் துண்டுகள் - 2 கிண்ணம்

பால் - 1/2 லிட்டர்

சர்க்கரை - 1 கப்

பைனாப்பிள் எஸென்ஸ் - சில துளிகள்

மஞ்சள் கலர் - நிறம் சேர்க்க

**எப்படித் தயாரிப்பது?**

மேற்சொன்ன எல்லாவற்றையும், சேர்த்து மிக்ஸியில் அடித்து, அழகான கண்ணாடித் தம்ளர்களில் விட்டுப் பரிமாறவும்.

முக்கியக் குறிப்பு : டின் பைனாப்பிள் உபயோகித்தாலும் ருசியாகத்தானிருக்கும். ஃப்ரெஷ் பைனாப்பிள் பழமானால் நறுக்கிய பின் வேக வைத்து, அந்தத் தண்ணீரைக் கொட்டிவிட்டு, சிறிதளவு சர்க்கரைத் தண்ணீரில் போட்டு, ஒரு நிமிடம் கொதித்த பிறகுதான் உபயோகிக்க வேண்டும். இல்லாவிட்டால் மில்க் ஷேக் மிகவும் கசப்பாகிவிடும்.

## வாழைப்பழ மில்க் ஷேக்




**என்னென்ன தேவை?**

வாழைப்பழம் - 6

பால் - 1/2 லிட்டர்

சர்க்கரை - 2 கிண்ணம்

ஐஸ் துண்டுகள் - 2 கிண்ணம்

வெனிலா எஸென்ஸ் - 1 டீஸ்பூன்

**எப்படித் தயாரிப்பது?**

பைனாபிள் மில்க் ஷேக் போலவே, மேற்கண்ட பொருட்களையெல்லாம் மிக்ஸியிலிட்டு, நுரைக்க அடித்துப் பரிமாறவும்.

ரஸ்தாளி வாழைப்பழம், மலைப்பழம், புள்ளி பச்சை வாழை போன்ற பழங்கள்

மிகவும் ருசியாக இருக்கும்.

சீதாப்பழம், சப்போட்டா, ஆப்பிள் போன்ற பழங்களில் தயாரிக்கப்படும் மில்க் ஷேக்கும் மிகவும் சுவையாக இருக்கும். ஒரு கரண்டி வெனிலா ஐஸ்க்ரீம் சேர்த்து, அடித்தால், 'ஆஹா அபாரம்'! என்று சப்புக் கொட்ட வைக்கும்.

## டேனிஷ் புட்டிங்

திடீர் விருந்தாளிகளா? குழந்தைகள் பிறந்த நாள் போன்ற விசேஷ விருந்தா? டேனிஷ் புட்டிங் செய்து அசத்தலாமே!

**என்னென்ன தேவை?**

பால் பிஸ்கெட்டு - 3 பாக்கெட்
(க்ளுகோஸ், பிக்கீஸ் போன்ற ஏதாவது)
பொடித்த சர்க்கரை - 3 கப்
கோக்கோ - 6 டீஸ்பூன்
ஃப்ரெஷ் க்ரீம் - 2 தேக்கரண்டி
வெண்ணெய் - 100 கிராம்
வெனிலா எஸென்ஸ் - 1 டீஸ்பூன்



**எப்படித் தயாரிப்பது?**

முதலில் சாக்லேட் சாஸ் செய்யவும். அடுப்பில்

ஒரு கனமான பாத்திரத்தை வைத்து, நிதானத் தீயில் வெண்ணையை உருக்கவும். தயாராக வைத்துள்ள சர்க்கரையைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்த்து, கைவிடாமல் கலக்கவும். சுருள வந்தவுடன் கோகோ சேர்த்து, அடுப்பிலிருந்து கீழே இறக்கி, க்ரீம் அல்லது பால் சேர்த்து அடித்தால் சாக்லேட் சாஸ் ரெடி!




அடுத்து, பிஸ்கெட்டுகளை ஒவ்வொன்றாக சிறிதளவு கோகோ சேர்த்த வெந்நீரில் முக்கி, ஒரு புட்டிங் கிண்ணத்தில் அடுக்கவும். அதன்மேலே, தயாராக வைத்துள்ள, சாக்லேட் சாஸை பரப்பவும். மீண்டும் ஒருமுறை, அதன் மேல் பிஸ்கெட்டுகளை வைக்கவும். இப்படி, இரண்டு அல்லது மூன்று முறை செய்த பின், கடைசியாக சாக்லேட் சாஸை மேலே பரப்பி, செர்ரி கொண்டு அலங்கரிக்கவும். ஃபிரிஜ்ஜில் செட் செய்யவும்.

பரிமாறும்போது, துண்டு துண்டாக நறுக்கிக் கொள்ளலாம்.

## ஹாட் அண்ட் சார் சூப்

புளிப்பும் காரமும் சேர்ந்த இந்த சூப், சைனீஸ் ஹோட்டல்களில் பிரசித்தம். ரூபாய் அறுபது வரை விற்கப்படும் இந்த சூப்பை, சட்டென்று சில நிமிடங்களில் செய்து விடலாம்.

**என்னென்ன தேவை?**

காய்கறிகள் வேக வைத்த நீர் - 2 லிட்டர்

(இதற்கு 'ஸ்டாக்' என்று சொல்வார்கள். நிறைய தண்ணீர்விட்டு, கோஸ், கேரட், பீன்ஸ் முதலிய காய்கறிகளைத் துருவி, வேகவிட்டு எடுத்துக் கொள்ளவும். காய்கறிகளை, கூட்டுக்கோ, கட்லெட்டுக்கோ பயன்படுத்திக் கொள்ளுங்கள். காய்கறி வெந்த நீர் மட்டும் போதும்.)

**மற்ற பொருட்கள் :**

சோயா சாஸ் - 1 கப்

வினிகர் - 1 கப்

சில்லி சாஸ் - 1/4 கப்

மிளகுத் தூள் - 1 டீஸ்பூன்

உப்பு - தேவையான அளவு

இஞ்சி, பூண்டு விழுது - சிறிது

வெண்ணெய் - தேவையான அளவு

நறுக்கிய வெங்காயத் தாள் - 1 கிண்ணம்



**எப்படித் தயாரிப்பது?**

வெண்ணெயை உருக்கி, இஞ்சி, பூண்டு விழுது சேர்த்து, வாசனை வரும்வரை வதக்கவும். வெங்காயத் தாள் சேர்த்து, சிறிது வதக்கியவுடன் தயாராக வைத்துள்ள காய்கறி நீரைச் சேர்க்கவும். அதில், உப்பு, வினிகர், சில்லி சாஸ், சோயா சாஸ் சேர்த்து மிளகுத் தூள் தூவி, ஒரு கொதி வந்ததும் இறக்கி, சூடாக மஷ்ரூம் ஃப்ரையுடன் பரிமாறுங்கள். மழைக் காலத்துக்கு ஏற்ற சூடான, சுவையான சூப்...



## சில்லி சாஸ்

ஒட்டக விலை, காண்டாமிருகம் விலை விற்கும் (எப்போதும் யானை விலை, குதிரை விலை என்றே சொல்கிறோமே. கொஞ்சம் வித்தியாசமாக இருக்கட்டுமே என்றுதான்...) இந்த சில்லி சாஸ் இல்லாவிட்டால், பலருக்கு டிபனே உள்ளே போகாது. கடையில் வாங்கி, கட்டுப்படியாகாதவர்கள் அருமையான சில்லி சாஸை வீட்டிலேயே தயாரிக்கலாம்.

**என்னென்ன தேவை?**

பச்சை மிளகாய் - 1/4 கிலோ

காய்ந்த மிளகாய் - 1 பிடி

உப்பு - தேவையான அளவு

இஞ்சி - பெரிய துண்டு

பூண்டு - 10 பல்

**எப்படித் தயாரிப்பது?**




மேற்கண்ட சாமான்களை எல்லாம் மிக்ஸியில் போட்டு, மசிய அரைக்கவும். 'ஜூஸ் எக்ஸ்ட்ராக்டர்' என்று சொல்லப்படும் சிறிய கருவியில் (எல்லா பாத்திரக் கடைகளிலும் கிடைக்கும்) போட்டு, இரண்டு தடவை சுற்றினால், சக்கை, தோல் விதை எல்லாமே மேலே தங்கி விட, சுத்தமான சாறு, தனியாக இறங்கி விடும்.

கை வசம் இந்தக் கருவி இல்லாதவர்கள் அரைத்த விழுதை, ஒரு நைலான் வடிகட்டியில் போட்டு, தோல், விதை, சக்கையை வடிகட்டி நீக்கவும்.

தனியே எடுக்கப்பட்ட விழுதுடன், ஒரு கப் வெள்ளை வினிகர், ஒரு கப் சோயா

சாஸ் கலந்து நன்றாகக் கலக்கவும். சுவையான 'சில்லி சாஸ்' தயார்.

சுத்தமான, காய்ந்த பாட்டிலில் போட்டு வைத்தால், சுமார் மூன்று மாதம் வரை கூட கெடாமல் இருக்கும். ஃபிரிஜ்ஜில் வைக்கத் தேவையில்லை.

## கோயா மட்டர்

தீபாவளி போன்ற பண்டிகை நாட்களில், ஸ்வீட் செய்ய வாங்கி வைத்திருக்கும் கோவா மிஞ்சி விட்டால், வீணாக்காமல் இந்த ஸப்ஜி தயார் செய்யலாம். அல்லது, வீட்டிலேயே ஒரு பாக்கெட் பாலை, இளந்தீயில் வைத்து, கெட்டியாகத் தயாரிக்கலாம்.



**என்னென்ன தேவை**

சர்க்கரை சேர்க்காத கோவா - 2 கிண்ணம்

காய்ச்சிய பால் - 2 கிண்ணம்

வெந்த பட்டாணி - நூறு கிராம்

வெண்ணெய் - சிறிது

சீரகம் - 2 தேக்கரண்டி

உப்பு - தேவையான அளவு

மஞ்சள் பொடி - 1 தேக்கரண்டி
தனியா பொடி - 2 தேக்கரண்டி
சாட் மசாலா - 1 தேக்கரண்டி
கரம் மசாலா - 2 தேக்கரண்டி
பொடியாக நறுக்கிய கொத்தமல்லி - 1 கிண்ணம்
பொடியாக நறுக்கிய வெங்காயம் - 2 கிண்ணம்
நறுக்கிய பச்சைமிளகாய் - சிறிது

எப்படித் தயாரிப்பது?

வாணலியில், எண்ணெய் அல்லது வெண்ணெய் காய வைத்து, சீரகம் தாளித்த பின், நறுக்கிய பச்சை மிளகாய், வெங்காயம் இரண்டையும் சேர்த்து வதக்கவும்.

தனியா தூள், மஞ்சள் பொடி, சாட் மசாலா, கரம் மசாலா சேர்த்து, ஒரு நிமிடம் வதக்கவும்.

வேக வைத்த பட்டாணியில் கொதிக்கும் நீர் விட்டு, உப்பு போட்டு,



சிறிது கொதிக்கவிடவும்.

கடைசியாக, பாலும் கோவாவும் சேர்த்து, கைவிடாமல் கிளறி, கொதிக்க விடவும். கீழே இறக்கி, கொத்தமல்லித் தழை தூவி அலங்கரிக்கவும், சுவையான கோயா மட்டர் தயார். சப்பாத்தி, நான், பரோட்டா போன்றவற்றுக்குத் தொட்டுக் கொண்டால், இன்னும் இரண்டு உருப்படி சேர்ந்து உள்ளே போகும்.

## கேரட் பேரீச்சம்பழ சீஸ் சாலட்



**என்னென்ன தேவை?**

*க்ரீம் சீஸ் - 2 கிண்ணம்*

*உப்பு - தேவையான அளவு*

*மிளகுத் தூள் - 1 டீஸ்பூன்*

*துருவிய எலுமிச்சைத் தோல் - 1 சிட்டிகை*

*ஆரஞ்சு சுளைகள் - 2 கிண்ணம்*

*பேரீச்சம்பழம் - 2 கிண்ணம்*

*துருவிய கேரட் - 1 கிண்ணம்*

**எப்படித் தயாரிப்பது?**

முதலில் க்ரீம் சீஸ் தயாரித்துக்

கொள்ள வேண்டும். அதிக புளிப்பில்லாத கெட்டித் தயிரை, ஒரு மெல்லிய துணியில் கட்டி, தொங்க விடவும். நீர் நன்றாக வடிந்ததும், துணியில் க்ரீம் மட்டும் தங்கியிருக்கும். அதை மத்தால் கடைந்தால் க்ரீம் சீஸாகிவிடும். இதை ஃபிரிஜ்ஜில் வைத்து, தேவையான போது பயன்படுத்திக் கொள்ளலாம். சாலட் வகைகளுக்கு, சாதா தயிரைவிட, க்ரீம் சீஸ் சுவையாக இருக்கும். சுமார் இரண்டு வாரம் கெடாமல் இருக்கும்.



பேரீச்சம்பழத்தை சுத்தம் செய்து மெல்லிய துண்டுகளாக நறுக்கவும்.

ஓர் அழகான பாத்திரத்தில், க்ரீம் சீஸ், உப்பு, மிளகுத்தூள், எலுமிச்சைத் தோல் முதலியவற்றை ஒரு நிமிடம் அடித்துக் கலக்கவும்.

பேரீச்சம்பழம், காரட் துருவல் கலந்து இன்னொரு முறை அடிக்கவும். இறுதியாக ஆரஞ்சுப் பழத்தைக் கலந்து ஃபிரிஜ்ஜில் வைத்துப் பரிமாறவும். இது புலாவ், கீ ரைஸ் முதலியவற்றுக்குத் தொட்டுக் கொள்ள மிகவும் சுவையாக

இருக்கும்.

குழந்தைகள் அப்படியே சாப்பிடலாம். சத்தான முழு உணவு.

## காக்ரா சாட்



'காக்ராக்கள்' ஸ்வீட் கடைகளில் கிடைக்கின்றன. சிறிய நகரங்களில் வசிப்பவர்கள் வீட்டிலேயே காக்ராக்கள் தயாரிக்கலாம்.

**காக்ரா செய்ய :**

வீட்டில் சப்பாத்தி மீந்து விட்டால், கவலைப்பட வேண்டாம். அப்படியே 'காக்ரா'வாக்கி விடலாம். தோசைக்கல்லின் மேல், இலேசான தீயில், சப்பாத்தியைப் போடவும். மெல்லிய துணியை வைத்து, ஒற்றி, ஒற்றி எடுத்து திருப்பி போட்டு வைக்கவும். 'மொறு மொறு' என்று தகடு போல ஆகிவிடும். இவை நீண்ட நாட்கள் வைத்திருந்தாலும்

கெடாது. தூர பயணத்தின் போதும், விருந்தினர்களின் திடீர் வருகையின் போதும், கை கொடுக்கும் சமய சஞ்சீவி. காய்ந்த சப்பாத்தியை வைத்து 'சாட்' செய்வது சுலபம். ருசிப்பது அதைவிட சுலபமோ சுலபம்.

தக்காளி மசாலா தயாரிக்க வேண்டும் என்றால் கீழ்கண்ட பொருட்கள் தேவை.

பொடியாக நறுக்கிய வெங்காயம் - 1 கிண்ணம்

பொடியாக நறுக்கிய தக்காளி - 1 கிண்ணம்

பூண்டு (விருப்பப்பட்டால்) - சிறிது

துருவிய மக்காச் சோளம் - 1 கிண்ணம்

மிளகாய்த் தூள் - தேவைக்கு

உப்பு - ருசிக்கு



**எப்படித் தயாரிப்பது ?**

பச்சை பட்டாணி வீட்டிலிருந்தால் வேக வைத்து, மேலே சொன்ன பொருட்களை ஒவ்வொன்றாகச் சேர்த்து இரண்டு தேக்கரண்டி எண்ணெயில் வதக்கவும் பர்த்டே பார்ட்டி, அல்லது நிறைய விருந்தினர்கள் இருந்தால், அரை கிண்ணம் தக்காளி சாஸையும் சேர்த்தால், இன்னும் கண்டு வரும்.

**பரிமாறும் முறை :**

அகலமான தட்டு ஒன்றில, காக்ராக்களை, பெரியதாக உடைத்துப் போடவும். அதன் மேல் தக்காளி மசாலா சிறிதளவு போடவும். அதன்மேல் புதினா சட்னி,

கொத்தமல்லி, நறுக்கிய வெங்காயம் போட்டு மொறுமொறுவென்று கொடுக்கவும். மீந்த சப்பாத்தியில் தயாரித்த உணவு என்று நீங்களே சொன்னாலும் நம்பமாட்டார்கள்.

## திடீர் ஸ்வீட்

**என்னென்ன தேவை ?**

ப்ரெட் துண்டுகள் - 8



பால் - 1 கிண்ணம்

கன்டென்ஸ்ட் மில்க் - 1 கிண்ணம்

சோள மாவு - 2 டீஸ்பூன்

முந்திரிப் பருப்பு, திராட்சை - அலங்கரிக்க

சர்க்கரைப் பாகு - 2 கப்

எண்ணெய் (அ) வனஸ்பதி - பொரித்தெடுக்க

**எப்படித் தயாரிப்பது?**

'திடீர் ஸ்வீட்' என்பதால் தனியாக சர்க்கரைப் பாகு தயாரிக்க

வேண்டாம். குலோப் ஜாமூன், ரசகுல்லா, ஜிலேபி செய்து மீந்து போன சர்க்கரைப் பாகு இருந்தாலே போதுமானது.

இல்லையென்றால், இரண்டுக்கு ஒன்று என்ற விகிதத்தில் சர்க்கரையும் தண்ணீரும் கலந்து ஒரு கொதி வந்ததும் இறக்கி வடிகட்டி தயாராக வைக்கவும். சர்க்கரைப் பாகு, பிசுக்குப் பதம் இருந்தால் போதுமானது.

பிரெட் துண்டுகளை, நீளவாட்டில் நறுக்கி, வனஸ்பதி அல்லது நெய்யில் பொன்னிறமாக, கரகரப்பாக வறுத்து, உடனேயே சர்க்கரைப்பாகில் மூக்கி, அகலமான தட்டில் அடுக்கி வைக்கவும்.

இப்போது, கன்டென்ஸ்ட் மில்க் உடன், பால், சிறிதளவு சோள மாவு கலந்து, கெட்டியாகக் கிளறி, அடுக்கி வைத்துள்ள பிரெட் ஸ்லைஸ் மேல் பரப்பி, முந்திரி திராட்சை கொண்டு அலங்கரிக்கவும்.

'திடீர் ஸ்வீட்' என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கும். இந்த ஸ்வீட் 'ஷாஹி துக்கடா' என்று வடநாட்டில் பிரபலம்.

## சட்பட் தஹிபடா

இதுவும் பிரெட் ஸ்லைஸ் கொண்டு தயாரிக்கப்படும் டிபன் வகைதான். சட்புட்டென்று சமைக்கலாம். ஆனால் சுவை, அள்ளிக் கொண்டு போகும்!

**என்னென்ன தேவை ?**

ப்ரெட் ஸ்லைஸ் - 6

தயிர் - 2 கிண்ணம்



மீட்டா சட்னி - சிறிது

புதினா சட்னி - சிறிது

பூந்தி, ஓமப்பொடி - கைப்பிடியளவு

கொத்தமல்லி தழை - சிறிது

**எப்படித் தயாரிப்பது ?**

ப்ரெட் ஸ்லைஸை வட்டவட்டமாக நறுக்கவும். அவற்றின் நடுவே மீட்டா, புதினா சட்னிகளை, மாறி மாறித் தடவும். மூன்று மூன்று ஸ்லைஸ்களாக அடுக்கி, இலேசாக மேலே தண்ணீர் தெளிக்கவும்.

அதிக புளிப்பில்லாத கெட்டித் தயிரை, அடித்து, இலேசாக உப்பு கலந்து பிரெட் துண்டுகளின் மீது பரப்பவும்.

பரிமாறும்போது, பூந்தி, ஓமப் பொடி, கொத்தமல்லி தழை கொண்டு

அலங்கரித்துப் பரிமாறவும்.

எண்ணெய், கொலஸ்ட்ரால் என்று தயிர் வடை சாப்பிட பயப்படுபவர்கள் 'சட்பட் தஹிடா'வை, தயாரித்துச் சாப்பிடலாம். அவசரத்துக்கும் கை கொடுக்கும்.

## புதினா சட்னி

வீட்டில் எப்போதும் புதினா சட்னி தயாராக இருந்தால், டிபன் பற்றி அதிகம் அலட்டிக் கொள்ள வேண்டாம்.

**என்னென்ன தேவை?**

புதினா - 1 கட்டு
கொத்தமல்லி - 1 கட்டு
பச்சை மிளகாய் - 8
பூண்டு - சிறிது
உப்பு - ருசிக்கு
சீரகம் - 2 டீஸ்பூன்
எலுமிச்சை சாறு - சிறிது

**எப்படித் தயாரிப்பது?**



கொத்தமல்லி, புதினா இரண்டையும், சுத்தமாக ஆய்ந்து,

அலசி, நறுக்கிக் கொள்ளவும்.

புதினா, கொத்தமல்லியுடன், பச்சை மிளகாய், உப்பு, சீரகம், பூண்டு சேர்த்து அரைத்து, எலுமிச்சை சாறு சேர்த்து கலக்கவும். சுத்தமான கண்ணாடி பாட்டிலில் சேகரித்து வைத்து, ஃபிரிஜ்ஜில் வைக்கவும். நீண்ட நாள் கெடாது.

## காளான் ஃப்ரை ('தாய்' ஸ்டைல்)

மழைக்காலம் வந்தாலே, கொரிப்பதற்கு, ஏதேனும் சூடாக, சுவையாகத் தேடுகிறார்கள். அந்த மாதிரியான சமயத்தில், செய்ய சுவையான, சத்தான டிபன். கடலைமாவு என்றால் ஒரு சிலருக்கு ஒத்துக் கொள்ளாது. 'வாய்வு' என்று சொல்லி ஓடுவார்கள். அத்தகையவர்களுக்கு இதைச் செய்து கொடுக்கலாம். நோ ப்ராப்ளம்!




**என்னென்ன தேவை ?**

மைதா - 1/4 கிண்ணம்
சோள மாவு - 1/4 கிண்ணம்
மிளகுத் தூள் - 1 டீஸ்பூன்
உப்பு - ருசிக்கு
வெள்ளை எள் - 1/4 கிண்ணம்
பட்டன் காளான்கள் - 3 கப்

எண்ணெய் - பொரித்தெடுக்க

## எப்படித் தயாரிப்பது?

காளான்களை, அலம்பி, துடைத்து தயாராக வைக்கவும். பட்டன் காளான்களாக இருந்தால் முழுசாகவே போடலாம். நறுக்கத் தேவையில்லை.

மைதா, சோள மாவு, உப்பு, மிளகுத் தூள் முதலியவற்றை எள்ளுடன் கலந்து தண்ணீர் சேர்த்து கெட்டியாகப் பிசையவும். காளான்களை, ஒவ்வொன்றாக எடுத்து, முக்கிப் போட்டு, சூடான எண்ணெயில் பொன்னிறமாகப் பொரித்தெடுக்கவும்.



தக்காளி சாஸ், சில்லி சாஸ் துணைக்கு இருக்க காளான் ப்ரை உங்களது ஏகோபித்த பாராட்டு பெறும் மாலைச் சிற்றுண்டியாக மாறிவிடும்.

# மஷ்ரூம் ஃபரை
# (சைனிஸ் ஸ்டைல்)

இதுவும் காளான் வறுவல்தான். ஆனால் சைனா ஸ்டைல்!

**என்னென்ன தேவை?**

காளான் - ஒரு பாக்கெட்

உப்பு - ருசிக்கு




சோயா சாஸ் - 1/2 கப்

சில்லி சாஸ் - 1/2 கப்

வினிகர் - 1/2 கப்

சிவப்பு நிறம் - விருப்பப்பட்டால்

நறுக்கிய வெங்காயத் தாள் 1 கிண்ணம்

**எப்படித் தயாரிப்பது?**

மேற்கண்ட எல்லா பொருட்களையும் சேர்த்து, காளானுடன் நன்றாகக் கலக்கவும்.

அரை கப் சோளமாவு அல்லது மைதாவைக் கலந்து, பிசறி, அதில் சிறிதளவு எண்ணெய் ஊற்றி நன்றாக வதக்கவும்.

சிறு தீயில் மொறு மொறு என்று வதக்கினாலே போதுமானது. மூழ்கவிட்டு பொரிக்கத் தேவையில்லை.

## திடீர் தக்காளி சூப்

**என்னென்ன தேவை ?**

பழுத்த தக்காளி - 4
ரசப்பொடி - 1 டீ ஸ்பூன்
உப்பு - ருசிக்கு
வெல்லம் - சிறிது

**எப்படித் தயாரிப்பது?**

சிவந்த தக்காளிப் பழத்தை பொடிப் பொடியாக நறுக்கி, கைகளாலேயே மசித்துக் கொள்ளவும். உப்பு, ரசப்பொடி, வெல்லம் கலக்கவும். இதை அப்படியே சூப் போல சாப்பிடலாம். அடுப்பின்மீது வைக்கத் தேவையில்லை. ஜுரம் வந்த வாய்க்கு நன்றாக இருக்கும்.

தொகுப்பு : **அனுராதாசேகர்**
படங்கள் : **யோகா**



"வேட்டையாட நேரமாச்சு; சாப்பாடு ரெடியா?"

